ஸ்ரீமதேராமாநுஜாய நமஃ.

## திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# திருக்குறுந்தாண்டகம்.

---

இந்த க்ரந்தம்

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த

வ்யாக்யாநத்துடனும்,

அப்பு அரும்பதத்துடனும்,

மாடபூசி - ராமாநுஜாசார்யராலெழுதப்பட்ட

உரையுடனும்,

தர்க்க தீர்த்தரான

சிங்கப்பெருமாள்கோவில் - மாடபூசி-ராமாநுஜாசார்யராலும்,

ஸி. முத்துக்ருஷ்ணநாயுடு அவர்களாலும்,

நாநாதேசாநீத அநேக ஸ்ரீகோசங்களின் ஸஹாயத்தினால்

பரிசோதிப்பிக்கப்பட்டு,

ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையாரால்,

ப்ராங்குச திருவவதாராதி ௫௦௦௯-வது ஸம்வத்ஸரமான

விஶ்வாவஸு ஸம்வத்ஸரத்தில்,

சென்னப்பட்டணம்:

பிரஸிடென்ஸி அச்சுக்கூடத்தில்,

அச்சிடப்பட்டது.

---

விஜயதேதராம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (லிமிடெட்.)

# திருக்குறுந்தாண்டகம்.

இந்தக்ரந்தம் நாலாயிர திவ்யப்ரபந்தத்தில் இரண்டாவது ஆயிரமான திருமொழியில்சேர்ந்த ப்ரபந்தம். இதையருளிச்செய்தவர் மயர்வற மதிநல மருளப்பெற்ற திருமங்கையாழ்வார். இவருடைய ப்ரபாவம் இச்சபையில் அச்சிட்ட திருவெழுகூற்றிருக்கையின் பீடிகையிலும், இதற்கு வ்யாக்யாநம் செய்தருளின பெரியவாச்சான்பிள்ளை ப்ரபாவம் இச்சபையிலச்சிட்ட தனிஶ்லோக பீடிகையிலும் விசதமாக எழுதப்பட்டிருக்கிறது.

இப்படிக்கு
சிங்கப்பெருமாள்கோவில்
மாடபூசி - ராமாநுஜாசார்யர்.

## இச்சபையில் தமிழ்லிபியில் அச்சிட்ட க்ரந்தங்கள்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தனிஶ்லோகம் ஸவ்யாக்யாநம், ப்ரதிபத தாத்பர்ய ஸஹிதம் | | | | 3 | 4 | 0 |
| பாரதாதி தனிஶ்லோகம் | ,, | ,, | | 0 | 5 | 0 |
| ராமசரமஶ்லோகம் | ,, | ,, | | 0 | 3 | 0 |
| துஷ்கரஶ்லோகடிப்பணி | ,, | ,, | | 0 | 5 | 0 |
| யதிதர்ம ஸமுச்சயம் | ,, | ,, | | 1 | 2 | 0 |
| முதல் திருவந்தாதி | ,, | அரும்பத ப்ரதிபத ஸஹிதம் | | 1 | 2 | 0 |
| இரண்டாம் திருவந்தாதி | ,, | ,, | ,, | 0 | 12 | 0 |
| மூன்றாம் திருவந்தாதி | ,, | ,, | ,, | 0 | 11 | 0 |
| நான்முகன் திருவந்தாதி | ,, | ,, | ,, | 0 | 14 | 0 |
| திருவிருத்தம் | ,, | அரும்பதப்ரதிபததாத்பர்யஸஹிதம் | | 3 | 12 | 0 |
| திருவாசிரியம் | ,, | ,, | ,, | 0 | 6 | 0 |
| பெரிய திருவந்தாதி | ,, | ,, | ப்ரதிபத ஸஹிதம் | 0 | 14 | 0 |
| திருவெழுகூற்றிருக்கை | ,, | ,, | ,, | 0 | 6 | 0 |
| சிறிய திருமடல் ,, | ,, | ,, | ,, | 0 | 9 | 0 |
| பெரிய திருமடல் | ,, | ,, | ,, | 0 | 10 | 0 |
| இராமாநுச நூற்றந்தாதி உரையுடன் | | ,, | ,, | 0 | 15 | 0 |
| திருக்குறுந்தாண்டகம் | | ,, | ,, | 0 | 5 | 0 |
| பராசரவிசிஷ்ட பரமதர்ம சாஸ்த்ரம் தாத்பர்ய ஸஹிதம் | | | | 0 | 14 | 0 |
| ஷண்மததர்சினி | | | | 0 | 3 | 0 |

இப்படிக்கு,
கராலபாடி - ஆழ்வாரய்ய,
கார்யதர்சி - தனாதிகாரி.









ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரியதிருமொழியின்

# த னி ய ன் க ள்.

(திருக்கோளூர்நம்பி அருளிச்செய்தது.)

మూలమ్.—కలయామి కలిధ్వంసం కవిం లోకదివాకరమ్।
యస్య గోభిః ప్రకాశాభి రావిద్యం నిహతం తమః।

மூலம்.—கலயாமிகலித்த்வம்ஸம் கவிம்லோகதிவாகரம்।
யஸ்யகோபிஃப்ரகாசாபி ராவித்யம்நிஹதம்தம:॥

பதவுரை.—யஸ்ய - யாதொருத்தருடைய, ப்ரகாசாபி: - விளங்காநின்றுள்ள, கோபி:-கிரணங் (உக்தி)களினாலே, அவித்யம்-அஜ்ஞாநப்ரயுக்தமான;

தம:-அந்தகாரமானது, நிஹதம் - போக்கப்பட்டதோ, (தம் - அப்படிப்பட்டவராய்,) கலித்த்வம்ஸம் - கலிதோஷத்தை நசிப்பிக்குமவராய், லோகதிவாகரம் - நாட்டாருக்கு ஸூர்யனான (அர்த்தப்ரகாசகரான), கவிம் - பரகாலகவியை, கலயாமி-த்யாநம் செய்கிறேன்.

## பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த வ்யாக்யாநம்.

அவதாரிகை.—(𑌕𑌲𑌯𑌾𑌮𑌿 𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌮𑍍 - கலயாமி கலித்த்வம்ஸம்) திருமொழிமுதலான திவ்யப்ரபந்தோபகாரத்துக்குத் திருமங்கையாழ்வாரைத் திருவடிதொழும்படி சொல்லுகிறது.

வ்யாக்யாநம்.—(𑌕𑌲𑌯𑌾𑌮𑌿 𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌮𑍍 - கலயாமி கலித்த்வம்ஸம்) "கலிகன்றி" என்று நிரூபகத்தையுடையரான பரகாலகவியை, கலயாமி - "ப்ரணமாமி" என்கிறது. (𑌲𑍋𑌕𑌦𑌿𑌵𑌾𑌕𑌰𑌮𑍍 - லோகதிவாகரம்) ஆதித்யன், பாஹ்யாந்தகாரத்தைப் போக்கும்; இவர், நாட்டார்க்கு பாஹ்யாப்யந்தராந்தகாரங்களிரண்டையும் போக்குவர். (𑌯𑌸𑍍𑌯 𑌗𑍋𑌭𑌿𑌃-யஸ்யகோபி:) யாதொருத்தருடைய, (க) "𑌯𑌦𑍍𑌗𑍋𑌸𑌹𑌸𑍍𑌰𑌮𑍍-யத்கோஸஹஸ்ரம்" என்கிற மறையாயிரங்களினாலே; அவைதான் (𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌭𑌿𑌃 - ப்ரகாசாபி:) என்று - (உ) * நடைவிளங்கு தமிழ்மாலையாய்(ங) * நெஞ்சுக்கிருள்கடிதீபமாயிருக்கும்; இப்படி ப்ரகாசகங்களான ஸ்ரீஸூக்திகளினாலே, (ச) * அறிவிலாமனிசருடைய, ஆவித்யதமஸ்ஸு நிஹதமாயிற்று என்பது யாதொன்று, அத்தாலே அவரை (கலயாமி) என்கிறது. ... ... ... ... ... ... *

(எம்பெருமானாருளிச்செய்தது.)

மூ.—வாழிபரகாலன் வாழிகலிகன்றி
வாழிகுறையலூர் வாழ்வேந்தன் - வாழியரோ
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள்மங்கையர்கோன்
தூயோன்சுடர்மானவேல்.

ப - உ.—பரகாலன் - சத்ருக்களுக்கு ம்ருத்யுவானவர், வாழி - வாழ்ந்தருளவேணும்; கலி - கலியினால் வரும்தோஷத்தை, கன்றி - போக்குமவர், வாழி—; குறையலூர் - திருக்குறையலூரில், வாழ் - நித்யவாஸம்பண்ணும், வேந்தன் - ராஜாவானவர், வாழி—; மாயோனை - ஆஸ்சர்ய குணசேஷ்டிதங்களையுடைய ஸர்வேஸ்வரன்பக்கல்,வாள்வலியால் - தன்வாளின்வலியைக் காட்டி, மந்திரம் - பெரியதிருமந்த்ரத்தை, கொள் - உபதேசிக்கப்பெற்றவராய், மங்கையர் - திருமங்கையிலுள்ளார்க்கு, கோன் - நிர்வாஹகராய்,

(க) சடகோபாஷ்டகம்-ச. (ங) திருமொழித்தனியன்.
(உ) பெருமாள்திரு-க-கக (ச) திருமாலை-கங.

தூயோன் - (உள்ளும் புறம்புமொக்க) சுத்தியையுடையரான ஆழ்வாருடைய, சுடர் - ஒளியையுடைத்தாய், மானம் - பெரியதான, வேல் - வேலானது, வாழி - வாழ்ந்திடுக. ... ... ... ... ... ... ... *

அவ.—(வாழிபரகாலன்) எம்பெருமானுக்குத்திருமதிள்போலே அரணாயிருப்பதான ஆறுப்ரபந்தங்கள் செய்தருளின ஆழ்வாருடைய திருநாமங்கள் பலவற்றையும் சொல்லி அவரை வாழ்த்துகிறது-இதில். (க)"ப்ரத்யக்ஷகுரவஸ்ஸ்துத்யா:- ப்ரத்யக்ஷகுரவஸ்ஸ்துத்யா:" என்னக்கடவதிறே. ஆழ்வார்கள் அர்ச்சாவதாரமாய் எப்போதும் எல்லார்க்கும் ப்ரத்யக்ஷராயிறே யிருப்பது.

வ்யா.—(வாழிபரகாலன்) பகவத் த்விட்டுக்களான ப்ரதிகூலர்க்குக் காலனானவர் வாழி. (வாழிகலிகன்றி) கலிதோஷநிவாரகர் வாழி. (குறையலூர் வாழ்வேந்தன் - வாழி) திருக்குறையலூரை அவதாரஸ்த்தலமாக வுடையராய், அதுவாழும்படிக்கு அத்தை நோக்குகிற ராஜாவென்னுதல்; அங்கேவாழுகிறவ ரென்னுதல். (மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன், தூயோன் சுடர்மானவேல் - வாழியரோ) என்று - ஆழ்வாரையும், அவர்திருக்கையில் வேலையும் ஒருகாலே ஆசாஸித்தபடி. (மாயோனை) (க) * அரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் மாயோனையிறே வாள்வலியால் மந்திரங் கொண்டது. (உ) * தென்னரங்கன்றன்னை வழிபறித்த வாளனிறே. (௩) * கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டவரிடத்திலேயிறே மந்திரப்பொருள் கைக்கொண்டது. § மந்திரத்தைப்பற்றியிறே மந்திரங்கொண்டது. (மங்கையர்கோன்) திருமங்கைமன்னனிறே. (தூயோன்) "தூய்மை" என்னும் பாஹ்யாப்யந்தரசுத்தியையுடையவர். (ச) "அங்கமலத்தடவயல்சூழாலிநாடனருள்மாரியரட்டமுக்கி யடையார்சீயம் கொங்குமலர்க்குழலியர்வேள் மங்கைவேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன்" என்று தாமே தந்திருநாமங்களைக் கூறினாரிறே. (சுடர்மானவேல்) தேஜோரூபமான, மானவேல்-பெரியவேல். திருமங்கைமன்னனெடுக்கும்படியான வேல், (வாழியரோ). இத்தால் - ஆழ்வாரோபாதி

---

(க)

(க) பெரு - திரு - ௩ - எ.

(உ) இயற்சாத்து.

(௩) நா - தி - ௧௧ - ௫.

§ மந்திரத்தை - வேதப்ரதிபாத்யனான ஸர்வேச்வரனை.

(ச) திருமொ - ௩ - ச - ௧0.

ஆயுதமும் ஆசாஸ்யமென்றபடி. (க) "நின்கையில்வேல்போற்றி" என்னக்கடவதிறே. இதுதான் (உ) * கொற்றவேலாகையாலே வெற்றிவேலா யிருக்கும்; அத்தாலே-இதின் விஜயத்தை வேண்டுகிறது.

(கூரத்தாழ்வானருளிச்செய்தது.)

மூ.—நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்கா நெடும் பிறவி
நஞ்சுக்கு நல்லவமுதம் தமிழ்நன்னூல்துறைகள்
அஞ்சுக் கிலக்கியம் ஆரணசாரம் பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி பரகாலன் பனுவல்களே.

ப - உ.—பரகாலன் - ப்ரதிபக்ஷத்துக்குக் காலனான ஆழ்வா ரருளிச்செய்த, பனுவல்கள் - பாட்டுக்களானவை, நெஞ்சுக்கு - மநஸ்ஸிலுண்டான, இருள் - அஜ்ஞாநத்தை, கடி - போக்கவல்ல, தீபம் - விளக்காயும், அடங்கா - ஒன்றாலும் அடங்காதே, நெடு - நெடுகிப்போருகிற, பிறவி - பிறப்பாகிற, நஞ்சுக்கு - விஷத்தைமாற்றுகைக்கு, நல்ல - ஶ்லாக்யமான, அமுதம் - அம்ருதமாயும், நல் - விலக்ஷணமான, தமிழ்நூல் துறைகள் - த்ராவிடசாஸ்த்ர மார்க்கமான, அஞ்சுக்கு - (எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்கிற) பஞ்சலக்ஷணங்களுக்கும், இலக்கியம் - லக்ஷ்யமாயும், ஆரணம் - வேதத்தின், சாரம் - ஸாரமாயும், பரசமயம் - இதரமதங்களாகிற, பஞ்சுக்கு - பருத்திக்கு, அனலின் பொறி - நெருப்புப்பொறியாயும் இருக்கும் ... *

அவ.—(நெஞ்சுக்கிருள் கடிதீபம்) இதில், ஆழ்வார்திவ்யப்ரபந்தவைபவம் சொல்லுகிறது.

வ்யா.—(நெஞ்சுக்கிருள்கடிதீபம்) என்று நெஞ்சுக்கிருளாவது-மநோமாலிந்யமான அஜ்ஞாநம். (ங) * மனனகமலமிறே. (ச) * ஞானக்கலையாகையாலே அத்தை நிராகரிக்கும் (ரு) * ஞானச்சுடர்விளக்காயிருக்கும்.

(அடங்காநெடும் பிறவி நஞ்சுக்கு நல்லவமுதம்) ப்ரதிக்ரியையொன்றாலுமடங்காதே நெடுகிப் போருகிற ஜந்மமாகிற நஞ்சுக்கு, நல்லவமுதம் - அந்தவிஷத்தை மாற்றுகைக்கு நிர்விஷமான அம்ருதம். ஸம்ஸாரவிஷத்துக்கு அம்ருதமாயிறே (சு) * திருமால் திருநாமமிருப்பது. திருமங்கையாழ்வார் திவ்யப்ரபந்தம், ஸம்ஸாரநிவர்த்தகமான திருமந்த்ரார்த்தத்தை ப்ரதிபாதிக்குமதாயிறே யிருப்பது.

(தமிழ்நன்னூல்துறைகளஞ்சுக்கிலக்கியம்) த்ராவிடசாஸ்த்ரம், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என்கிற விலக்ஷண

(க) திருப்பா - உச.
(உ) திருமொ-ரு-ச-கo.
(ங) திருவாய் - க - க - உ.
(ச) திருவாய் - க - கூ - அ.
(ரு) உ - தி - க.
(சு) திருமொ-சு-கo-சு.

மான பஞ்சலக்ஷணத்தோடே கூடியிறே யிருப்பது. அன்றிக்கே, தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சுலக்ஷணத்தையும் அறுதியிடுவதான, நன்னூலென்று - ஒரு சாஸ்த்ரமுண்டு, அத்தைச் சொல்லிற்றுதல்; ஏவம்விதமான த்ராவிட சாஸ்த்ரமார்க்க பஞ்சகத்துக்கு, (இலக்கியம்) "இலக்கணவிலக்கியம்" என்றிறே அவர்கள் சொல்லுவது; அதுக்கு லக்ஷ்யமாய்ப் படிமாவாயிருக்கும். இத்தைப்பார்த்து லக்ஷணம்கட்டலாயிருக்கை.

கேவலம் தமிழுக்கு ல்க்ஷ்யமாயிருக்கை யன்றிக்கே, ஆரணசாரமுமாயிருக்கும்;-வேதஸாரமுமா யிருக்குமென்றபடி. திருமந்த்ரார்த்தமிறே இதில்ப்ரதிபாதிப்பது. (க) "நாராயணாவென்னும் நாமம்" என்று உபக்ரமித்து, (உ) "பேசுமின் திருநாம மெட்டெழுத்தும்" என்றும், (ங) "நின்திரு வெட்டெழுத்துங் கற்று நானுற்றது முன்னடியார்க் கடிமை" என்றும், (ச) "இமையோர் தலைவருடைய திருநாமம் நங்கள் வினைகள் தவிர வுரைமின் நமோநாராயணம்" என்றும், (ரு) "நரநாரணனாயுலகத்தற நூல் சிங்காமைவிரித்தவன்" என்றும், (சு) "நாட்டினாய் - என்னை - காட்டினாய்" என்றும், (எ) "மந்திரத்தை மந்திரத்தால் மறவாது" என்றும், (அ) "பேராளன் பேரோதும்" என்றும், (கூ) "நாராயணாவோ மணிவண்ணா" என்றும் திருமந்த்ரார்த்த விசாரமேயிறே முடிய நடந்து போருகிறது. ஆகையால், (ஆரணசாரம்) என்கிறது. ஸகலவேத ஸங்க்ரஹதயா தத்ஸாரமாயிறே திருமந்த்ரந்தா னிருப்பது.

(பரசமயப்பஞ்சுக்கனலின்பொறி) பரஸமயமாகிற தூலராசிக்கு காலாநலகணமாயிருக்கை. (க0) * வெள்ளியார் பிண்டியார் போதியாரென்றிவ ரோதுகின்ற கள்ள நூல்களை (கக) * செம்மைப்பனுவல் நூலாலேயிறே இவர்கழித்துத் தள்ளுவது. * பரசமயக் குறும்பறுத்தவரிறே.

இதெல்லாமாவதெதுதானென்ன (பரகாலன் பனுவல்களே). (கஉ) * மருவலர்த முடல்துணிய வாள்வீசும் பரகாலன் பனுவல்

(க) தி - மொ - க - க - க.
(உ) ,, - க - அ - கூ.
(ங) ,, - அ - க0 - ங.
(ச) ,, - சு - க0 - க.
(ரு) ,, - க0 - சு - க.
(சு) தி - மொ - க0 - சு - க.
(எ) தி - நெ - ச.
(அ) தி - மொ - எ - ச - ச.
(கூ) சிறிய திரு -
(க0) தி - மொ - கூ - எ - கூ.
(கக) ,, - க0 - ச - க0.
(கஉ) ,, - ங-கூ-க0.

களே இவற்றைச் செய்துமுடிக்கும். அவரும்வேண்டா, அவர் ஸ்ரீஸூக்திகளே யமையும் இந்தக்கார்யங்களைச் செய்கைக்கென்கை. இவரதிகரித்த கார்யத்துக்குக் கையும்வாயு மொத்திருக்கிறபடி யிது வாயிற்று... ... ... ... ... ... ... ...

(எம்பாரருளிச்செய்தது.)

மூ.—எங்கள்கதியே இராமாநுசமுனியே
சங்கைகெடுத்தாண்ட தவராசா - பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம் நீயெனக்குத்தா.

ப - உ.—எங்கள் - எங்களுக்கு, கதியே - அடைக்கலமாயிருக்குமவரே! இராமாநுசமுனியே - இராமாநுசன் என்னும் திருநாமத்தையுடையராய் (ஆத்மாக்களின் ரக்ஷணத்தில்) மநநம் பண்ணுமவரே! சங்கை - வேத சாஸ்த்ரங்களில் ஸம்சயங்களை, கெடுத்து - போக்கி, ஆண்ட - எல்லாரையும் அடிமைகொண்டவராய், தவம்-தபஸ்ஸில் மிக்கோரானயதிகளுக்கு, ராசா- ராஜாவாயிருக்கு மவரே!, பொங்கு - மிகுந்த, புகழ் - யசஸ்ஸையுடைய, மங்கையர் - திருமங்கையிலுள்ளார்க்கு, கோன் - ராஜாவான ஆழ்வார், ஈந்த - அருளிச்செய்த, மறை - வேதரூபமான, ஆயிரம் - ஆயிரம் பாட்டாயிருக்கிற பெரியதிருமொழி ப்ரபந்தமும், அனைத்தும் - மற்றுமுள்ள ப்ரபந்தமும், தங்கும் - தரித்திருக்கும்படியான, மனம் - மநஸ்ஸை, எனக்கு - அடியேனுக்கு, நீ - தேவரீர், தா - தந்தருளவேணும். ... ... ...

அவ.—இனி, இவ்வாழ்வாரைப்போலே பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸித்து வைதிகமார்க்கத்தை நடத்தியும், உகந்தருளின நிலங்களை உத்தரித்தும், தத்ப்ரதிபாதகமான இவர் ஸ்ரீஸூக்தியை வர்த்திப்பித்தும் போருமவரிறே உடையவர்; அத்தைப்பற்ற, இவ்வாழ்வார் திவ்யஸூக்தியான திருமொழியாயிரமும் என்ஹ்ருதயத்திலேநிலைநிற்கும்படி உபகரித்தருளவேணுமென்று எம்பெருமானாரை அர்த்திக்கிறது - இதில்.

வ்யா.—(எங்கள்கதியே) அகதிகளானவெங்களுக்குக் கதியாயிருக்கிறவரே! (இராமாநுசமுனியே) (க)*சதுரக்ஷரியாய், மோக்ஷைகஹேதுவான திருநாமத்தை யுடையருமாய், ஆத்மரக்ஷணத்திலே மநநம்பண்ணுமவரே!(சங்கைகெடுத்தாண்ட)(உ)"த்வதந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய ச்சேத்தா நஹ்யுபபத்யதே" "த்வதந்யஸ்ஸம்சயஸ்யாஸ்ய ச்சேத்தாநஹ்யுப

(க) ஆழ்வான்முக்தகம். (உ) கீதை. ௬ - ௩௯.

பத்யதே" என்றும், (க) "தத்துவநூல் கூழற்றது" என்னும்படி வேதாந்தசாஸ்த்ரத்தை நிஸ்ஸம்சயமாகப் பண்ணி மநஸ்ஸில் ஸம்சயங்களைப் போக்கி, எல்லாரையும் அடிமையாக ஆண்ட. (தவராசா) யதிராஜா! என்றபடி. அன்றிக்கே, தவம் என்று - சரணாகதி தர்மமாய், அத்தை வர்த்திப்பிக்கிறராஜா என்றுமாம். (உ) *தவநெறியிறே. (பொங்குபுகழித்யாதி) அதிஸம்ருத்தமானயசஸ்ஸையுடைய திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வாருடைய, வேதரூபமாய் ஆயிரம்பாட்டாயிருக்கிற பெரியதிருமொழி ப்ரபந்தமெல்லாவற்றையும். அன்றிக்கே, (ஆயிரமனைத்தும்) என்று - ஆயிரத்தையும், மற்றும் அவர் அனைத்து ப்ரபந்தத்தையும் என்றுமாம். (தங்கும் மனம் நீ யெனக்குத்தா) (ங) "கண்ணநின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம்" என்கிற திவ்யஸூக்தியைத் தரிக்கும்படியான மநஸ்ஸைத் தந்தருளவேணும். (ச) "குறையல் பிரானடிக்கீழ்விள்ளாத வன்ப னிராமாநுசன்" என்றும் (ரு) "நீலன்றனக்குலகிலினியான்" என்றும், (சா) "கலிமிக்கசெந்நெற்கழனிக் குறையல்கலைப்பெருமா னொலிமிக்க பாடலையுண்டுதன்னுள்ளந் தடித்து" என்றும், எம்பெருமானாரைச் சொல்லக்கடவதிறே; அத்தாலே அவரை அபேக்ஷிக்கிறது. ... *

மூ.—*மாலைத்தனியே வழிபறிக்கவேணுமென்று
கோலிப்பதிவிருந்த கொற்றவனே - வேலை
அணைத்தருளுங்கையா லடியேன்வினையைத்
துணித்தருளவேணும் துணிந்து.

ப - உ.—மாலை - ஸர்வேஶ்வரனை, தனிவழியே - தனிவழியிலே, பறிக்கவேணுமென்று - கொள்ளைகொள்ள வேணுமென்று, கோலி-முயன்று, (திருவரசினடியிலே) பதிவுஇருந்த - பதுங்கிக்கொண்டிருந்த, கொற்றவனே - ராஜாவான திருமங்கை மன்னனே! வேலை - வேல் என்னும் ஆயுதத்தை, அணைத்தருளும் - அணைக்கும்படியான, கையால் - திருக்கையாலே, அடியேன் - சேஷபூதனான வென்னுடைய, வினையை - பாபங்களை, துணிந்து - துணிவையுற்று, துணித்தருளவேணும் - வெட்டிக் களைந்தருளவேணும். ... *

அவ.—(மாலைத்தனியே) இதில், ப்ரபந்தாந்வய ப்ரதிபந்தகங்களை ப்ரபந்த கர்த்தாவே (ஃ) சேதிக்கவேணு மென்கிறது.

---

(க) இரா - நூ - (ச) இரா - நூ - உ.
(உ) து - மொ - உ - ௫ - ௩. (ரு) ,, -
(ங) தி - மொ - (சா) ,, -

* இத்தனியன் ஸோமாசியாண்டானருளிச்செய்ததாகச் சொல்லுவர்.

வ்யா. — (மாலைத்தனியே வழிபறிக்க வேணுமென்றுகோலி) ஸர்வாதிகனைத் தனிவழியிலே வழிபறிக்க வேணுமென்று உத்யோகித்து. ததநுகுணமாகத் திருவரசினடியிலே (பதிவிருந்த) மேலே கோடிவைத்துப் பார்ப்பித்த. (கொற்றவனே) ராஜாவே! பறிகொடுக்குமவன் (க)* தெய்வத்துக்கரசு, பறிக்குமவர் ஆலிநாட்டரசு, பறிக்குமிடம் மரங்களுக்கரசிடம்; இப்படியாயிற்று பறிக்கப் பதிவிருந்தபடி. (வேலையணைத்தருளும் கையால்) * வெட்டிப்பறிக்க வெடுத்தணைத்த வேலாலே. (அடியேன் வினையை) (உ) "அடியேன் நான்" என்று அவனுக்கு அடிமையான உமக்கு அடியேனான அடியேன் வினையை. உமக்கடியோமாகைக்கும் வினைக்கும் என்ன சேர்த்தியுண்டு? (ங) "என்பெய்வினையைக் கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னு மொள்வாளுருவி வெட்டிக்களைந்த விராமாநுசன்" என்கிறபடியே. (அடியேன்வினையை - துணிந்து - துணித்தருள வேண்டும்) வழிபறிக்கத் துணிந்தாற்போலே * வினையைத்துணிக்கத் துணியவேணும். என்வினையைப் போக்கவேணும் என்று நீர் துணிந்தாலாயிற்றுப் போவது. (ச) "பண்டைவல்வினை பாற்றியருளினான்" என்னும்படி பண்ணவேணும். ... ... ... ... ... ... *

## தனியன் வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.

பிள்ளைலோகம்ஜீயர் திருவடிகளே சரணம்.

---

(க) தி - மொ - எ - எ - க. (ங) இரா - நூ -
(உ) ,, - கக - அ - எ, (ச) க - சி - எ.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# திருக்குறுந்தாண்டகம்.

மூ.—நிதியினைப் பவளத்தூணை நெறிமையால்நினையவல்லார்
கதியினைக் கஞ்சன்மாளக்கண்டுமுன்னண்டமாளும்
மதியினைமாலைவாழ்த்திவணங்கியென்மனத்துவந்த
விதியினைக்கண்டுகொண்டதொண்டனேன்விடுகிலேனே. (க)

பதம்.—நிதியினை, பவளம், தூணை, நெறிமையால், நினையவல்லார், (ரு) கதியினை, கஞ்சன், முன், மாளக்கண்டு, அண்டமாளும், (க0) மதியினை, மாலை, வாழ்த்தி, வணங்கி, என்மனத்துவந்த, (கரு) விதியினை, கண்டுகொண்ட, தொண்டனேன், விடுகிலேன். (கக) (க)

உரை.—(நினைத்தபடிவிநியோகங் கொள்ளலாம்படியான) பொருளை யொத்தவனாய், பவளம்போலே ஸ்ப்ருஹணீயனாய், தூண்போலே ஸர்வாதாரனா யிருப்பவனாய், க்ரமப்ராப்தியாலே, ஸ்மரிக்க வல்லவர்களுக்கு, (ரு) பரமகதியானவனாய், கம்ஸனுடைய ஆயுஸ்ஸு, அவன் நினைவுதலைக்கட்டுவதற்கு முன்னே, முடியும்படி பார்த்து, ஜகத்தை ரக்ஷிக்குமவனாய், (க0) (ஆஶ்ரிதரை)நினைக்குமவனாய் (ஆஶ்ரித) வ்யாமுக்தனாய், வாயாரப்புகழ்ந்து, வணங்கும்படிக் கீடாக, என் மநஸ்ஸிலேவந்துபுகுந்தவனாய், (கரு) ஸுக்ருதவிபாகனானவனை, கண்ணாரக்கண்டநுபவிக்கப்பெற்ற, தாஸபூதனான நான், இனி ஒருகாலும்விடமாட்டேன். (கக) (உ)

## பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த வ்யாக்யாநம்.

அவதாரிகை.—முதற்பாட்டு. (நிதியினை இத்யாதி) கிழிச்சீரையோடே தநத்தைக்காட்டிக் கொடுப்பாரைப் போலே, தன் ஸ்வரூபரூப குணவிபூதிகளைத் திருமந்த்ரமுகத்தாலே காட்டிக் கொடுக்கக் கண்டு தம்முடைய பூர்வவ்ருத்தத்தையும், பெற்றபேற்றின்கனத்தையும் அநுஸந்தித்துத் தலைசீய்க்கிறார். பெரிய திருமொழியில்-திருப்பிரிதிதொடங்கி(க)*ஒருநற்சுற்றமளவும்,உகந்தருளினதேசங்களை யநுபவித்தார்; *ஒருநற்சுற்றத்துக்கு மேல் (உ) * மாற்ற முளவளவும்

---

அரும்பதவிளக்கம்.—நிதியினைப்ரவேசே; (தலைசீய்க்கிறார்) முதல்திருமொழியிலே என்று கண்டுகொள்வது. அன்றிக்கே, முதல்கார்யம் ஸங்க்ரஹமாய் திருப்பிரிதிதொடங்கி விஸ்தாரமாகவுமாம்

---

(க) தி - மொ - க0 - க. (உ) தி - மொ - கக - அ.

செல்ல அவதாரங்களின் குண சேஷ்டிதங்களை யநுபவித்து ஸம்ஸாரபரமபதவிபாக மின்றிக்கே இவர் ஹ்ருஷ்டரா யிருக்கிறபடியை ஸர்வேஶ்வரன் கண்டு, "ஸம்ஸாரத்தி லிருக்கிறபடியை யறிவித்தால் த்வரித் திருந்தாராகில் கொடுபோகிறோம், இல்லையாகில் க்ரமத்திலே கொடுபோகிறோம்" என்று ஸம்ஸாரத்தி லிருக்கிறவிருப்பை யறிவிக்க, (க) "ஆற்றங்கரை வாழ் மரம்போல்" என்றும், (உ) "காற்றத் திடைப்பட்ட கலவர்மனம்போல்" என்றும், (௩) "பாம்போடொருகூரையிலே பயின்றாற்போல்" என்றும், (௪) "இருபாடெரி கொள்ளியினுள் ளெறும்பேபோல்" என்றும், (௫) "வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போல்" என்றும், (௬) "இடைய னெறிந்த மரமே யொத்திராமே" என்றும்கூப்பிட்டு, இதில், பெருவிடாயர் உடம்பிலும் முகத்திலும் நீரை இரட்டிக்கொள்ளுமாபோலே பேசி அநுபவித்து, இதுதான் இனிதாய், இவை யெல்லாம் உகந்தருளின நிலங்களை அநுபவிக்கையால் வந்தது, உகந்தருளின நிலங்களிலே மண்டினவர்கள் பாக்யாதிக ரென்று தலைக்கட்டுகிறார்.

(நிதியினை) எய்ப்பினில்வைப்பாய் இந்நிதியுடையவனுக்கு மிடிபட வேண்டா திருக்கையும், உடையவன் காலிலே எல்லாரும் வந்து விழுகையும், உண்டென்ன உயிர்நிற்கையும், ஆபத்துக்கு உதவுகையும், உடையவன்பெருமதிப்பனாகையும், விற்றும் ஒற்றி வைத்தும் ஜீவிக்கலா யிருக்கையும், இப்படிசெய்ததென்று ஏசாதிருக்கையும், ஏவமாதிகுணங்களைப் பற்ற (நிதியினை) என்கிறார். (எ) *வைத்தமாநிதியிறே. (அ) "ரஹஸ்யம்-நிஹிதம் குஹாயாம்-நிஹிதம்" என்று பேசப்படுகிறவஸ்து. (நிதியினை) நாட்டிற்காண்கிற நிதிம்பாலல்ல, எல்லாவற்றுக்கும் மேலான நிதியாயிற்று இந்நிதி; இந்நிதி

---

அரு.—கூப்பிட்டு, இதில் - திருக்குறுந்தாண்டகத்திலே, விடாயறுகிறாரென்றபடி.

முதற்பாட்டு.—(விற்றும் ஒற்றிவைத்தும் ஜீவிக்கையாவது) - உபதேசாதிகளைப்பண்ணி (கூ) *போதயந்தஃபரஸ்பராதிகளாலே தரிக்கை. இந்நிதுவைக்குமிடமேதென்ன; அருளிச்செய்கிறார் (ரஹஸ்யம்-நிஹிதம் குஹாயாம்நிஹிதம்) என்று. குஹை-ஹ்ருதயகமலம். ஸாம்யமருளிச்செய்து ஆதிக்யமருளிச்செய்கிறார் (நாட்டிலித்யாதி)

---

(க) தி-மொ-கக-அ-க.
(உ) ,, ,, ,, உ.
(௩) ,, ,, ,, ௩.
(௪) ,, ,, ௪.
(௫) தி-மொ-கக-அ-௫.
(௬) ,, ,, ௬.
(எ) திருவாய்-௬-எ-கக.
(அ) தை - ஆ - க.
(கூ) கீதை-௪.

புதைத்துவைத்தாளவேண்டா; நெஞ்சிலே வைத்தாளலாம். ஓரிடத்திலே புதைத்துவைத்து தேசாந்தரத்திலே நிற்கச்செய்தே விநியோகங் கொள்ளவேண்டினால் உதவாது - அந்நிதி; இந்நிதி, நினைத்தவிடத்தே விநியோகங் கொள்ளலாம், பறித்துக்கொள்வாரில்லை, பறிக்கத்தானொண்ணாது; அந்நிதியுடையவனை அவஸரம் பார்த்துக் கொன்று பறித்துக்கொண்டு போவார்கள்; இந்நிதி யுடையவனுக்கு அப்படிப்பட்ட ப்ரமாதஸம்பாவனைகளில்லை.

(பவளத்தூணை) ஸர்வத்துக்கும் தான் தாரகனாயிருக்குமத்தைப் பற்ற (தூண்) என்கிறார். (பவளம்) என்றத்தால்-ஸ்ப்ருஹணீயதை சொல்லுகிறது. தூணாவது - தான் அநேகத்தைத் தரித்துத் தன் கீழே யொதுங்குவார்க்கு நிழல்கொடுத்து நிற்பதொன்றிறே; அப்படியே தான் எல்லார்க்கும் தாரகனாய்த் தன்னையடைந்தார்க்கு நிழல் கொடுக்கையாலே (தூண்) என்கிறார்.

(நெறிமையால் நினையவல்லார் கதியினை) (க) "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்கிறபடியே அடைவுபட நினைக்க மாட்டார்களே இவர்கள், ஆகையால் (நெறிமையால் நினையவல்லார்) என்கிறார். நினைக்கவல்லார்க்கு நெற்றிக்காக்கும். (கதியினை) நினைப்பார்க்கு பரமகதியாம்-ப்ராப்யனுமென்றபடி; (உ) "பரவித் தொழுந் தொண்டர்தமக்குக் கதியே" என்னக் கடவதிறே. நிதியினையென்று-ப்ராப்யஞ் சொல்லிற்று; (கதியினை) என்று-ப்ராபகம் சொல்லிற்று; (நினைய வல்லார்) என்கையாலே - அதிகாரி விசேஷஞ் சொல்லிற்று.

இப்படி உபாயோபேயங்கள் தானேயா யிருக்கிறவன் ஆர்க்கு எங்கே உதவக்கண்டோமென்னில்; (கஞ்சன் மாளக்கண்டு) (ங) "தந்தைகாலில் பெருவிலங்கு தாளவிழ" என்றும், (ச) "தந்தைகாலில் விலங்கறவந்து தோன்றிய" என்றும், (ரு) "ஒருத்தி மகனாய்ப்பிறந்து" இத்யாதிப்படியே- தன்னைப் பிள்ளையாகப் பெற்றவர்கள் சால்கட்டறுத்து அவர்களை வாழ்வித்தானென்கிறார். (கஞ்சன் மாளக்கண்டு)

---

அரு.—நினைக்கப் போகாமைக்கு ஹேது வேதென்ன; அருளிச்செய்கிறார் (நினைக்கவல்லார்க் கித்யாதி). (நெற்றிக்காக்கும்)-அவனுடைய ஸ்வரூபாதிகள் நினைக்க வொண்ணாதபடி தகையு மென்றபடி. கதி - ப்ராபகமாகவுமாம்.

---

க) திருவாய். ரு-ரு-உ.
(உ) தி-மொ-எ-க-எ.
ங) ,, எ-ரு-க.
(ச) தி-மொ-அ-ரு-க
(ரு தி-பா-உ-ரு.

கம்ஸனுடைய ஆயுஸ்ஸு மாளும்படி பார்த்து. (முன்) அவன் நினை வை அவனுக்கு முன்னே செய்துமுடிக்கை.(அண்டமாளும்)ஜகத்து ஸநாதமாயிற்று. (அண்டமாளும்) (க) ‹‹ராமோ ராஜ்யமுபாஸித்வா- ராமோராஜ்ய முபாஸித்வா'' என்னுமாபோலே நாட்டை ஈரக் கையாலே தடவி கம்ஸன்காலத்திற்பட்ட நோவுதீர ரக்ஷித்து.

(மதியினை)கம்ஸனைக் கொன்று நாட்டுக்குக் களைபிடுங்கின பின் பும், ஆய்ச்சியும் ஐயரும் என் செய்தார்களென்று(உ)‹‹ருணம்ப்ரவ்ருத்த மிவ-ருணம்ப்ரவ்ருத்தமிவ'' என்று படுகிறபடி. (மதியினை) நம் மதி கேட்டை நினைத்து அஞ்சவேண்டா, (ங) ‹‹அஹம் ஸ்மராமி - அஹம்ஸ்மராமி'' என்று தான் அவ்விழவு தீரநினைக்கும்.

(மாலை)(ச)*மாலாய்ப்பிறந்த நம்பியிறே. ஆசாலேச முடையார் பக்கல் முக்தனு யிருக்கு மவனை. (வாழ்த்தி வணங்கி) வாய் படை த்த ப்ரயோஜநம்பெற வாழ்த்தி அவன் திருவடிகளிலே வணங்கி. (என் மனத்துவந்த விதியினை) (ரு) ''மனம் புகுந்தாய் புகுந்ததற் பின் வணங்கும்'' என்கிறபடியே ஆசாலேசமுமின்றிக்கே யிருக்கக் கிடக்கைப் பாயிலே வெள்ளங் கோத்தாற்போலே. (என் மனத்து வந்த) ஈழங் கனுக் காண்பா ரில்லையிறே; எல்லா வவஸ்த்தையிலும் வருவானவனிறே. அதுக்கடி (விதியினை) அவன் ஸ்வாதந்த்ர்யத்தா லும் என் கர்மத்தாலும் தவிர்க்கவொண்ணுத க்ருபை. (சு)''விதிவா ய்க்கின்று காப்பாரார்'' (எ) ''விதி சூழ்ந்ததால்'' இவ்வளவான பேற் றுக்கடியான தம்முடைய ஸுக்ருதத்தைச் சொல்லுகிறுர்.

(கண்டுகொண்ட தொண்டனேன் விடுகிலேனே) சுவடறிவிக் குந்தனையுமிறே வருத்தமுள்ளது, பின்னை அத்தலை யித்தலையா மித்தனை. (கண்டுகொண்ட) (அ) நான் கண்டுகொண்டேன்'' என்று அரசடியிலே காட்டிக்கொடுத்த காட்சி. (கூ) ''ஏது செய்தால் மற க்கேன்'' என்று மறந்து விடவொண்ணுத படியிறே மநஸ்ஸில் புகு

---

அரு.—கம்ஸன் போன பின்பு ஸநாதமாயிற் றென்றபடி..

மதியினை - மாதாபிதாக்களுக்காதல்; ஆஸ்ரிதர்க்காதல். வருகை அஸம் பாவிதமோவென்ன அருளிச்செய்கிறுர் (ஈழங்கனுவித்யாதி). கண்டதை யொழியக் காணுதவற்றை ஸ்வப்நங்காணுரென்றபடி. அரசு - திருவரசு. (க)

---

(க) ரா-பா-க-கஎ. (ச) நா-தி-கச-ரு. (எ) உ-எ-எ.
(உ) பார. (ரு) தி-மொ-ரு-ரு-க. (அ) தி-மொ-க-க-க.
(ங) வராஹசரமம். (சு) திருவாய்-ரு-க-ரு. (கூ) தி-மொ-ரு-ருகூ-ரு-ரு.

ந்து காட்டிக் கொடுத்தது. (கண்டுகொண்ட) கேட்டது கண்டாற் போலே யிருக்கிறது காணும். ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவ ராகையா லே - பண்டே யுண்டாய் இழந்தது கண்டாற்போலே யிருக்கிறது அவன் மால், நான் தொண்டன், இனி விட உபாயமுண்டோ? அவனுக்கு என்பக்கல் ஸ்நேஹமில்லை என்னவொண்ணாது, நான் அதிலீடுபட்டிலே னென்னவொண்ணாது, ஆனபின்பு எத்தைச் சொல்லிவிடுவது. ... ... ... ... ... (க)

மூ.—காற்றினைப்புனலைத் தீயைக் கடிமதிளிலங்கைசெற்ற
ஏற்றினை, இமயமேய வெழில்மணித்திரளை, இன்ப
ஆற்றினை யமுதந்தன்னை யவுணனாருயிரையுண்ட
கூற்றினைக், குணங்கொண்டுள்ளம் கூறுநீகூறுமாறே. ()

பதம்.—காற்றினை, புனலை, தீயை, கடி, மதிள், (ரு) இலங்கை, செற்ற, ஏற்றினை, இமயம் ஏய, எழில், (க0) மணித்திரளை, இன்பவாற்றினை, அமுதந் தன்னை, அவுணன், ஆர் உயிரை உண்ட, (கரு) கூற்றினை, உள்ளம், குணம் கொண்டு, கூறு, நீகூறுமாறே. (உ0)

உரை.—வாயு சரீரகனாய், ஜல சரீரகனாய், தேஜஶ்ஶரீரகனாய், அரணாகப்போரும்படியான, மதிளையுடைத்தான, (ரு) லங்கையை, அழித்தவனாய், (அதினாலே) ருஷபம்போலே செருக்கி யிருப்பவனாய், பொன்போலே ஸ்ப்ருஹணீயனாய், தேஜஸ்ஸு மிக்கிருந்துள்ள, (க0) மணித்திரள்போலே போக்ய பூதனாய், ஆநந்த ப்ரவாஹத்தை யொத்தவனாய், அம்ருதம்போலே போக்யபூதனாய், ஹிரண்யாஸுரனுடைய, அரிய ப்ராணனை முடித்துப் பொகட்டவனாய், (கரு) (ஆஶ்ரித விரோதிகளுக்கு) யமனை யொத்தவனான ஸர்வேஶ்வரனை, மநஸ்ஸே! (அவன்) திருக்கல்யாண குணங்களை மநநம்பண்ணி, அநுஸந்திக்கப் பார், (என்ன; அப்படி அநுஸந்தித்த மநஸ்ஸைப்பார்த்து,) நீ கூறும்படியே! (என்று வித்தராகிறார்.) (உ0)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (காற்றினை இத்யாதி) (க)"తిస్రో దేవతాః -திஸ்ரோதேவதா:" என்கிறபடியே பூதங்களொந்துக்கும் உபலக்ஷணமாய், காரணமே அவஸ்த்தாந்தராபந்நமான கார்யம் என்னுமத்தாலே ஜகச்சரீரியானவனை என்கை.

(கடிமதிளிலங்கை செற்றவேற்றினை) கடி-அரண். அரணாகப் போரும்படியான மதிள். (உ) "లఙ్కాం రావణపాలితామ్- லங்காம்

அரு —இரண்டாம்பாட்டு.—(காற்றினை) காரணமான பூதங்களே கார்யாவஸ்த்தமான ஜகத்தாகையாலே (ஜகச்சரீரி யென்கிறது.)

(க) சாந்தோ-சு-ரு-உ. (உ) ரா-ஸு-உ-கச.

ராவண பாலிதாம்" என்கிறபடியே மதிளின்றியிலே யிருந்தாலும் ப்ரவேசிக்க வொண்ணாத வூர்; அதுக்குமேலே ராவணனும் பரிகரமும் பல்கிப் படிந்து கிடக்கிற லங்கையை. (க) "பாழாளாகப் படைபொருதான்" என்கிறபடியே - லங்கையுடைய ஆள் பாழாம்படி செற்று அத்தால் வந்த மேனாணிப்பாலே செருக்கி யிருக்கிறவனை.

(இமயமேய வெழில்மணித் திரளை) இமயம்-பொன், எய்கை- ஒக்கை. ஆஶ்ரித விரோதியான ராவணனைக் கொன்றபடியாலே செருக்கிப் பொன்போலே புகர்த்து நல்ல மணித்திரள்போலே போக்யனானவனை. (இமயம்) இத்யாதிக்கு-அவதாரத்துக்குப் பிற்பட்டார்க்கும் அநுபவிக்கலாம்படி ஹிமவானிலே பொருந்தியிருக்கிறபடி என்று நிர்வஹித்தார்கள். (உ) *ஏலநாறு தண்தடம் பொழிலிடம்பெற விருந்தநல்லிமயமிறே.

(இன்பவாற்றினை)(ங) * மதுரவாறிறே.(ச) "ஆநந்தம் ப்ரஹ்மண:-ஆநந்தம்ப்ரஹ்மண:" என்கிற ஆநந்த ப்ரவாஹம். ஆறு என்கையாலே- விடாய்த்தார்க்குப் புக்கு முழுகலா யிருக்கையும், வேண்டின விடத்தே திறந்து பாய்ச்சி விளைவித்துக் கொள்ளலா யிருக்கையும்; இவ்வாறு விளைவிப்பது (ரு)*பேரமர் காதல் கடல் புரையவிளைவிறே. (அமுதந்தன்னை) போனவுயிரை மீட்கவற்றாய் போக்யமுமா யிருக்கை.(இன்பவாற்றினை அமுதந்தன்னை) விளைவிப்பானுந் தானாய் விளைந்தால் புஜிக்கும் போகமுந் தானாயிருக்கையிறே. (சு) *அம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி-அம்ருதம்த்ருஷ்ட்வாத்ருப்யந்தி யிறே. கண்கொண்டு புஜிக்கலாம் அம்ருதமிறே.

இப்படி ப்ராப்யப்ராபகங்க ளிரண்டுந் தானேயானால் இவ்வம்ருதபாநம் பண்ணுவார்க்கு வரும் விரோதி போக்குவார் ஆரென்னில்; (அவுணனுருயிரை யுண்ட கூற்றினை) ப்ரஹ்லாதன் விரோதியான ஹிரண்யன்பட்டதுபடுமென்கிறார். (கூற்றினை) (எ) "ம்ருத்யும்ருத்யும் -ம்ருத்யும்ருத்யும்" என்கிற மந்த்ரலிங்கத்தை நினைக்கிறார். (குணங்கொண்டுள்ளம்) நெஞ்சிலே குணங்களைக் கொண்டு. உள்ளம்! கூறு. (நீ கூறுமாறே) உள்ளமானது எப்போதோ வென்றிருக்க, நீ கூறும்படியே! என்கிறார். (உ)

அரு.—உள்ளம்-அண்மை விளி-ஸம்போதனை. (கூறு) என்று விதிக்க, அது கூறினவாறே (நீ கூறுமாறே!) என்று கொண்டாடுகிறார். (உ)

(க) திருப்பல்-ங.
(உ) தி-மொ-க-உ-க.
(ங) தி-மா-ஙசு.
(ச) தை-ஆ-உ-கூ.
(ரு) திருவாய்-ரு-ங-சு.
(சு)
(எ) ந்ருஸிம்ஹா நு.

மூ.—பாயிரும்பரவைதன்னுள் பருவரைதிரித்து, வானோர்க்
காயிருந்தமுதங்கொண்ட வப்பனையெம்பிரானை,
வேயிருஞ்சோலைசூழ்ந்து விரிகதிரிரியநின்ற,
மாயிருஞ்சோலைமேய மைந்தனைவணங்கினேனே. (ரு)

பதம்.—பா, இரும், பரவைதன்னுள், பருவரை, திரித்து, (ரு) வானோர்க்காய், இருந்து, அமுதம் கொண்ட, அப்பனை, எம்பிரானை, (கo) இரும், வேய் சோலை, சூழ்ந்து, விரிகதிர், இரிய நின்ற, (கரு) மாயிருஞ் சோலை, மேய, மைந்தனை, வணங்கினேன். (கசு)

உரை.—அதி விசாலமாய், ஆழத்தை யுடைத்தான, திருப்பாற்கடலிலே, பெரிதான மந்தரபர்வதத்தைக் சுழலும்படியாகக் கடைந்து, (ரு) தேவதைகளுக் காகப், பொருந்தி நின்று, அம்ருதத்தை யெடுத்து (க்கொடுத்த), உபகாரகனாய், எனக்கு ஸ்வாமியானவனாய், (கo) உயர்ந்திருந்துள்ள, மூங்கில் குழாங்களாலே, சூழப்பட்டு, விஸ்த்ருதகிரணனான ஸூர்யன், தூரத்திலே (மரங்களின்நிழலினால் தன் கிரணங்கள் திருமலைமேல் படாதபடி) ஸஞ்சரிக்கிற, (கரு) திருமாலிருஞ் சோலைமலையிலே, நித்யவாஸம்பண்ணுகிற, மிடுக்கனானவனை, வணங்கப் பெற்றேன். (கசு)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பாயிரும்)சொன்ன † வணக்கத்தைச் சொல்லுகிறார். (பாயிருமித்யாதி) பா என்று-பரப்பு; இருமை-பெருமை. இவை யிரண்டாலுமாக - ஆழத்தையும் அகலத்தையுஞ் சொன்னபடி. (பருவரைதிரித்து) கடலைக் கண்செறி யிட்டாற்போலே பெரிய மந்தர பர்வதத்தை நட்டு அம்ருதங் கிளரு மளவும் தானே † திரியும்படியாக வைத்த † நொய்ப்பம். (வானோர்க்காயிருந்தமுதங்கொண்ட வப்பனை) தனக்கா யிருப்பார் அதமரிறே; நிலா தென்றல் சந்தனம் தண்ணீர்போலே தன்னைப் பரார்த்தமாக்கிவைக்கு மவனிறே. (க)†"பொதுநின்ற பொன்னங்கழல்" என்றும், (உ) "ஸர்வலோகசரண்யாய-ஸர்வலோக சரண்யாய" என்றுஞ் சொல்லுகிறபடியே எல்லார்க்குந் தன்னைப் பொதுவாக்கியிறே வைப்பது. ஆசையில்லாதார் இழந்துவிடு மித்தனை. (அப்பனை) உபகாரகனை. ப்ரயோஜநாந்தரபரரான † அந்தர ஜாதிகளுக்காகத் தன்னையழிய

---

அரு.—மூன்றாம்பாட்டு.—(பாயிரும்) வணக்கம் முதல்பாட்டிலே சொன்னது. திரியும்படி - சுழலும்படி. நொய்ப்பம் - ஸாமர்த்த்யம். ப்ரயோஜநாந்தர பரர்க்கும் தன்னை ஆக்கிவைக்கக் கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (பொதுநின்ற வித்யாதி). அந்தரஜாதி-சாடு.

அப்பனை, மைந்தனை என்றது - (ரு) "அரும்பினை, அலரை என்னுமா போலே. ... ... ... ... (ரு)

---

(க) ரு-திரு-அஅ. (உ) ரா-யு-கஎ-கஎ. (ரு) தி-மொ-எ-கo-ச.

மாறி அநேகம்வடிவுகொண்டு உபகரிக்குமவனை. (எம்பிரானை) தம்முடைய அம்ருதம்.

(வேயிருமித்யாதி) மூங்கில் குழாங்களாலே சூழ்ந்து, விஸ்த்ருத கிரணனான ஆதித்யன் திருமலை யாழ்வார்மேலே தன்சாயைபடாமே அகல ஸஞ்சரிக்கிற, (மாயிருஞ் சோலைமேய) திருமாலிருஞ்சோலை என்கிற திருநாமத்தை யுடைய திருமலையிலே பொருந்தியிருக்கிற. (மைந்தனை வணங்கினேனே) தம்மை யடிமைகொண்ட பருவம். இவரை யடிமைகொள்வதாகத் திருமலையிலே எழுந்தருளி நின்ற பின்பு வடிவு இளகிப் பதித்தபடி. (அப்பனை) என்று கீழே யொரு முறைமைசொல்லி, இப்போது (மைந்தனை) என்கிறாரிறே... ... (௩)

மூ.—கேட்கயானுற்றதுண்டு கேழலாயுலகங்கொண்ட
பூக்கெழுவண்ணனாரைப் போதரக்கனவிற்கண்டு
வாக்கினால் கருமந்தன்னால் மனத்தினால்சிரத்தைதன்னால்
வேட்கைமீதூரவாங்கிவிழுங்கினேற்கினியவாறே. (௪)

பதம்.—யான், கேட்க, உற்றதுண்டு, கேழலாய், உலகம், (௫) கொண்ட, பூக்கெழுவண்ணனாரை, கனவில், போதர, கண்டு, (௧0) வாக்கினால், கருமந்தன்னால், மனத்தினால், சிரத்தைதன்னால், வேட்கை. (௧௫) மீதூர, வாங்கி, விழுங்கினேற்கு, இனியவாறே, (௧௧)

உரை.—அடியேன், (ஒருவிஷயம்) கேட்க, உற்று நின்றேன்; (அதாவது) வராஹரூபியாய், பூமிப்பிராட்டியை, (௫) எடுத்துக்கொண்டேறின, புஷ்பம்போலே ம்ருதுஸ்வபாவமான வடிவையுடைய ரானவரை, (என்) நெஞ்சில், நன்றாக, அநுபவித்து, (௧0) (இதுக்குமுன்பு) வாக்கினாலும், காயத்தினாலும், மநஸ்ஸினாலும், ஶ்ரத்தையாலும், ஆசையானது, (௧௫) அதிசயிக்க, (அத்தாலே விஷயாந்தரங்களை ஆசைசொண்ட வளவும்) ஸ்வீகரித்து, அநுபவிக்கப்பெற்ற வெனக்கு, (பகவத் விஷயம்) இனிதாயிருந்தபடி யென்றான்! சக) (௪)

வ்யா.—நாலாம்பாட்டு. (கேட்கவித்யாதி) அடியேன் தேவரீரை ஒன்று கேட்கவுற்றேன், அத்தை யருளிச்செய்யவேணும். அதென்னன்பு தென்ன; (கேழலா யுலகங்கொண்ட வித்யாதி) புஷ்பஹாஸஸுகுமாரமான வடிவை (௧) * மானமிலாப் பன்றியாக்கி (௨) *நிலங்கோட்டிடைக்கொண்டது, இந்தக்கழஞ்சு மண்ணுமழிந்தால் பின்பு ஸ்ருஷ்டிக்கை அரிதாய்ச் செய்தருளிற்றோ, இத்தை எனக்கு அருளிச்செய்யவேணும். ப்ரளயங்கொண்ட பூமி தன்னை எடுக்கிவிறே இவன் இதுக்கு உத்தரஞ் சொல்லுவது; (போதரக்கனவில்கண்டு) மிகவும் நெஞ்சிலே கண்டு. இந்த்ரியங்களால் வ்யவச்சேதமின்றிக்கே அவ்யவதாநேசவிசதமாகக் கண்டு.

---

அரு.—நாலாம்பாட்டு.—(கேட்க) போதர - மிகவும். கனவு - மாநஸாநுபவம். சிரத்தை - ஶ்ரத்தை.

---

(௧) நா-தி-௧௧-அ. (௨) திருவாய்-௧0-௧0-எ.

(வாக்கினுலித்யாதி) மநோவாக்காயங்களாலும் ஶ்ரத்தையாலும் மிக்க அபிநிவேசத்தை யுடையேனுய் விழுங்கினேனுக்கு இனிதாயிருந்தது. விழுங்குகை - அநுபவிக்கை. எவ்விஷயங்கள் அநுபவித்து ரஸித்துப்போந்தவெனக்கு எவ்விஷயம் ரஸிக்கிறது. (விழுங்கினேற் கினியவாறே) எனக்கினிதான வழி என்ருன்! எவ்வழியாலே †உகட்டிப் போந்த விஷயம் எவ்வழியாலே இனிதாயிற்று இது இனிதான வழியை யருளிச்செய்யவேணும். இதுக்கு அவன் என்ன உத்தரஞ்சொல்லுவது? ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தது உடைமை மங்காமைக்கன்ருே, அவ்வோபாதி மங்க வொண்ணுதென்று ஸம்ஸார ப்ரளயத்தில்நின்றும் இவரை எடுத்தானித்தனையிறே. (ச)

மூ.—இரும்பனன்றுண்டநீர்போ லெம்பெருமானுக்கு, என்றன்
அரும்பெறலன்புபுக்கிட்டடிமைபூண்டுய்ந்துபோனேன்
வரும்புயல்வண்ணனுரை மருவி யென்மனத்துவைத்துக்
கரும்பினின்சாறுபோலப்பருகினேற்கினியவாறே. ·(ரு)

பதம்.—இரும்பு, அனன்று, உண்ட, நீர்போல், எம்பெருமானுக்கு, (ரு) என்றன், பெறல்அரும், அன்பு, புக்குஇட்டு, அடிமைபூண்டு, (கo)உய்ந்துபோனேன், வரும், புயல்வண்ணனை, மருவி, என்மனத்து (கரு) வைத்து, கரும்பின், இன்சாறுபோல, பருகினேற்கு, இனியவாறே. (உo)

உரை.—இரும்பானது, காய்ந்து, (அக்காய்ச்சலடங்கும்படி) குடித்த ஜலம்போலே,வகுத்த சேஷியான ஸர்வேஶ்வரன் விஷயத்திலே,(ரு)என்னுல், பெறுதற்கரிய, அன்பை, (அவன்விஷயத்திலே) வைத்து, அடிமையிலே அந்வயித்து,(கo)உஜ்ஜீவித்தேன்; (அன்றியும்) (ஆஶ்ரிதரிருந்தவிடத்தே தேடி) வருகிற, மழைக்காலத்து மேகம்போன்ற திருநிறத்தையுடையவனைக், கிட்டி, என்மநஸ்ஸிலே, (கரு) பொருந்தவைத்து, கரும்பினுடைய, இனியரஸம் போலே, அநுபவிக்கப் பெற்றவெனக்கு, இனிதா யிருந்தபடி யென்ருன்! ()

வ்யா.—அஞ்சாம்பாட்டு.(இரும்பு அனன்றுண்ட நீர்போலித்யாதி) இரும்பானது அக்நியாலே மிகவும் தப்தமாய் அக்காய்ச்சலடங்கப் பாநம் பண்ணப்பட்ட ஜலம்போலே. (எம்பெருமானுக்கு) வகுத்தசேஷிக்கு. (என்றனரும்பெறலன்பு) (க) * அரும்பெற லடி

---

அநு.—உகட்டிப்போந்த விஷயம் - எல்லாப்ரகாரத்தாலும் இதரவிஷயங்களை யநுபவித்து அருவருத்துப்போந்த பகவத்விஷயமென்றபடி. (இனியவாறு-கேட்க யானுற்றதுண்டு) என்றந்வயம், ... ... ... (ச)

அஞ்சாம்பாட்டு.—(இரும்பு) அனன்று - அனலுகை; காய்கை.

---

(க) திருவாய் - க - ங - க.

களைப் பற்றிலும் கிடையாத வன்பு. † எனக்கு பகவத்விஷயத்திலே அன்பு பிறக்கைபாவது-இந்தளத்தே தாமரை பூக்கையிறே. † அஹங்கார மஹாவஹ்நியிறே. இந்தளம் - கும்மட்டி. (புக்கிட்டு) அன்பை அவன் பக்கலிலே யாக்கி. (அடிமைபூண்டு) (க) "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி-அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" என்கிறபடியே (உ)*வழுவிலா வடிமையிலேஅந்வயித்து. (அடிமைபூண்டு) (ங) "தொண்டுபூண்டு" என்னுமாபோலே இவ் வாத்மாவுக்கு ஆபரணமிறே - பகவததாஸ்யம், ஆகையாலே (பூண்டு) என்கிறார். (உய்ந்துபோனேன்) முன்பு (ச) * அஸந்நேவவிறே.

(வரும் புயல்வண்ணனுரை) இருந்தவிடத்தே யிருந்து விடாய் கெடுக்கும் மேகமன்று, கடலை மணலோடே கழுத்தே கட்டளையாகப் பருகித் தவழ்ந்துவருகிற மேகம்போலே யிருக்க வரும். †(மருவி) (ரு) "மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல்". (புயல்வண்ணனுரை மருவி) என்னை மறந்துகிட்டி. (என் மனத்துவைத்து) † ஸஞ்சார மற்றபடி. உத்தேஶ்யம் கைபுகுந்தால் உண்டோ ஸஞ்சாரம். (கரும்பின் இன்சாறுபோலப் பருகினேற்கு) விழுங்குகைபோய்ப் பருகலாம்படி யாயிற்று. ஆழ்வாருடனே கலக்கக்கலக்கப் பருகலாம்படி ஒருநீரானுன். (இனியவாறே) இதுவுமொரு இனிமையேதான்! இதொருநீர்மை யிருந்தபடியென்!. (ரு)

மூ.—மூவரில்முதல்வனுய வொருவனை யுலகங்கொண்ட
கோவினைக் குடந்தைமேய குருமணித்திரளை, இன்பப்
பாவினைப் பச்சைத்தேனைப் பைம்பொன்னையமரர்சென்னிப்
பூவினைப்,புகழுந்தொண்டரென்சொல்லிப்புகழ்வர்தாமே ()

அரு.—தம்முடைய விடாயாறும்படி(பருகினேன்)என்கிறார். அப்படி பக்திபிறக்கை அரிதாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி). இவன் இந்தளமோவென்ன; அருளிச்செய்கிறார் (அஹங்காரமித்யாதி).

மேகத்தைக்கண்ட பயிர்போலே மருவியென்னுதல்; அவன் வர விமுகனுய்த் திரிந்த என்னை மறந்துமருவியென்னுதல். ஸஞ்சாரமற்று இவர் மனஸ்ஸிலே புகுந்தபின்பு அவனுக்குப் புறம்பு போக்கற்றபடி. இவர்மனஸ்ஸிறே அவனுக்குத்தேஶ்யம். அன்றியே, மனஸ்ஸுக்கு வேறுஸஞ்சாரமின்றிக்கே என்றாய், மனஸ்ஸு ஸஞ்சார மின்றிக்கே யிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (உத்தேஶ்யமித்யாதி.). ... ... ... (ரு)

(க) ரா-அயோ-ங்க-உரு. (ங)
(உ) திருவாய்-ங-ங-க. (ச) தை-ஆ-உ-ரு. (ரு) பெரு-தி-ரு-எ.

பதம்.—மூவரில், முதல்வனாய, ஒருவனை, உலகம், கொண்ட, (ரு) கோவினை, குடந்தை, மேய, குருமணித்திரளை, இன்பப்பாவினை, (ச) பச்சைத்தேனை, பைம்பொன்னை, அமரர்சென்னிப் பூவினை, புகழும்தொண்டர்தாம், என்சொல்லிப் புகழ்வர். (கடு)

உரை.—(ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய இம்) மூவரிலே, காரணபூதனான, அத்விதீயனாய், (மஹாபலியஜ்ஞ வாடத்திலேசென்று) லோகங்களை, (நீரேற்று) வாங்கிக்கொண்ட, (ரு) நிர்வாஹகனாய், திருக்குடந்தையிலே, பொருந்தினவனாய், ஶ்ரேஷ்ட்டமான நீலரத்நத்தின் ஸமூஹத்தை யொத்தவனாய், ஸுகரமான பாட்டுப்போலே செவிக்கினியனாய், (சo) மிக்க மாதுர்யத்தையுடைய தேன்போலே நாவுக்கு இனியனாய், பசியபொன்போலே ஸ்ப்ருஹணீயனாய், நித்ய ஸூரிகளுடைய, சிரஸ்ஸுக்குப்பூவான, (சிரோபூஷணமான) ஸர்வேஶ்வரனைப், புகழுகிற தாஸபூதர்கள், எத்தைச் சொல்லிப் புகழுவார்கள்? (கடு) (இப்படிப் பட்டவனென்று பாசுரமிட்டுப் புகழப்போகாதென்றபடி.) (ரு)

வ்யா.—ஆறும்பாட்டு.(மூவரிலித்யாதி) இந்த்ரனைக் கூட்டுதல், தன்னைக்கூட்டுதல். (க) "ஸஸம்ஜ்ஞாம் யாதிபகவாநேக ஏவ ஜநார்த்தநஃ- ஸஸம்ஜ்ஞாம் யாதிபகவாநேக ஏவ ஜநார்த்தநஃ" என்னும்படியே மூவருக்கும் காரணமாகையாலே (முதல்வன்) என்கிறார். (முதல்வனாயவொருவனை) (உ) "மூவுருவுங் கண்டபோ தொன்றாஞ்சோதி" என்கிறபடியே மூவரையும் தனித்தனியே கண்டால் இவனே காரணபூதன், இவனே காரணபூதனென்னலாய், மூவரையுஞ் சேரக்கண்டால், இருவர் கார்யகோடி நிவிஷ்டராய், இவனே இருவருக்கும் காரணமென்னும்படி பரஞ்ஜ்யோதிஸ் ஶப்தவாச்ய னிவனேயா யிருக்கையாலே (உ) "ஆஞ்சோதி" - ஒன்று" என்கிறார். (உலகங்கொண்டகோவினை) மூவருக்கும் ப்ரதாநனானால் அவர்கள்கார்யஞ் செய்துகொடுக்கவேணுமே,அவர்களிலே யொருவனுக்குக் கார்யம்செய்தபடி.(உலகங்கொண்ட) இந்த்ரனுடைய ராஜ்யத்தை மஹாபலி பறித்துக்கொள்ள அவன் பக்கலிலே தானேசென்று அபேக்ஷித்து (ங) "மூவடி" என்று இந்த்ரன் கார்யம்செய்ய முதலடியிட்டபடி. † முன்பே ஒரு

அரு.—ஆறும்பாட்டு. —(மூவரிலித்யாதி) ருத்ராதிகளுக்குச் செய்தானோவென்ன; அருளிச்செய்கிறார் (முன்பே யொருவனுக்கித்யாதி).

(க) வி-பு. (ங) பெரி-தி-உ-கo-எ.
(உ) தி-நே-உ.

வனுக்குக் லகபோட்டைத்தீர்த்து விட்டான். (க) * முடையடர்த்த சிரபேந்தி மூவுலகும் பலிதிரிவோன் இடர்கெடுத்த திருவாளனிறே. அவன் தமப்பனுக்குத் தானே வேதப்ரதாநம் பண்ணினன். இப் படி செய்கைக்கு ஹேதுவென்னென்னில்; (கோவினை) நிர்வாஹக னுகையாலே. (குடந்தைமேய) இன்னும் ஸம்ஸாரிகள் இடர்பட்டா ருண்டாகிலும் கைகழியப் போகவொண்ணாதென்று திருக்குடந் தையிலேபடுக்கைபொருந்திப்பள்ளிகொண்டவனை. (குருமணித்தி ரளை) ஸ்ரேஷ்டமான நீலரத்நஸமூஹம்போலே புகர்த்துக் குளிர் ந்த வடிவழகை யுடையவனை.

(இன்பப்பாவினை) செவிக்குத் தம்முடைய கவிபோலே தித் தித்திருக்கிறபடி. பாவென்பது - இயல். பாட்டு. (உ) * இன்கவிபா டும் பரமகவிகளான முதலாழ்வார்கள் கவிபோலே இனியனுயுள்ள வனை யென்னவுமாம். (பச்சைத்தேனை) செவிக்கே யன்றிக்கே நாக் குக்கு மிருக்கிறபடி. (பைம்பொன்னை) உடம்புக்கு அணையலாம்படி ஸ்ப்ருஹணீயமாயிருக்கை. (அமரர்சென்னிப்பூவினை) * அயர்வறு மமரர்களுக்கு சிரோபூஷணமானவனை. (ந) † "அரும்பினை யலரை" (ச) "பாதபற்புத்தலைசேர்த்து" என்னவேண்டாவே அவர்களுக்கு. (புகழுந் தொண்டர்) இவ்விஷயத்தைப் புகழ்ந்தார்களாகக் சொ ண்டோம், இதுக்குப் பாசுர மெங்கே தேடிச்சொன்னர்கள். கின் ணகத்திலே புக்குமுழுகுவாரைப்போலே குமிழி நீருண்டு போமித் தனைபோக்கி, (என்சொல்லிப் புகழ்வர்தாமே) (ரு) "அரும்பொரு ளாதல் - அறிந்தனர்" என்று அறிய வொண்ணாதென்று புகழும தொழியப் பாசுரமிட்டுப் புகழப்போகாது. (சு)

மூ.—இம்மையை மறுமைதன்னை யெமக்குவீடாகிநின்ற
மெய்ம்மையைவிரிந்தசோலைவியன்திருவரங்கமேய
செம்மையைக்கருமைதன்னைத்திருமலையொருமையானைத்
தன்மையைநினைவாரென்றன் தலைமிசைமன்னுவாரே. (எ)

பதம்.—இம்மையை, மறுமைதன்னை, எமக்குவீடாகிநின்ற, மெய்ம்மை யை, விரிந்த, (ரு) சோலை, வியன், திருவரங்கம், மேய, செம்மையை, (க0) கருமைதன்னை, திருமலை, ஒருமையானை, தன்மையை, நினைவார், (கரு) என் றன் தலைமிசை, மன்னுவார். (யஎ)

---

அரு —அவன்பூவோவென்ன; அருளிச்செய்கிறார் (அரும்பினையலரை) என்று.

---

(க) தி-மொ-சு-கூ-க.
(உ) திருவாய்-எ-கூ-சு.
(ந) தி-மொ-எ-க0-ச.
(ச) திருவாய்-உ-க-க.
(ரு) ,, கூ-ரு-ரு.

உரை.—ஐஹிகஸுகப்ரதனாய், ஆமுஷ்மிகஸுகப்ரதனாய், நமக்கு மோக்ஷப்ரதனாயிருக்கிற, உபாயபூதனாய், விஸ்த்ருதமான. (கு) சோலைகளாலே சூழப்பட்டு, ஆஶ்சர்யப் படத்தக்கதா யிருந்துள்ள, திருவரங்கத்திலே, நித்ய வாஸம்பண்ணுமவனாய், சிவந்தவடிவை யுடையனாய், (௯0) கரியவடிவையுடையனாய், திருவேங்கட மலையிலே, ஒருபடிப்பட்டுநின்றவனுடைய, ஸ்வபாவத்தை, நினைக்க வல்லவர்கள், (கடு) என் தலையிலே, இருக்கத் தக்கவர்கள். ()

வ்யா.—அவ.—ஏழாம்பாட்டு. (இம்மையை யித்யாதி) ஸர்வேஶ்வரனுடைய ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை அநுஸந்திக்கவல்லார்க்கு ஸஞ்சாரபூமி என் உத்தமாங்கமென்கிறார்.

(இம்மையை) இஹலோகத்தில் ஸ்வவிஷயஜ்ஞாந ஸுகத்தைத் தருமவனை. (மறுமைதன்னை) ஶரீரஸமநந்தரம் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைத் தருமவனை. † ஸம்ஸாரத்தில் து:கநிவ்ருத்தியே, ஸுகமென்றுப்ரமமேயிறே. (எமக்கு வீடாகின்ற மெய்ம்மையை) நமக்கு மோக்ஷ ஸுகமா யுள்ளவனை. கீழ்ச்சொன்ன ப்ராப்யத்துக்கு அவ்யவஹிதமான உபாயமானவனை. (விரிந்தசோலை யித்யாதி) அவ்வுபாயம் ஸுலபமான விடத்தைப் பேசுகிறார். பரந்த சோலையை யுடைத்தாய் விஸ்மயநீயமாயிருந்துள்ள கோயிலிலே நித்யவாஸம்பண்ணுமவனை.

(செம்மையைக் கருமைதன்னை) யுகந்தோறும் அவ்வவ யுகங்களிலுள்ளார்க்குத தக்க வடிவுகளைக் கொண்டு அவர்களை ரக்ஷிக்குமவனை. (க) "முன்னை வண்ணம்" இத்யாதிப்படியே. செம்மையும் கருமையும் மற்ற விரண்டுக்கு முபலக்ஷணம். (திருமலையொருமையானை) (௨) "கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்கிறபடியே திருமலையிலே நின்று நித்யஸூரிகளுக்கும் நித்ய ஸம்ஸாரிகளுக்கும் ஒக்க முகங்கொடுக்குமவனை. (தன்மையை நினைவார்) இந்த ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை நினைக்கவல்லார். (என்றன் தலைமிசை மன்னுவாரே) அவன்திருவடிகளும் இவர்கள்திருவடி

அரு.—ஏழாம்பாட்டு:—(இம்மையை) இம்மைக்கு ஸம்ஸாரது:க நிவ்ருத்தியமையாதோ, அவன் விஷயஜ்ஞாநமாக வேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரத்திலித்யாதி.) வீடாகின்ற - வீட்டுக்கு நிர்வாஹகனென்கையாலே அத்தைத் தருகைக்கும் அவனே உபாயமென்றபடி.

ஒருமையான்-ஒருபடிப்பட்டவனென்றும், அங்குள்ளாரோடு இங்குள்ளாரோடு வாசிபற முகங்கொடுக்கையிலே ஏகரூபனாயிருக்கிறவனென்றபடி.

(க) தி-மொ-௬-௯-௮. (௨) திருவாய் - க - ௮ - ௩.

களும் ஒக்கவன்று மன்னுவது, இவர்கள் திருவடிகளே என்தலையில் மன்னுவது. (க) "தண்சேறை யெம்பெருமான் தாள்தொழுவார் காண்மின் என் தலைமேலார்" என்கிறார். (எ)

மூ.—வானிடைப்புயலைமாலை வரையிடைப்பிரசமீன்ற
தேனிடைக்கரும்பின்சாற்றைத் திருவினை மருவிவாழார்
மானிடப்பிறவியந்தோ மதிக்கிலர்கொள்க, தந்தம்
ஊனிடைக்குரம்பைவாழ்க்கைக்குறுதியேவேண்டினாரே. (அ)

பதம்.—வானிடை, புயலை, மாலை, வரையிடை, பிரசம்ஈன்ற, (ரு) தேனிடை, கரும்பின்சாற்றை, திருவினை, மருவிவாழார், மானிடப்பிறவி, (கo) மதிக்கிலர், கொள்க, அந்தோ, தந்தம், ஊனிடைக்குரம்பை (கரு) வாழ்க்கைக்கு, உறுதியேவேண்டினார். (கஎ) (அ)

உரை.—ஆகாசத்திலே (வர்த்திக்கிற), மழைக்காலத்துமேகம் போன்ற வடிவை யுடையவனாய், ஆஶ்ரிதவ்யாமுக்தனாய், பர்வதத்திலே, தேனீக்களாலே சேர்க்கப்பட்ட, (ரு) தேன்வெள்ளத்தின்நடுவே (வளர்ந்த), கரும்பின்சாறுபோலே போக்யபூதனாய், ஸர்வ ஶ்ரேஷ்ட்டனானவனை, ஆஶ்ரயித்து வாழமாட்டார்கள்; மநுஷ்யஜந்மத்தை, (கo) (பெறுதற்கரிய ஜந்மமென்று) நினைக்கிறார்களில்லை; இதுநிஶ்சயம்; ஐயோ! தங்கள் தங்களுடைய, மாம்ஸளமான சரீரத்திலே,(கரு)வாழுகைக்கு, உறுதியையேதேடாநிற்பர்கள், (கஎ) ()

வ்யா.—அவ.—எட்டாம்பாட்டு. (வானிடைப்புயலை) இவ்விஷயம் ஸந்நிஹிதமாயிருக்க தேஹத்தைப் பூண்கட்டிக்கொள்வதே! ஸம்ஸாரிகளென்கிறார்.

(வானித்யாதி) ஆகாசமத்யே நீர் கொண்டெழுந்துவந்து தோற்றுகிற மேகம்போன்ற வடிவழகை யுடையவனை. (வானிடைப்புயல்) என்கையாலே-†நிராலம்பநனாயிருக்கிறவென்னை நிர்ஹேதுகமாக வந்து விஷயீகரித்தவனை யென்கிறார். (மாலை) அதுக்கடியான வ்யாமோஹம். (வரையிடை யித்யாதி) மலையிலே தேனீக்களாலே உத்பாதிக்கப்பட்ட தேனே நீராகவளர்ந்த கரும்பின் சாறுபோலே போக்யனானவனை. (திருவினை) உத்க்ருஷ்டமாய் நிரவதிகமான ரஸவஸ்துவுக்குப் பெரிதுபோலே; † உத்க்ருஷ்ட வஸ்துவுக்

---

அந.—எட்டாம்பாட்டு.—(வானிடை) நிராலம்பநமான ஆகாசத்தை மேகம்பற்றினாற்போலே அகதியானவென்னையும் விஷயீகரித்தானென்றபடி. பிரசம் - தேனீ. ரஸவஸ்து - பிராட்டி. கீழ்வாக்யவிவரணம். (உத்க்ருஷ்டவஸ்துவித்யாதி.)

---

(க) தி-மொ-எ-ச-க.

கும், உத்க்ருஷ்ட வஸ்துவிறே. (க) "திருவுக்குந் திருவாகிய" (உ) "ஶ்ரிய: ஶ்ரிய:-கஶ்ரீஶ்ஶ்ரிய:" என்னும்படியே. (திருவினை மருவி வாழார்) வாழுகைக்குநேர்த்தி அவன்மேல்விழ விலக்காதொழிகை. உங்களுக்கு நான் வேணுமென்ன, எங்களுக்கு நீவேண்டாவென்னு மவர்கள்.

† (மாணிடப்பிறவி) புருஷார்த்தோபயோகியான ஶரீரத்தை உதாஸீநிப்பதே! அன்றிக்கே, இச்சரீரத்தில் தோஷத்தை யுணரா தொழிவதே! என்னவுமாம். இத்தை தேவசரீரமாக நினைத்திருப்பார்க ளென்னவுமாம். (அந்தோ) ஐயோ? என்று இவர்களிழவுக்குவெறுக்கிறார். (கொள்க) நிஶ்சிதம்.

(தந்தமித்யாதி) த்ருடமின்றியே அப்போது போயிற்று இப்போது போயிற்று என்றும், மின்னிலும் நிலையற்றிருக்கிற இச்சரீரத்துக்குப் பூண்கட்ட வே தேடுவர்கள். ... ... ... (அ)

மூ.—உள்ளமோ வொன்றினில்லா தோசையிலெரிநின்றுண்ணும்
கொள்ளிமேலெறும்புபோலக்குழையுமாலென்றனுள்ளம்
தெள்ளியீர்தேவர்க்கெல்லாந்தேவராயுலகங்கொண்ட
ஒள்ளியீரும்மையல்லாலெழுமையுந்துணையிலோமே. (௯)

பதம்.—உள்ளமோ, ஒன்றில்நில்லாது, என்றனுள்ளம், ஓசையில், எரி, (டு) நின்று, உண்ணும், கொள்ளிமேல், எறும்புபோல, குழையும், (க0) தெள்ளியீர், தேவர்க்கெல்லாம், தேவராய், உலகம்கொண்ட, ஒள்ளியீர், (கடு) எழுமையும், உம்மையல்லால், துணையிலோம். (கஅ) (௯)

உரை.—(என்)மநஸ்ஸோ, (ஒருவிஷயத்தில்) பொருந்தியிருக்கிறதில்லை; என்மநஸ்ஸானது, சப்தத்தை யுடைத்தான, அக்நியானது, (டு) ஒருபடிப்பட நின்று, க்ரஸிக்கிற, நெருப்பின்மேலேயிருக்கிற, எறும்புபோலே, (ஜந்மத்தை நினைத்து), சிதிலமாகாநின்றது; (க0) தெளிந்த ஸ்வபாவத்தையுடையீராய், தேவர்களுக்கெல்லாம், தேவனை யிருந்துவைத்து, லோகத்தை (மஹாபலிபக்கலிலே நீரேற்று) வாங்கி, தேஜஸ்ஸையுடையவரே! (கடு) எல்லா வவஸ்த்தைகளிலும், தேவரீரையொழிய, வேறு துணையில்லாதவர்களாயிராநின்றோம். (கஅ) ஆல் என்பது விஷாதத்யோதகமான அவ்யயம். (௯)

அரு·—மானிடப்பிறவி-சாஸ்த்ராதிகாரமான தேஹமென்னுதல்; தோஷயுக்தமான தேஹமென்னுதல்; அஸ்த்திரமான தேஹமென்னுதல். மதிக்கிலர்-இம்மூன்றுகாரத்தையும் நினைக்கிறிலர், இது நிஶ்சயம். இப்படி மூன்றர்த்தமாகவன்றிக்கே கீழிரண்டர்த்தத்தாலும் பலிதத்தை யருளிச்செய்கிறார் (இத்தைதேவசரீரமித்யாதி.) (அ)

(க) தி-மொ-௮-எ-க. (உ) ஸ்தோ - ௩-கஉ.

வ்யர.—அவ.—ஒன்பதாம்பாட்டு. (உள்ளமித்யாதி) என்ஹ்ருதயமானது ஜநநமரணங்களை நினைத்து உருகாநின்றது, எனக்கு தேவரீரையொழியத் துணையில்லையென்கிறார்.

(உள்ளமோவொன்றில் நில்லாதித்யாதி) ஹ்ருதயமானது ஓரிடத்தே தரியாதே, ஓசையையுடைத்தான எரிகின்று உண்ணாநின்ற கொள்ளியினுள்ளெறும்புபோலே (க) * உருவார் பிறவியைநினைத்து (க) * இருபாடெரி கொள்ளியினுள் ளெறும்பேபோல உருகி சிதிலமாகாநின்றது. ஒருதலை மரணம், ஒருதலை ஜந்மமிறே. (குழையுமால்) இவன் சைதந்யத்துக்கு ப்ரயோஜநம், இது பொல்லாது என்றறிகை, அவன்சைதந்யத்துக்கு ப்ரயோஜநம் அப்படி செய்கை, அதாவது - ரக்ஷிக்கையிறே.

(தெள்ளியீர்) இத்தலையில் கலக்கத்துக்கு எதிர்த்தட்டான தெளிவுடையாரைப் பற்றுகிறார். (தெள்ளியீரித்யாதி) மஹாபலி ஔதார்யத்துக்கும் குறைவு வாராமே தன்னை ஆஶ்ரயித்த இந்த்ரனுடைய கார்யத்துக்கும் குறைவுவாராமே கார்யம்பார்த்ததெளிவு. தேவர்க்கெல்லாந் தேவராயிருந்துவைத்து (உ) * அலம்புரிந்த நெடுந்தடக்கையைத் தாழ ஏற்று, பூமியை யளந்துகொண்ட. (ஒள்ளியீர்) இந்த்ரன் ப்ரயோஜநாந்தரபரனாகிலும் நம்கை பார்த்திருந்தானென்னுமத்தாலே வடிவில்பிறந்த புதுக்கணிப்பு. அவன் இவன் கைபார்த்திருக்கையிறே இவன் காலாவிளம்பமாகக் கார்யம்செய்தது. (உம்மையல்லா லித்யாதி) எங்களுக்கு நாங்களும் தஞ்சமல்ல, பிறரும்தஞ்சமல்ல, உம்மையேதஞ்சமாக வுடையோம்; கோல்துணையா யிருப்பார் சிலரன்றே. அவஸ்த்தாந்தரத்தை ப்ராபித்தாலும் (௩) * அரங்கத்துறையு மின்துணைவனையே துணையாகப் போமவரிறே. (கூ)

---

அரு.—ஒன்பதாம்பாட்டு.—(உள்ளமோ) சேதநனுக்கு இருபாடெரிகிறதேதென்ன; அருளிச்செய்கிறார் (ஒருதலையித்யாதி). அப்படிசெய்கை - அகாரப்படியே செய்கை.

(ஒள்ளியீர்) ஒண்மை - அழகு; இந்த்ரன் கைபார்த்திருந்தானென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (அவனிவனித்யாதி.) காலாவிளம்பம் - சடு. இவருக்கு அவனையொழியத் துணையில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (கோல்துணையாயித்யாதி). ... ... ... (கூ)

---

(க) திருமொ - ௧௧ - அ - ௪.  (௩) திருமொ - ௩ - ௭ - ௬.
(உ) திருநெ - ௩

மூ.—சித்தமும்செவ்வைநில்லாதென்செய்கேன் தீவினையேன்
பத்திமைக்கன்புடையேனுவதேபணியாயெந்தாய்
முத்தொளிமரதகமே முழங்கொளிமுகில்வண்ணு, என்
அத்த நின்னடிமையல்லால் யாதுமொன்றறிகிலேனே. (கO)

பதம்.—தீவினையேன், சித்தமும், செவ்வைநில்லாது,என்செய்கேன்,எந்தாய், (௫) பத்திமைக்கு, அன்புடையேனுவதே, பணியாய், முத்து, ஒளி, (கO) மரதகமே, முழங்கு, ஒளி, முகில்வண்ணு, என் அத்த, (க௫) நின்னடிமையல்லால், யாதொன்றும், அறிகிலேன். (கஅ) (கO)

உரை.—மஹாபாபியான வென்னுடைய, மநஸ்ஸு, செவ்வையாக, (தரித்து) நிற்க மாட்டுகிறதில்லை; என்னசெய்யப் புகுகிறேன்; எனக்கு உபகாரகனுனவனே! (௫) (உன் விஷயமான) பக்தியிலே, விஸ்வாஸ முடையேனும்படி, செய்ய வேணும்; முத்துப்போலே குளிர்ந்தவனுய், ஒளியையுடைத்தான, (கO) மரதகம்போலே ஸ்லாக்யமான நிறத்தையுடையவனே! முழங்காநிற்பதாய், ப்ரகாசத்தை யுடைத்தான, மேகத்தின் நிறத்தையுடையவனே! எனக்கு ஸ்வாமியானவனே! (க௫) உன் திருவடிகளில் கைங்கர்யமொழிய, வேறொன்றையும், அறியாதவனுயிராநின்றேன். (கஅ) (கO)

வ்யா.—அவ.—பத்தாம்பாட்டு. (சித்தமுமித்யாதி) ஸம்ஸாரத்தையஞ்சி உன்திருவடிகளைப் பற்றினவளவேயோ, திருவடிகளிலே பரமபக்தியுமுண்டாயிற்றென்கிறுர்.

(சித்தமும் செவ்வைநில்லாது) நீஞ்சப்புக்கு வாய்கரையிலே தெப்பமிழப்பாரைப்போலே அநுஸந்திக்கப் புக்கால் தரித்து நிற்கமாட்டுகிறதில்லை நெஞ்சு. (என்செய்கேன்தீவினையேன்) பக்திபாரவஶ்யத்தாலே அநுபவிக்கப் போகாதபடி பாபத்தைப்பண்ணினேன். என்செய்கேனென்று-செயல்மாட்சி; உத்தேஶ்யவிரோதி பாபமாமத்தைப்பற்ற (தீவினையேன்) என்கிறுர். (பத்திமைக்கன்புடையே னுவதே பணியாயெந்தாய்) † (க) "என்ற ளளவன்றுல் யானுடைய வன்பு" என்னும்படியே † நூற்பிடித்த பக்தியை † அளவாக்கவேணும். (எந்தாய்) பக்தியை யுண்டாக்கின நீயே அளவு படுத்தவேணும்.

---

அரு.—பத்தாம்பாட்டு.—(சித்தமும்) அன்புடையே னுவதே பணி - (அளவன்றுல்) என்று - அளவிறந்த பக்தியை மாற்றி; (நூல்பிடித்த) செவ்வே அநுபவிக்கும்படி பக்தியை, (அளவாக்க) - மட்டமாக்க வேணுமென்றபடி. ... ... ... ... ... ... ... (கO)

---

(க) உ - தி - கOO.

(முத்தொளி மரதகமே) பக்திஜநகமான வடிவு முத்தினுடைய குளிர்த்தியையும் மரதகத்தினுடைய ஶ்யாமதையையுமுடைத்தாயிருக்கை. (முழங்கொளி முகில்வண்ணா) மின்னி முழங்கி வில்விட்டு ஸஞ்சரிப்ப தொருமேகம்போன்ற நிறத்தை யுடையவனே! (என்அத்த) அழகுக்குத் தோற்று என்னையனென்கிறார். நீர், சித்த முஞ்செவ்வை நில்லாதென்பது, தீவினையேனென்பதாய்க் கிடந்து என்றியபடுகிறீர், இத்தைவிட்டு வேறொன்றுண்டோ போதுபோக்கினாலோவென்ன (நின்னடிமையித்யாதி) உன் திருவடிகளில் கைங்கர்யமொழிய வேறொன் றறியேன். (க) "மறந்தே னுன்னை முன்னம்" என்றது போக்கி, (உ) "ஏது செய்தால் மறக்கேன்" என்னும்படி பண்ணிவைத்தபின்பு வேறொன்றை யறிய விரகுண்டோ? (கo)

மூ.—தொண்டெல்லாம்பரவி நின்னைத் தொழுதடிபணியுமாறு
கண்டு, தான்கவலைதீர்ப்பானவதேபணியாயெந்தாய்
அண்டமாயெண்டிசைக்குமாதியாய்நீதியான
பண்டமாம்பரமசோதி நின்னையே பரவுவேனே. (கக)

பதம்.—தொண்டெல்லாம்பரவி, நின்னைத்தொழுது, அடிபணியுமாறு, கண்டு, தான் கவலைதீர்ப்பானவதே, (ஙு) எந்தாய், பணியாய், அண்டமாய், எண்டிசைக்கும், ஆதியாய், (கo) நீதியானபண்டமாம், பரமசோதி, நின்னையே, பரவுவேன். (கச) (கக)

உரை.—அடிமைகளையெல்லாம்பேசி, உன்னை ஸேவித்துத், திருவடிகளை வணங்கும் ப்ரகாரத்தை, மநோரதித்துத், தானே தன் மநோதுஃகத்தைத் தீர்த்துக்கொள்ளப்போமோ? (ஙு) எனக்கு ஸ்வாமியானவனே! அருளிச் செய்யவேணும்; அண்டாந்தர்வர்த்திகளுக்கும் நிர்வாஹகனாய், எட்டுத்திக்கிலுமுள்ள தேவதைகளுக்கும், காரணபூதனாய், (கo) முறைதப்பாததநமாய், பரஞ்ஜ்யோதிஃஶப்தவாச்யனான, உன்னையே, அடைவுகெட ஸ்தோத்ரம் பண்ணுவேன். (கச) (கக)

வ்யா —பதினோராம்பாட்டு.(தொண்டெல்லா மித்யாதி) செய்யுமடிமையெல்லாம் அடைவுகெட்டுப் பேசி. (ங) "అహంసర్వం కరిష్యామి-அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" என்னும்படியே. (நின்னைத் தொழுது) உன்னைக்கண்டுவைத்து அடைவுபடத்தொழப்போமோ?

---

(க) தி-மொ-சு-௨-௨. (உ) தி-மொ-கூ-ங-ங.
(ங) ரா-அயோ-ஙக-௨௫.

†(அடிபணியுமாறுகண்டு) தப்பாமே மநோரதித்து.(தான்கவலைதீர்ப்பானுவதே) தன்னாலே மநோதுஃகத்தைத் †தீர்த்துக்கொள்ளலாமே? என்னாலே மனக்கவலை போக்கி அடிமைசெய்யப் போமோ? மனக்கவலை தீர்ப்பார் அவரிறே. (பணியாயெந்தாய்) நிர்வாஹகனை நீயே அருளிச்செய்யாய்.

(அண்டமாயித்யாதி) அண்டாந்தர்வர்த்திகளுக்கும் நிர்வாஹகனாய், எட்டுத்திக்கிலுள்ள தேவதைகளுக்கும் காரணமாய், முறை தப்பாதபடி. (பண்டமாம்) தநமாம். பண்ட மென்பது - தநம். இவ்வாத்மாவுக்கு தநமானவனே! (பரமசோதி) பரஞ்ஜ்யோதிஸ் ஸப்தவாச்யனானவனே! (நின்னையேபரவுவேனே) உன்னையே யடைவுகெட ஸ்தோத்ரம் பண்ணுமத்தனை. ... (கக)

மூ.—ஆவியை யரங்கமாலை யழுக்குடம்பெச்சில்வாயால்
தூய்மையில்தொண்டனேன்நான் சொல்லினேன் தொல்லைநா
பாவியேன் பிழைத்தவாறென்றஞ்சினேற்கஞ்சலென்று [மம்
காவிபோல்வண்ணர்வந்தென்கண்ணுள்ளேதோன்றினாரே.

பதம்.—ஆவியை, அரங்கம், மாலை, அழுக்குடம்பு, எச்சில்வாயால், (கு) பாவியேன், தொல்லைநாமம், சொல்லினேன், தூய்மையில், தொண்டனேன் நான், (க௦) பிழைத்தவாறென்று, அஞ்சினேற்கு, அஞ்சலென்று, காவிபோல் வண்ணர் வந்து, என்கண்ணுள்ளே தோன்றினார். (கரு) (கஉ)

உரை.—ப்ராணபூதனாய், கோயிலிலே எழுந்தருளியிருக்கிற, (ஆஸ்ரித) வ்யாமுக்தனான ஸர்வேஸ்வரனை, அபரிசுத்தமான சரீரத்தையுடையனாய், (பரஸ்துதியாலே,) அபரிசுத்தமாய்க் கிடக்கிறவாயாலே, (கு) மஹாபாபியான நான்,அநாதி ஸித்தமான பெரியதிருமந்த்ரத்தைச்,சொன்னேன், அபரிசுத்தனாய், (விஷயங்களிலே) சபலனானநான், (க௦) தப்பச்செய்தேனென்று, பயப்பட்ட வெனக்கு, அஞ்சாதேகொள்ளென்று, கருநெய்தல்நிறத்தையொத்த வடிவையுடைய ஸர்வேஸ்வரன் வந்து, என் கண்ணுக்குள்ளே ப்ரகாசித்தார். (கரு) (கஉ)

வ்யா.—அவ—பன்னிரண்டாம்பாட்டு. (ஆவியை யித்யாதி) †உபயவிபூதியையு மழிக்கப்புக்கே னென்கிறார்.

---

அரு.—பதினோராம்பாட்டு.— (தொண்டெல்லாம்) அடிபணியு மாறுண்டு - திருவடிகளிலே வணங்குகிற ப்ரகாரத்தை மநோரதித்து. கொள்ளலாமே - கொள்ளப்போமோ. ... ... ... ... (கக)

†பன்னிரண்டாம்பாட்டு.—(ஆவியை) (உபயவிபூதி) ஆவியை என்கையாலே அவ்விபூதி தோற்றுகிறது.

(ஆவியை) (க) * உலகங்கட்கெல்லா மோருயிரானவனை. (அரங்கமாலை) கண்ணுக்குத் தோற்றுதபடி நின்று தாரகமாகை யன்றிக்கே, கண்ணாலேகாண வ்யாமோஹந்தான் ஒருவடிவென்ன லாம்படி யிருக்கை. (அழுக்குடம் பெச்சில்வாயால்) எத்தனைபேர் காலிலே விழுந்தது, எத்தனைபேரை ஸ்தோத்ரம் பண்ணிற்று. (தூய்மையில் - நான்) தப்பச் செய்தோ மென்கிற அநுதாபமு மில்லாத நான். (தொண்டனேன் நான்) கண்டதெல்லாவற்றிலும் தொண்டுபட்டுத் திரிந்த நான். (சொல்லினேன் தொல்லைநாமம்) † நித்ய ஸூரிகள் இனிஎன்கொண்டு ஜீவிக்கக்கடவர்கள்? சொல்லியற்றது. இத்க்கு முன்பு அழிந்தறியாததொன்று, (உ)* நமோ நாராயணாய வென்று பல்லாண்டுபாடி ஜீவிக்கக்கடவர்கள், இனி என் கொண்டு ஜீவிக்கக்கடவர்கள்?

(பாவியேன் †பிழைத்தவாறென் றஞ்சினேற்கு) தொல்லைநாமத்தை நான் சொல்லி விடுகையன்றிக்கே, (ந) "நானும் சொன்னேன் நமரு முரைமின்" என்று இப்படி அழிப்பாருண்டோ? ஸாத்விகனாயிருப்பா னொருவன், ரஜஸ்ஸு தலையெடுத்து மத்யராத்ரத்திலே க்ருஹத்திலே நெருப்பைவைத்து ஸத்வம் தலை யெடுத்தவாறே அநுதபிக்குமாபோலே, பாவியேன் நான் தப்பினேனென்று அஞ்சினேனுக்கு. (அஞ்சலென்று) உன்கார்யம் உனக்கே பரமோவென்று, (ச) "மாஶுச:-மாஶுச:" என்று அஞ்சாதே யென்று. (காவிபோல் வண்ணர்வந்து) வடிவழகைக் காட்டி மருந்தை யிட்டுப் பொருந்தவிட்டார். (காவி) கருங்குவளை. இவ்வடிவை நம் கண்ணாலே நோக்கி யழிக்க வொண்ணாதென்று † கண்ணைச் செம்புளித்தேன். (கண்ணுள்ளே தோன்றினாரே) கண்ணுக்குள்ளே தோன்றினார். இவர்கண் செம்புளித்துப் பார்க்கிறதெப்போதோ வென்று பார்த்திருந்தான்போலேகாணும் அவனும். ... ... (கஉ)

---

அரு.—தொல்லைநாமம் என்கையாலே - நித்யஸூரிகளநுபாவ்யம் தோற்றுகிறது.

பிழை - தப்பு. கண்செம்புளிக்கை - ஸ்வயத்நமறுகை. ... (கஉ)

---

(க) திருவாய் - அ - க-ரு. (உ) திருப்பல்லாண்டு - கஉ.
(ந) தி - மொ - ரு - க0-ரு. (ச) கீதை - கஅ - ருரு.

யிருக்கும். கர்மபந்தநமாகப் பார்த்தால் பயஸ்தாநமா யிருக்கும்; (க) "జగత్సర్వం శరీరం తే-ஜகத்ஸர்வம்சரீரம்தே" என்கிறபடியே பக வச்சரீரத்வாகாரத்தாலே பார்த்தால் உத்தேஶ்யமா யிருக்கும். (மூவ ருமேயென்னநின்ற)பஹுநாயகம் ஜகத்து என்கிறதைத் தவிர்த்துக் † குறுகவிட்டு வைத்தார்களிறே - சிலவேதாந்திகள். ஆராத்யராய்த் தோற்றுகிறவர்க ளடைய நிஷேதிக்கவேண்டாதே நமக்கு நிஷேத் யர் இவராம்படி பண்ணித் தந்தாரென்னை. பூர்வகாண்டத்திலே (உ) "త్రింశచ్చ దేవా నవ చాసపర్యా త్రీణి శతా త్రీ సహస్రాణ్యగ్నిమ్-த்ரிம்சச்சதேவாநவசாஸபர்யந்த்ரீணிசதாத்ரீஷஹஸ்ராண்யக்நிம்" என்று - மூவாயிரத்து முந்நூற்று முப்பத்தொன்பது தேவதைகளை ஆஶ்ரயணீயராகச் சொல்லக் கடவதிறே. வேதாந்திகள், ஜகத்கா ரண வஸ்துவே ஆஶ்ரயணீயம் என்றிறே சொல்லுவது; அதில் ஸ்ரு ஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் நக்குக்கடவார் மூவராகையாலே இவர் கள்மூவருமே ஆஶ்ரயணீயரென்பார்கள். (என்னநின்ற) என்கையா லே - ஆபாதப்ரதீதியிலே ஸாம்யம்தோற்றுகையாலே ஆஶ்ரயணீய ராய்த்தோற்றுமித்தனையொழிய நிரூபித்தால் ஸாம்ய ஸம்பாவனையு மில்லையென்கை. (ங)† "బ్రహ్మవిష్ణుశివాత్మికాం సంజ్ఞాం యాతి భగవానేకః-ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகாம்ஸஞ்ஜ்ஞாம்யாதிபகவாநேக:" என்று-ஆபாத ப்ரதீதியிலே ஸாம்யம் தோற்றுகையும், (ங) "జనార్దనః-ஜநார்த்தந:" என்று - விஷ்ணுசப்தத்தோடு † பர்யாயமான ஜநார்த்த நசப்தத்தைச் சொல்லுகையாலே பரிஹ்ருதமாகக் கடவதிறே.

(இமையவர்) இதுவுமொரு ப்ரமேயம். அநிமிஷத்வாகாரம் ஒத்திருக்கையாலும், தேவசப்தத்தாலே சொல்லுகையாலும், ஸாம் யப்ரமத்துக்கு ஏகாந்தமாயிருக்கை. அநிமிஷத்வம் தேவவர்க்கத் துக்கெல்லாம் பொதுவாயிருக்கையாலும், (ச) "సాక్షాద్దేవః పురాణోసౌ-ஸாக்ஷாத்தேவ: புராணோஸௌ" என்று - நிருபாதிகதேவ த்வம் ஒருவ்யக்தியிலேகிடக்கையாலும், ஸாம்ய ஸம்பாவனையில்லை.

---

(† குறுகவிடுகை) - மூவருமேப்ரதாநரென்கை. மேலெழ ஸாம்யமாய் விசார்யமான விஷ்ணுவொருவனுமேயாயிருக்குமோ வென்ன; அருளிச் செய்கிறார் (ப்ரஹ்ம விஷ்ணு சிவாத்மிகாமித்யாதி). ஜநார்த்தநசப்தம் ரூடி யாக விஷ்ணுவாசகமாகையாலே (பர்யாயம்)என்கிறது.

---

(க) பா-யு-கசஎ.
(உ) யஜு.
(ங) வி-பு-க-உ-கூசு.
(ச) வி-பு.

(தந்திருவுருவேறெண்ணும்போது) அவ்வோருடைய †ஸ்வபாவங்களைப்பிரித்து அநுஸந்திக்கும்போது ப்ரமயோக்யதை யுண்டென்கை. தமக்கு நிஷேத்யராயிருக்கிறவர்கள் சரீரங்களைப்பற்றி, (திருவுரு) என்று-ஶ்லாகித்துச் சொல்லுவானென்னென்னில்; அவர்களுடைய ஸ்வரூபத்தோபாதி அவர்கள் சரீரம் ஈஶ்வர சரீரமாகையாலே தத்வாராபேசுகிறுர். (வேறெண்ணும்போது)†கூட அநுஸந்திக்கும்போதிறே இருவர்சேஷமாய் ஒருவன் சேஷியாயிருப்பது. (க)†"அரியயனரனென்னு மிவரை † ஒன்ற நும்மனத்துவைத்து" என்னக்கடவதிறே.

(ஒருருவ மித்யாதி) ப்ரமஹேதுவான அஸாதாரணஸ்வபாவங்களைச் சொல்லுகிறது. (ஒருருவம் பொன்னுருவம்) ப்ரஹ்மாவினுடைய ஸ்வபாவம் பொன்னின்ஸ்வபாவம். பொன்னாவது - ஸர்வாபரணங்களும் பண்ணுகைக்கு யோக்யமாயிறே யிருப்பது; அப்படியே சதுர்த்தச புவநத்தையும் ஸ்ருஷ்டிக்கைக்கு யோக்யமென்று தோற்றியிருக்கும்; பத்நாத்ம ஸமஷ்டி பூதனாகையாலே. ஸ்வசரீரத்தினின்றுமிறே ஸகலபதார்த்தங்களும் உத்பந்நமாவது. (ஒன்று செந்தீ) ஒருதத்வத்தினுடைய ஸ்வபாவம் காலாக்நியினுடைய ஸ்வபாவம். அக்நிக்கு ஸ்வபாவம் ஸர்வத்தையும் தஹிக்கையிறே; அப்படியே ருத்ரனுடைய ஸ்வபாவத்தைப்பார்த்தால் ஜகத்தை உபஸம்ஹரிக்கைக் கீடாயிருக்கும். (ஒன்று மாகடலுருவம்) கண்டார்க்கு ஶ்ரமஹரமாயிருக்கையும், துஷ்டஸத்வங்களோடு அதுஷ்டஸத்வங்களோடு ரத்நாதிகளோடு வாசியற ஸகலபதார்த்தங்களையும் தன்னுள்ளேயிட்டுவைத்து ரக்ஷிக்கும் ஸ்வபாவமிறே - கடலின் ஸ்வபாவம்; அப்படியே ஈஶ்வர ஸ்வரூபத்தையும்பார்த்தால் ஆஶ்ரயித்தார்க்கு ஶ்ரமஹரமாயிருக்கையும், ஆஶ்ரயித்தாரைத் தன்னபிமாநத்திலே யிட்டுவைத்து ரக்ஷிக்கைக்கு யோக்யனென்று தோற்றியிருக்கையும். மூன்றுமுண்டானவிடத்தேயிறே - ஜகத்காரணத்வமுள்ளது; மூவர்பக்கலிலே மூன்றுஸ்வபாவமும் கிடக்கையாலே மூவரையும் ஜகத்காரணதயாப்ரமிக்கலாயிருக்கை.

---

(ஸ்வபாவம்). ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரம். (வேறெண்ணும்போது) - வேறு-தனித்தனியே, அவ்வவவ்யாபாரத்தையிட்டு எண்ணும்போது ப்ரமயோக்யமாய்(கூட) சரீரசரீரிபாவத்தாலே ஐக்யமாக அநுஸந்திக்கும்போது என்றபடி. ஐக்யமாக விசாரித்தால் ப்ரமமன்றிக்கே அவனேயாகத்தோற்றுமோவென்ன; அருளிச்செய்கிறுர் (அரியயனித்யாதி). (ஒன்ற)-ஐக்யமாக.

---

(ச) தி-வாய்.

(ஒத்துநின்ற) சேர்ந்துநின்ற. அதாகிறது - அவ்வோஸ்வபாவங்கள் அவ்வோருடைய ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களோடே சேர்ந்திருக்கை. அநந்தரம் ப்ரமநிவ்ருத்திசொல்லுகிறது (மூவுருவுங்கண்டபோது) மூன்றுதத்வத்தையும் ப்ரமாணத்தாலே கண்டபோது. (ஒன்ருஞ்சோதி) அவற்றில்வைத்துக்கொண்டு ஒன்றேயாம்சோதி. உத்பாதகமாயும், சரீரியாயும், சேஷியாயு மிருக்கும் தேஜஸ்ஸூ ஒன்றே, அல்லாதவையிரண்டும் உத்பாத்யமாயும், சரீரமாயும், சேஷமாயுமிருக்கும். எங்கேகண்டோமென்னில்; (க) "ఏకో హ వై నారాయణ ఆసీత్ -ஏகோஹவைநாராயண ஆஸீத்" என்று - ஜகத்காரணவஸ்துவைச்சொல்லி, (க) "న బ్రహ్మా నేశానో నేమే ద్యావాపృథివీ-நப்ரஹ்மாநேசாநஃநேமேத்யாவாப்ருதிவீ" என்று அசேதநமான ப்ருதிவ்யாதிகளோபாதி ப்ரஹ்மருத்ராதிகளையும் ஸம்ஹாரத்திலே †கர்மீபவிக்கச் சொல்லுகையாலும், (உ) "స బ్రహ్మా స శివః-ஸப்ரஹ்மாஸசிவஃ" இத்யாதிகளாலே இவர்களுடைய க்ஷேத்ரஜ்ஞத்வசேஷத்வத்தைச் சொல்லுகையாலும், (ங) "ఏష సర్వభూతాన్తరాత్మా-ஏஷஸர்வபூதாந்தராத்மா" என்று - ஸர்வசப்தத்தாலே க்ரோடீக்ருதமான வ்யாப்யபதார்த்தங்களிலே அந்யதமராகையாலும், கார்யத்வமும், †க்ஷேத்ரஜ்ஞத்வமும், சேஷத்வமும், சரீரத்வமும், ஸம்ப்ரதிபந்நமென்கை. (ஆம்சோதி)என்கையாலே-நிர்வாஹ்யஜ்யோதிஸ்ஸூக்களானஆத்மாக்களைவ்யாவர்த்திக்கிறது. சேதநரும்ஸ்வயம்ப்ரகாசராயிறே யிருப்பது. ஆகையாலிறே,(ச)"నారాయణపరో జ్యోతిః-நாராயணபரோஜ்யோதிஃ" என்றும், (ரு) "జ్యోతిషాం జ్యోతిః-ஜ்யோதிஷாம்ஜ்யோதிஃ"என்றும் சொல்லவேண்டிற்று. † மூவுருவும் கண்டபோதொன்ருஞ்சோதி) என்கிறது - ஏகத்ரவ்யவாதிகளுக்குச் சேருமாபோலேயிருக்கும், அது இவர்க்கு தர்சநமல்லாமையாலே பக்ஷமல்ல. இன்னமும், (சூ) "மின்னுருவாய்" என்றும், (சூ) "பின்னுருவாய்" என்

---

"மூவுருவும்" என்று - மூவருடையவடிவும் தோற்றுகையாலே ஸ்வபாவாநுகுணமானவடிவுங் கொண்டானென்றபடி. கர்மீபவிக்கை - விஷயமாகை. க்ஷேத்ரஜ்ஞனை இந்த்ரனேடே ஸஹபடிக்கையாலே இவர்களுக்கும் க்ஷேத்ரஜ்ஞத்வம்ஸித்தம். ஒன்று ஆம்சோதி என்று பிரித்துச் சொல்லாமல், (ஒன்ருஞ்சோதி) என்று மூன்றும் ஒன்ருய் விடுமென்று ஒன்ருகச் சொன்னலோ வென்ன ; அருளிச்செய்கிருர் (மூவுருவுங்கண்ட போதித்யாதி).

---

(க) மஹோபநி.
(உ). புருஷஸூ.
(ங.) ஸூபாலோப.
(ச) புருஷஸூ.
(ரு)
(சூ) க.

றும், (க) "பொன்னுருவாய்" என்றும் - தத்வத்ரயங்களை அலகலகாசப் பிரித்துச் சொல்லுகையாலும், இப்பாட்டிலே, (ஏருரு) என்று - சரீராத்மபாவத்தைச் சொல்லுகையாலும், (உ) "இந்திரர்க்கும் பிரமர்க்கும் முதல்வன்றன்னை" என்று மேலேசொல்லுகையாலும் ப்ரகரணவிரோதமுமுண்டு.

(எம்மடிகளுருவம்-முகிலுருவம்) என்ஸ்வாமிகளுடைய வடிவு காளமேகநிபஶ்யாமமாயிருக்கும். அங்கு - † ரக்ஷகனென்கைக்காக, (ஒன்று மாகடலுருவம்) என்று - கடலின்ஸ்வபாவத்தைச் சொல்லிற்று; இங்கு - வடிவைச் சொல்லுகிறது. இவ்வடிவிலே ‡ஸர்வாதிகத்வத்துக்கு அடையாளமாயிருப்பது. (தானே) (க) † "மணியுருவிற்பூதமைந்தாய்" என்ற வடிவுதான் காளமேக நிபஶ்யாமமாய்க்கிடேர் இருப்பது. அங்கு - "மணியுரு" என்றுசொல்லிற்று - முன்தானையில்லை முடிந்தாளலாம்படி பவ்யமாயிருக்கையாலும், ப்ரகாசகமாயிருக்கையாலும், மஹார்க்கமா யிருக்கையாலும், போக்யமா யிருக்கையாலும்.

[ஏருருவில் மூவருமே யென்னநின்ற விமையவர்தம் திருவுருவேறெண்ணும்போது - ஒருருவம்பொன்னுருவம்; ஒன்று செந்தீ; ஒன்றுமாகடலுருவம்; ஒத்துநின்ற, மூவுருவுங்கண்டபோது - பாருருவி நீரெரிகால்விசும்புமாகிப் பல்வேறுசமயமுமாய்ப் பரந்துநின்ற - ஒன்ருஞ்சோதி முகிலுருவம் எம்மடிக ளுருவந்தானே] என்றந்வயம். ... ... ... ... ... ... (உ)

மூ.—திருவடிவில்கருநெடுமால்சேயனென்றும்
திரேதைக்கண் வளையுருவாய்த்திகழ்ந்தானென்றும்
பெருவடிவில்கடலமுதங்கொண்டகாலம்
பெருமானைக்கருநீலவண்ணன்றன்னை
ஒருவடிவத்தோருருவென்றுணரலாகா
ஊழ்ந்தோறாழிநின்றேத்தலல்லால்
கருவடிவிற்செங்கண்ணவண்ணன்றன்னைக்
கட்டுரையேயாரொருவர்காண்கிற்பாரே. (ங)

---

† (ஒன்று மாகடலுருவமென்றதே யென்ன; அருளிச்செய்கிருர் (ரக்ஷகனித்யாதி). வடிவுதான் சொல்லவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிருர் (ஸர்வாதிகத்வத்துக்கித்யாதி). அதுதானும் (மணியுரு) என்றதே என்ன; அருளிச்செய்கிருர் (மணியுருவிலித்யாதி). ... ... ... (உ)

---

(க) ௧.  (உ) ௪.

பதம்.—கரு, நீலவண்ணன்தன்னை, பெருமானை, திருவடிவில், கரு நெடுமால், (கு) திரேதைக்கண், சேயனென்றும், பெருவடிவில், கடல், அமு[illegible]ம் கொண்ட காலம், (ю) வளையுருவாய், திகழ்ந்தான் என்றும், வாழி தோறுநின்று[illegible]த்தலல்லால், ஒருவடிவென்று, (கடு) ஓ[illegible]வெ[illegible], உரைப லாகா, கருவடிவில், செம்பவ்வண்ணவண்ணன்தன்னை, யாரொருவர், (உக) காண்கிற்பார், கட்டுரை. (உஉ)

உரை.—வர்ணங்களில், ஸ்வாபாவிகமான நீலவர்ணத்தையுடையவனை, ஸர்வேச்வரனை, அஸாதாரணவிக்ரஹத்தில், நீலவர்ணமுடையனாய்க்கொண்டு (க்ருஷ்ணாவதாரத்தில்) பெரிய வ்யாமோஹத்தையுடையவன், (கு) த்ரேதாயுகத்தில், சிவந்த நிறத்தையுடையனாயிருப்பனென்றும், பலவடிவுகளையுடையனாய்க்கொண்டு, ஸமுத்ரத்தில் நின்றும், அம்ருதமெடுத்த காலத்திலே (க்ருதயுகத்திலே), (ю) சங்கத்தினுடைய (வெண்மையான) ரூபத்தையுடையனாய், விளங்கினானென்றும், (இப்படி) ப்ரதிகல்பங்களிலும், இருந்து ஸ்தோத்ரம் செய்வதொழிய,ஒருபடிப்பட்ட விக்ரஹத்தையுடையவனென்றும்,(கு) ஒருவிதமான நிறத்தையுடையவனென்றும், அறியப்போகாது; நீலமான திருமேனியையும், சிவந்த திருக்கண்களையுமுடைய அந்த ஸர்வேச்வரனை, யார்தான், (உக) காணவல்லார்? (ஓ! மநஸ்ஸே!) சொல்லிக்காண்·(உஉ) (ங)

வ்யா.—மூன்றாம்பாட்டு. (திருவடிவில்) முதற்பாட்டிலே - விஷயாந்தரப்ராவண்யநிவ்ருத்தி தொடக்கமாக ஸ்வரூபமான சேஷசேஷித்வபர்யந்தமாக ஈச்வரன் தன்பேறாக ஸாக்ஷாத்கரிப்பித்த உபகாரத்தைக்கண்டு விஸ்மிதரானார்;†தாம் அபேக்ஷிக்க அவன் கார்யம் செய்யுமதின்றே ப்ராப்தமாயிருப்பது, தாம் விமுகராயிருக்க அவன்றானே மேல்விழுந்து கார்யஞ் செய்கையாலே விஸ்மயமாயிருக்குமிறே; இரண்டாம்பாட்டில் - அந்யசேஷத்வத்தை யறுத்துத் தந்தானென்றார்; †த்ரிமூர்த்திஸாம்ய ப்ரமத்தாலே ப்ரமித்தது அந்யசேஷத்வமிறே: இப்பாட்டில் - (க) "மணியுருவில் பூதமைந் தாய்" என்றும், (உ) "முகிலுருவம்" என்றும் - ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூபாச்ரயமான குணங்களுக்கும் ப்ரகாசகமாய் நிரதிசயபோக்

---

மூன்றாம்பாட்டு. (திருவடிவில்) அவன் தன்பேறாகச் செய்யாநிற்க விஸ்மயப் படவேண்டுவானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (தாம் அபேக்ஷிக்கவித்யாதி). த்ரிமூர்த்தி ஸாம்யநிவ்ருத்தியன்றோ, அந்யசேஷத்வநிவ்ருத்தி எங்கே சொல்லிற்றென்ன ; அருளிச்செய்கிறார் (த்ரிமூர்த்திஇத்யாதி).

---

(க) க-　　　　(உ) உ-

யமாய் காளமேக நிபஶ்யாமமா யிருக்கிற வடிவை ஆசாலேசமுடையார்க்கு ருச்யநுகுணமாக அழியமாறி உபகரிக்கும்படியையும், தமக்கு ஸ்வாபாவிகமான வடிவுதன்னையே நிர்ஹேதுக க்ருபையாலே காட்டித் தந்தபடியையும் கண்டு, நான் கண்டாற்போலே யார்காண வல்லாரென்கிறார். † பதிவ்ரதையானால் பர்த்ருஸம்ஶ்லேஷத்திலே இழியுமாபோலே, சேஷத்வஸித்தியுண்டாய் அநந்யார்ஹதையுண்டானால் பின்னை அநுபவத்திலே இழியுமித்தனையிறே. † ஸ்வரூபத்தைக் காற்கடைக்கொண்டு பற்றவேண்டும்படி யிருக்கும் குணங்கள், உபயத்தையுங் காற்கடைக்கொண்டு பற்றவேண்டும்படியிறே வடிவின்போக்யதை யிருப்பது. † § இத்தால் - வடிவை யநுபவிக்கிறார்.

(திருவடிவில்) வடிவிடையாட்டத்தில். கீழேசேஷத்வத்தினிடையாட்டமாகவும், அந்யசேஷத்வ நிவ்ருத்தியினிடையாட்டமாகவும் செய்தவைபோலே இவ்வடிவிடையாட்டத்தில் செய்தவை இவைகிடீரென்கிறார். (திருவடிவு) விலக்ஷணமான வடிவென்னுதல்; திருவினுடையவடிவென்னுதல். (வடிவு) என்ன அமைந்திருக்க, (திருவடிவு) என்கிறது - (க) "அகலகில்லேன் இறையும்" என்கிறபடியே - பிராட்டி "தண்ணீர் தண்ணீர்" என்னும்படியிருக்கிற துர்லபமான வடிவைக் கிடீர் நாட்டார்க்கு அழியமாறி முகங்கொடுத்தது என்று அவ்வடிவின் வைலக்ஷண்யம் தோற்றுகைக்காக.

அவ்வடிவை உபகரித்தபடியைச் சொல்லுகிறதுமேல். (கருநெடுமால்) காளமேகநிபஶ்யாமமான வடிவையுடையனாய் உபயவிபூதிக்கும் அவ்வருகான பெரியமேன்மையையுடையவன். இத்தால்-விலக்ஷணவிக்ரஹயுக்தனாய், ஸ்வயம்நிரபேக்ஷனாய், ஸர்வாதிகனாயிருக்குமவன்கிடீர் இப்படியானானென்கிறார். அதவா, (மால்) என்று - வ்யாமோஹமாய், அதிவ்யாமுக்தனென்னவுமாம். இத்தால் - இப்படியிருக்கிறவன் தன்னையழியமாறி முகங்காட்டுகைக்குஹேது ஆஶ்ரித வ்யாமுக்தனாகையாலே என்று ஹேதுவாகவுமாம்.

---

சேஷத்வஜ்ஞாநமுடையவர் அத்தலைக்கு அதிசயத்தைச் சிந்தியாமல் அநுபவத்திலே யிழிவானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (பதிவ்ரதையானாலித்யாதி). ஆனால் ஸ்வரூபகுணங்களிருக்க விக்ரஹத்திலே யிழிவானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (ஸ்வரூபத்தையித்யாதி). கீழ்வாக்யத்தால் பலிதமருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி).

---

§ (பா) ஆகையாலே. (க) தி-வாய்-சு-௰-௧௦.

(சேயனென்றும் திரேதைக்கண்) த்ரேதாயுகத்தில் வந்தால் சிவந்த வடிவையுடையவனா யிருக்கும். அக்காலத்திலே புருஷர்கள் ரஜஃப்ரசுரராகையாலே சிவப்பிலேயாயிற்று ருசியுண்டா யிருப்பது; அந்தருச்யநுகுணமாகச் சிவந்தவடிவைக்கொண்டு முகங்காட்டும். † ரஜஸ்ஸு சிவந்திருக்கக்கடவதாய், ஸத்வம் வெளுத்திருக்கக்கடவதாய் தமஸ்ஸு கறுத்திருக்கக்கடவதாயிறே யிருப்பது. (௧) "லோஹிதஶுக்லக்ருஷ்ணாம்-லோஹிதசுக்ல க்ருஷ்ணாம்" என்றிறே - ப்ரக்ருதிக்கு அஸாதாரணமான குணத்ரயத்தையும் சொல்லிற்று. சிவந்தவடிவை ப்ரதமத்திலேசொல்லிற்று-"லோஹிதசுக்லக்ருஷ்ணாம்" என்கிற ஶ்ருதிச்சாயையாலே யருளிச்செய்கிறாரென்னுமிடந்தோற்ற. † சேஷியுகப்புக்கு அநுகுணமாகச் சேஷபூதன் தன்வடிவை அமைக்கையன்றிக்கே சேஷபூதனுகப்புக்கநுகுணமாகச்சேஷி தன் வடிவை யழிய மாறுகிறானிறே; (௨) "தமருகந்ததெவ்வுருவம்" என்கிறபடியே. (என்றும், என்றும்) என்கிறவிவை (ஊழிதோறூழி நின்றேத்தலல்லால்) என்கிறவிடத்திலே அந்வயிக்கக்கடவது.

(பெருவடிவில் கடலமுதங் கொண்ட காலம்) க்ருதயுகத்தில் வந்தால், "திரேதைக்கண்" என்றவோபாதி க்ருதயுகமென்னாதே, (கடலமுதங் கொண்டகாலம்) என்கிறது - (திரேதைக்கண்) என்று †மலட்டுக்காலம்போலே யிருக்கையாலே பகவத் ஸ்பர்சியான காலமென்றருளிச்செய்கிறார்; அக்காலத்தில் பண்ணின வ்யாபாரம் தமக்கு அபிமதமாயிருக்கையாலே. †பெரியதிருநாளிலே ஆதரமுடை

---

சிவந்தவடிவைக் காட்டுகைக்கு ரஜஸ்ஸு சிவந்திருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ரஜஸ்ஸுசிவந்தித்யாதி) (சேயன்) என்று ஈடுபட வேண்டுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (சேஷியுகப்புக்கித்யாதி.) சேஷியுகப்புக்கு அநுகுணமாக வமைக்கை - (௩) "நிவாஸஶய்யாஸன - நிவாஸசய்யாஸந" இத்யாதி - (மலட்டுக்காலமென்றது) - த்ரேதா யுகத்திலும் பகவத்வ்யாபாரமுண்டாயிருக்க அத்தையிட்டு நிரூபியாதே, கேவலம், (திரேதைக்கண்) என்று யுகத்தையிட்டுச் சொன்னது தமக்கு மலட்டுக்காலம்போலே தோற்றியிருக்கையாலே, இங்கு யுகத்தையிட்டுச் சொல்லாமல் பகவத் வ்யாபாரத்தை யிட்டுக் காலத்தை நிரூபிக்கிறாரென்றபடி. த்ரேதாயுகத்திலே கடல் அடைத்தது, அதுண்டா யிருக்கவும் அத்தையிட்டு நிரூபிக்கவில்லை யென்றபடி. இப்படி பகவத் ஸ்பர்ஶத்தையிட்டுச் சொன்னவிடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (பெரியதிருநாளி லித்யாதி).

---

(௧) ஶ்வேதா-௪. ௫ (௨) க-திரு-௪௪. (௩) ஸ்தோ-ர-௪௦.

யார், பங்குனிமாஸத்துக்குப்பின்பு கார்யஞ்செய்கிறோமென்ன ப்ராப்தமாயிருக்கப், பெரியதிருநாளுக்குப் பின்பு கார்யம்செய்கிறோமென்னுமாபோலே. ஆனால், "கடலமுதங் கொண்டகாலம்" என்னவமையாதோ, (பெருவடிவில் கடலமுதங்கொண்டகாலம்) என்பானென்னென்னில்; பதினாலுநூறாயிரக்காதமாறு பரப்பையுடைத்தாயிறே க்ஷீராப்தியிருப்பது. இப்பரப்படங்கலும் விம்மும்படியிறே (க) "தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி" என்கிறபடியே கண்வளர்ந்தருளுவது; அவ்வடிவோடே யெழுந்திருந்து கடைகிறபோது ஒருகடல் செவ்வேநின்று ஒருகடலைக்கடைந்தாற்போலே யிருக்கையாலே யருளிச் செய்கிறார். ஶ்ரமஹரமாய் அபரிச்சிந்நமாயிறே கடலிருப்பது; அப்படியே ஶ்ரமஹரமாய் அபரிச்சிந்நமாய் போக்யமுமா யிருக்கிறபடி.

அதவா, (பெருவடிவு) என்று - அஸங்க்யாதமான வடிவாலே என்னவுமாம். மந்தரம் அழுந்தாமைக்குக் கூர்மரூபியாயும், மேலே கொந்தளியாமைக்கு † ப்ருஹத்ரூபியாயும், தேவதைகளோடு அந்யதமமான வடிவைக்கொண்டும் அஸுரர்களோடு அந்யதமமான வடிவைக்கொண்டும்,அவர்களுடையமத்யேநின்றுவலித்தும்,வாஸுகிக்கு பலகரணாய்ப் புகுந்துநின்றும்,(உ) "యన్నదృష్టం సురాసురైః-
யந்நத்ருஷ்டம் ஸுராஸுரை:" என்று - மலையோடு தேவதைகளோடு அஸுரர்களோடு வாசியற வ்யாபித்து பலாதாநம்பண்ணுவதாயும், இப்படி அநேகம் வடிவைக்கொண்டபடி.

(கடலமுதங்கொண்டகாலம்) தூர்வாஸாவினுடைய சாபத்தாலே நஷ்டஸ்ரீகராய் அம்ருதத்தை யிழந்து தரித்ரராய், (ங) "శరణం
త్వామనుప్రాప్తాఃసమస్తాదేవతాగణాః-சரணம்த்வா மநுப்ராப்தா: ஸமஸ்தாதேவதாகணா:" என்கிறபடியே - பிறிகதிர்படாதபடி ஸகல தேவதைகளும்வந்து சரணம்புகுர அவர்களுக்குக் கடலைக்கடைந்து அம்ருதத்தைக் கொடுத்தபடி. (கொண்ட) அவர்களுக்குக் கொடுத்து தன்பேறாயிருக்கை. (கடலமுதங்கொண்டகாலம்) தேவதைகளுக்கும் தனக்கும் எனக்கும் கடலிலே யமுதத்தையுண்டாக்கின காலம். தேவதைகள் பந்தகமான அம்ருதத்தைக் கொண்டுபோனார்கள், தான் பெரியபிராட்டியாராகிற அம்ருதத்தை ஸ்வீகரித்தான்,

---

† ப்ருஹத்ரூபி - ப்ரஹ்மரூபி.

---

(க) தி-வாய்-அ-கo-அ.
(உ) வி-பு-
(ங) வி-பு-ஃ-கூ-கூ௫.

(க) * விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதுண்ட இவை யிரண்டுமின்று இவர்க்கு போக்யம், (உ) "நால்தோளமுது" என்கி றபடியே கையும் திருவாழியுமாய்க்கொண்டு கடல்கடைந்தானேயா யிற்று இவர்க்கு போக்யம். தேவதைகளும் தங்களபிமதத்தைப் பெ ற்ருர்கள், அவனும் தன்னபிமதம் பெற்ருன், நானும் என்னபிமதம் பெற்றேன். (ங) "పశ్యతాంసర్వదేవానాంయయౌవక్షస్థలంహరేః- பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்த்தலம்ஹரே:" என்கிற படியே - ஸகலதேவதைகளும் பார்த்திருக்கத் திருநாபீகமலத்திலே அடியையிட்டுத் திருமார்பிலே யேறினளாயிற்று. இவர்களைப் பாரா தே திருமார்பிலே யேறுவானென்னென்னில்; †தன்னபிமதம் பெற் ருலிறே பிறர்க்கபிமதஞ்செய்வது; அங்ஙனன்றியே, †அவன் கடாக்ஷ மடியாகவிறே நம்முடைய கடாக்ஷமென்று அவன்முகத்தைப்பார்த் தாள். இவ்விடத்திலே ஜீயர், பட்டரை, "தேவதைகளடங்க நிரம் பிக்கிடக்கச்செய்தே திருமார்பிலேயேறுகை ஸ்த்ரீத்வத்துக்குப் போருமோ" வென்று கேட்க; "பர்த்ரு ஸம்ஶ்லேஷத்திலே விழும் போது †கலசப்பானை யெடுப்பார்க்குக் கூசவேணுமோ?" என் றரு ளிச்செய்தார். †ஸகலதேவதைகளும் (ச) "ஈஶ்வரோஹம்" என்றி ருந்தாலும் இம்மிதுநத்துக்குக் கிஞ்சித்கரிக்க யோக்யமாயிறே ஸ்வ ரூபமிருப்பது. (அமுதங்கொண்டகாலம்) அதுவுமொருகாலமேயெ ன்கிருர். அநந்ய ப்ரயோஜநர்க்கு முகங்காட்டுகையன்றியே ப்ரயோ ஜநாந்தரபரர்க்குங்கூட வாழுங்காலமிறே. மேன்மையும், நீர்மை யும், போக்யதையும், ப்ரகாசிக்கிற காலமிறே. ஸகல தேவதைகளும் வந்து சரணம் புகுருகையாலே மேன்மை ப்ரகாசியா நின்றது; ப்ர யோஜநாந்தர பரர்கள், "ஈஶ்வரோஹம்" என்றிருக்கிற துர்மாநிக

---

(தன்னபிமதம்) - பிராட்டிக்கு அவன் திருமார்பிலேறுகை அவளுக்கபி மதம்; அதுக்காக ஒருத்தரையும் பாராமலேறினுள் என்றபடி.

(அவன்கடாக்ஷமடியாக) - அவன் நினைவறிந்து செய்கைக்காக. அவனு க்கு இஷ்டமானல் அவர்களைப் பார்க்கிருேம், இல்லாவிட்டால் வெறுமனே யிருக்கிருேமென்று அவர்களைப் பாராமல் மார்விலேறினுள் என்று இரண் டாம் தாத்பர்யம். (கலசப்பானை யெடுப்பார்) - அந்தரங்கபரிசாரகர். அவர் கள் தாஸ்யரஸமறியார்களே யென்ன; அருளிச்செய்கிருர் (ஸகலதேவதை களு மித்யாதி).

---

(க) தி-மொ-கூ-க-உ. (ங) வி-பு-க-கூ-சOரு.
(உ) தி-வாய்-சு-கO-கூ. (ச) கீதை-கசு-கச.

ளென்று பார்த்தல் தன்பெருமை பார்த்தல் செய்யாதே கார்யஞ் செய்கையாலே நீர்மை ப்ரகாசியா நின்றது; பிராட்டியும் தானும் சேர்ந்த சேர்த்தியாலே போக்யதை ப்ரகாசியா நின்றது. (வளையுருவாய்த் திகழ்ந்தான்) என்று - க்ருதயுக புருஷர்கள் ஸத்வோத்தரராகையாலே வெளுப்பாயிற்று அவர்கள் உகப்பது; ஆகையாலே அவர்களுடைய ருச்யநுகுணமாக சுக்லவர்ணமான வடிவையுடையனாயிருக்கும். வளையுருவாய் - சங்கவர்ணனாய். (க) "ஶஶிவர்ணஂசதுர்பு ஜம்-சசிவர்ணம் சதுர்ப்புஜம்" என்னக்கடவதிறே. கடல் கடைந்த காலம் க்ருதயுகமென்னு மிடத்துக்கு ப்ரமாணமென்னென்னில்; ஶ்வேதவர்ணனென்கையாலே - க்ருதயுகமென்னு மிடம் தோற்றுகிறது. (உ) † "பாலினீர்மை......நிறைந்தகாலம் நான்குமாய்" என்று நாலுயுகத்துக்கும் நாலுவர்ணமாக வருளிச்செய்தாரிறே ஒருவர். (திகழ்ந்தானென்றும்) தன்னை யழியமாறி அவர்களுக்கு முகங்கொடுத்தால் அவர்கள் உஜ்ஜ்வலராகையன்றிகே தான் உஜ்ஜ்வலனானபடி. தன்னை யழியமாறியும் முகங்கொடுக்கையாலே நீர்மைவிளங்கா நிற்குமிறே.

(பெருமானை) இப்படி ஆஶ்ரிதர்க்காகக் கொள்ளும்வடிவுக்குத் தொகையின்றிக்கே யிருக்கிறவனை. யுகங்கள் நாலானால் வடிவும் நாலாயிருக்குமத்தனையோ வென்னில்; அவ்வவயுகங்களுக்குத் தொகையில்லாமையாலே வடிவும் அஸங்க்யாதமாயிறேயிருப்பது. த்வாபரயுகத்திலுள்ளார் ரஜஸ்தமோமிஶ்ரரா யிருக்கையாலே அவர்களுடைய ருச்யநுகுணமாகச் சிவப்புமன்றியிலே நீலமுமன்றியிலே யிருக்கும்வடிவை யுடையனா யிருக்குமென்னுமிடம் அநுக்தமாகையாலே அத்தையும் † ஸமுச்சயிக்கிறது. (உ) "பாசியின்பசும்புறம் போலும் நீர்மை" என்னக்கடவதிறே.

(கருநீலவண்ணன்றன்னை) கலிகாலத்தில் தன்பக்கல் அபிமுகராய் ஒருவர்ணவிசேஷத்திலேருசிபண்ணுவாரில்லாமையாலே -

---

க்ருதயுகத்துக்கு ஶ்வேதவர்ணமென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன ; அருளிச்செய்கிறார் (பாலின் நீர்மை) என்று. "திகழ்ந்தானென்றும்" என்கிறவிடத்தில் - சகாரத்தாலே ஸமுச்சயிக்கிறதென்றபடி.

கலிகாலத்தில் பகவத்ருசி யுடையாரில்லையோ வென்ன ; அருளிச்

---

(க) த்யாநஶ்லோகம். (உ) திருச்சந்தவி-௪௪.

ஸ்வாபாவிகமான வடிவுதன்னைக்கொண்டிருக்கும். (க) †"ॱॱ ह्रौंजड्ड त्रृतीये-கலௌஜகத்பதிம்" இத்யாதி. - மைத்ரேய! பட்டபாடு பாராயென்னுதல்; † இக்காலம் தட்டாதாய் நீயொருவனுமேயிறே யென்னுதல். கருமையென்று - கறுப்புக்கும் பேர்; வர்ணஸாமாந்யத்துக்கும் பேர். நிறத்தில்வந்தால் நீலமான நிறத்தை யுடையனாயிருக்கும்.

(ஒருவடிவத்தோருருவென்று உணரலாகா) நிறத்தையழியமாறுகையன்றியே வடிவையுமழியமாறும். இப்படி ஆஶ்ரிதார்த்தமாக வடிவையும் வர்ணத்தையும் அழியமாறுகையாலே, இதுவடிவு, இது நிறமென்று ஒருவராலும் பரிச்சேதிக்கப்போகாது. (உ) ॱॱஸுரநரதிரஶ்சாம்- ஸுரநரதிரஶ்சாம்" என்கிறபடியே ஸர்வயோநியிலும்வந்து அவதரிக்கையாலே வடிவையுமழியமாறினனிறே. (ந) ॱॱயுவாகுமாரः-யுவாகுமாரঃ" என்கிறபருவம், காளமேகம்போலேயிருக்கிற நிறம், ஸ்வாபாவிகமாயிருக்குமென்று பரிச்சேதிக்கப்போகாதோவென்னில்; † புத்ரனாயிருக்கவுங் காண்கையாலே பருவத்தைப் பரிச்சேதிக்கப்போகாது;ஆஶ்ரிதருடைய ருச்யநுகுணமாக வர்ணத்தைப் பரிக்ரஹிக்கையாலே நிறத்தைப் பரிச்சேதிக்கப் போகாது. ஆனாலும் இவை ஆகந்துகம், நிலைநின்றவேஷமிதுவென்று பரிச்சேதிக்கைக்குக் குறையென்னென்னில்; ஆஶ்ரிதார்த்தமாகக்கொண்ட வடிவையும் நிறத்தையும் பார்த்தால் † அதுதான் ஆகந்துகமென்னும்படியாய், †அவை தன்னை யாதரித்திருக்கையாலே பொருந்தியிருக்கும்படி. (ச) * இச்சாக்ருஹீதமிறே. (உணரலாகா) பாசுரமிட்டுப் பேசிமுடியாமையன்று, நெஞ்சாலும் நினைக்கப் போகாது.

(ஊழிதோறூழிநின்றேத்தலல்லால்) செய்யலாவது இதுவென்கிறார். அவன்கொண்ட ரூபபேதங்களையும் வர்ணபேதங்களையும்

---

செய்கிறார் (கலௌஜகத் பதிம் இத்யாதி). பராசரனுக்கு பவிஷ்யத்தான கலியுகம் ப்ரத்யக்ஷம்போலே தோன்றுகையாலே (இக்காலம்) என்கிறார்.

ஒருவடிவு, ஒருரு. அத்ர-அசை. "உரு" என்று - அழகாய், நிறத்தைச் சொல்லுகிறது. (புத்ரன்)-ஸ்தநந்தயம். (அதுதான்) - ஸ்வாபாவிகமான வடிவுதான். (அவைதன்னை) - ஆஶ்ரிதார்த்தமான வடிவையும் நிறத்தையும்.

---

(க) வி-பு-கூ-க. சகூ. (ந)
(உ) (ச) வி-பு-கூ-டு-அச.

பார்த்தால் காலதத்வமுள்ளதனையும் நின்றேத்து மித்தனையல்லது பரிச்சேதிக்கப்போகாது.(கருவடிவில் செங்கண்ணவண்ணன் தன்னை) தமக்குக்காட்டின வடிவை யருளிச்செய்கிறார். தமக்கு ருசியுண்டாகிலிறே ருச்யநுகுணமான வடிவைக்கொண்டு காட்டுவது. நாம் பகவத்விமுகராய் விஷயப்ரவணராயிருக்கத், தன்னுடைய ருசியாலே ஸ்வாபாவிகமான வடிவுதன்னையேபாயிற்றுக்காட்டிற்று. காளமேக நிபஸ்யாமமான வடிவையும், அதுக்குப் பரபாகமாய் உள்வாயிலே கிடக்கிற வாத்ஸல்யாம்ருதவர்ஷியான திருக்கண்களையு முடையவனை. † இவையும் ஸ்ரியஃபதித்வத்தோபாதி தனித்தனியே ஸர்வாதிகத்வலக்ஷணமாயிறேயிருப்பது.

(கட்டுரையே யாரொருவர் காண்கிற்பாரே)† நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே நான்கண்டுபேசினாற்போலே எவர்தாம் கண்டு பேசவல்லார்? நான்கண்டாற்போலே காணவல்லாருண்டோ? நான் பேசினாற்போலெ பேசவல்லாருண்டோ? அதவா, (கட்டுரையே) எல்லாரும் பேசியேபோமித்தனையொழியக் காணவல்லாருண்டோ வென்னவுமாம்.

†வேதங்களும் ஈஸ்வரனுடைய வடிவிருக்கும்படியை (க) "நீல தோயதமத்யஸ்தா-நீலதோயதமத்யஸ்த்தா" என்று கடக்கநின்று பேசிப்போமித்தனையல்லது கண்டதில்லை. (உ) "நீலமுண்டமின்னன்ன மேனிப்பெருமான்" என்றவர்களும் நான் கண்டாற்போலே கண்டார்களோ? நைஸர்க்கிகமான விரக்தியையும் நைஸர்க்கிகமான ப்ரேமத்தையுமுடையராயன்றோ அவர்கள்கண்டது; நைஸர்க்கிகமான பகவத்வைமுக்யத்தையும் விஷயப்ராவண்யத்தையுமுடைய நான் †அவ்வாறு இவ்வாறுயக்கண்ட காட்சிக்கு ஸத்ருசமுண்டோ? ஆன

ஸ்ரியஃபதி என்னுமல் நிறத்தையிட்டு நிரூபிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இவையுமித்யாதி).

(கட்டுரையே) ஏகாரமாகையாலே, கட்டுரைப்பாரார், காண்கிற்பாரார் என்னுதல். அன்றியே, கட்டுரையே - கட்டுரைமாத்ரமே, காண வல்லாரில்லை யென்னுதல்.

ஆர் என்பானென், வேதங்களும் ஆழ்வார்களு மில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (வேதங்களுமித்யாதி). அவ்வாறிவ்வாறு - விரக்த்யாதிகளாலன்றிக்கே அவிரக்த்யாதிகளாலே காண்கை.

(க) பு-ஸா. (உ) நி-வி-௩௦.

பின்பு நான்கண்டகாட்சியை வேதங்கள் கண்டதோ? ஆழ்வார்கள் கண்டார்களோ?

(ஆரொருவர்காண்கிற்பாரே) ஸ்வஸாமர்த்யத்தாலே எவர்கள் காணவல்லார்? *ஸாதகனைப்போலே ஸ்வயத்நத்தாலே கண்டேனோ? †ப்ரபந்நனைப்போலே ஸம்ஸாரபயபீதனாய்க் கண்டேனோ? விஷயப்ரவணனாய்த் திரியச்செய்தேயன்றோ நான்கண்டது. ... ()

மூ.—இந்திரர்க்கும்பிரமர்க்கும்முதல்வன்றன்னை
யிருநிலம்கால்தீநீர்விண்பூதமைந்தாய்ச்
செந்திறத்ததமிழோசைவடசொல்லாகித்
திசைநான்குமாய்,திங்கள்ஞாயிறாகி
அந்தரத்தில்தேவர்க்குமறியலாகா
வந்தணனையந்தணர்மாட்டந்திவைத்த
மந்திரத்தை,மந்திரத்தால்மறவாதென்றும்
வாழ்தியேல்வாழலாம்மடநெஞ்சமே. (௪)

பதம்.—இந்திரர்க்கும், பிரமர்க்கும், முதல்வன்றன்னை, இருநிலம்கால்தீநீர்விண் பூதமைந்தாய், செம்திறத்த, (௫) தமிழோசையாகி, வடசொல்லாகி, திசைநான்குமாய், திங்கள்ஞாயிறாகி, அந்தரத்தில், (௧௦) தேவர்க்கும், அறியலாகா, அந்தணனை, அந்தணர்மாட்டு, அந்திவைத்த, (௧௫) மந்திரத்தை, மந்திரத்தால்மறவாது, வாழ்தியேல், மடநெஞ்சமே, என்றும், (௨௦) வாழலாம். ()

உரை.—இந்த்ரனுக்கும், ப்ரஹ்மாவுக்கும், காரணபூதனாய், பெரிதான பூமி காற்று அக்நி ஜலம் ஆகாசம் ஆகிய பஞ்சபூதங்களுக்கும் அந்தராத்மதயா வ்யாபித்து நிற்குமவனாய், (தன்னை உள்ளபடியே காட்டும்) செவ்வையையுடைய, (௫) த்ராவிட வேதமான ப்ரபந்தங்களுமாய், ஸம்ஸ்க்ருத வேதங்களுமாய், நான்குதிக்குக்களிலுமுள்ள பதார்த்தங்களுக்கு அந்தராத்மாவாய், சந்த்ர ஸூர்யர்களுக்கும் அந்தராத்மாவாய், இப்படி அந்தராத்மதயாவ்யாபித்து நிற்குமிடத்தில், (௧௦) தேவாதிஸகல பதார்த்தங்களுக்கும், அறியக்கூடாத, சுத்தஸ்வபாவனாய், ப்ராஹ்மணர்களுக்கு தநமான வேதத்தினுடைய, முடிவிலே ப்ரகாசிக்கிற, (௧௫) ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேச்வரனை, திருமந்த்ரத்தாலே, இடைவிடாமல், அநுபவிப்பாயேயாகில், எனக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் நெஞ்சே! (௨௦) இவ்வாத்மாவுள்ளதனையும், நித்ய ஸூரிகள் நடுவேயிருந் தநுபவிக்கப்பெறுவாய். (௨௨)* ... ... ... (௪)

---

ஸாதகரென்கையாலே - ருஷிகளையும், ப்ரபந்நரென்கையாலே - ஆர்த்தப்ரபந்நரையும் வ்யாவர்த்திக்கிறது. இத்தால் - பரகத ஸ்வீகாரத்துக்கு முக்யாதிகாரி தாமென்றபடி. (௩)

வ்யா.—(நாலாம்பாட்டு) (இந்திரர்க்கும்) கீழ் மூன்று பாட்டாலும் - †அர்த்தமற்றதிறே. முதற்பாட்டில் - சேஷசேஷித்வம் ஸாக்ஷாத்க்ருதமாயிற்று; இரண்டாம்பாட்டில் - அந்யசேஷத்வம் நிவ்ருத்தமாயிற்று; மூன்றும் பாட்டில் - போக்யதை குறைவற்றது; இனி அநுபவத்துக்கு ஸஹகாரிகளைத் தேடுமித்தனையிறே. அதில் நித்ய ஸூரிகள் தேசவிப்ரக்ருஷ்டராகையாலும், ஸம்ஸாரிகள் விஷயப்ரவணராகையாலும் துணையாகமாட்டார்கள்; இனி தமக்கு அவர்ஜ்ஜநீயமாயிருந்துள்ள திருவுள்ளமேயிறே ஸஹகாரியாவது. ஆகையாலே, நெஞ்சே! நாம் இவ்விஷயத்தை யநுபவிக்கப் பாராயென்கிறார்.

† கீழ்ச்சொன்ன விலக்ஷண விக்ரஹ விசிஷ்டனுடைய ஜகத்காரணத்வப்ரயுக்தமான வைபவத்தை ஸ்வரூபப்ரகாசகமான திருமந்த்ரமுகத்தாலே அநுபவிக்கப் பாராயென்கிறார். † இவர்தாம் திருமந்த்ரமுகத்தாலே அநுபவிக்கிறாராகில் அதுக்கு உபயவிபூதி நாதத்வமும் ஸமஸ்தகல்யாண குணாத்மகத்வமுமன்றோ †அர்த்தமென்னில்; †அதுவும் ப்ரமாண ப்ராசுர்யத்தாலே காரணத்வத்திலே யொதுங்கியிருக்கக்கடவது;

(௧) †"ఏకోహవై నారాయణఆసీత్ - ஏகோஹவைநாராயண ஆஸீத்" என்றும், (௨) "నరాజ్ఞాతానితత్త్వాని-நராஜ்ஜாதாநி தத்வாநி" என்றும், (௩) "ఆపోనారాఇతిప్రోక్తాః-ஆபோநாரா இதிப்ரோக்தா:" என்று மித்யாதிகளாலே ஜகத்காரணத்வத்தை நாராயண சப்தார்த்தமாகச் சொல்லக்கடவதிறே. † அதுதனக்குக் கருத்தென்னென்னில்; முறையழிந்துகிடக்கிறது இத்தேசமாகையாலே ப்ரமாணாபேக்ஷையுள்ளது இத்தேசத்துக்கிறே. தன்காணியைப் பிறர் ஆளும்போதிறே ப்ரமாணங் காட்டவேண்டுவது; ஆகையாலே சொல்லுகிறது. ஆகையாலே, நெஞ்சே! ஜநகனை அநுபவிக்கப் பாராயென்கிறார்.

---

நாலாம்பாட்டு.—(இந்திரர்க்கும்) (அர்த்தமற்றதிறே) - திருமந்த்ரார்த்தமற்றதிறே என்றபடி.

பாட்டுக்கெல்லாம் தாத்பர்யமாக மீளவும் அவதாரிகை யருளிச்செய்கிறார் (கீழ்ச்சொன்னவித்யாதி). (அர்த்தமென்னில்) காரணத்வத்தைச் சொல்லுவானென், என்று சங்காபிப்ராயம். (அதுவும்) - திருமந்த்ரமும்.

காரணத்வத்திலே ஒதுங்கினபடியை அருளிச் செய்கிறார் (ஏகோஹவை இத்யாதி). (அது தனக்குக்கருத் தென்னென்னில்) - அதுதான் காரணத்வத்தை ப்ரதிபாதிக்கிறதுக்குக் கருத் தேதென்று சங்காபிப்ராயம்.

---

(௧) மஹோப- (௨) பாத்மோத்தரம்-௪. (௩) மநுஸ்ம்ருதி-௧-௧௦.

வ்யா.—(இந்திரர்க்கும்பிரமர்க்கும் முதல்வன்றன்னை) (க)"மூவுருவும் கண்டபோ தொன்ருஞ்சோதி" என்கிறவிடத்தில் சப்தத்தை நெருக்கியிறே பொருள்சொல்லுவது; அதுவே தமக்குக் கருத்தென்னுமிடந் தோற்ற அத்தை இங்கே வ்யக்தமாக்குகிருர். ஏகனேநிர்வாஹகனென்றுகீழ்ச்சொல்லிற்றென்கிருர். ஸம்ப்ரதிபந்ந க்ஷேத்ரஜ்ஞனன இந்த்ரனுக்கும், ஈஶ்வரனென்றுசங்கிக்கைக்கு யோக்யனன ப்ரஹ்மாவுக்கும் உத்பாதகனனவனை. சங்கநீயனன ப்ரஹ்மாவை முற்படச்சொல்லி, பின்பு இவனைச்சொல்ல ப்ராப்தமாயிருக்க இவனை முற்படச் சொல்லிற்று, இவனேபாதி அவனும் ஸ்ருஜ்யகோடிகடிதனென்னுமிடந் தோற்றுகைக்காக.

ஆனல் ருத்ரனும் ஈஶ்வரனக சங்கநீயனு யன்றே விருப்பது, அவனைச் சொல்லாதொழிவா னென்னென்னில்; (உ) "ब्रह्मणश्चापि सम्भूतश्शिव इत्यवधार्यताम् - ப்ரஹ்மணஶ்சாபி ஸம்பூதஶ் ஶிவ இத்யவதார்யதாம்" என்று இத்யாதி ப்ரமாணங்களாலே அவனுக்கு ப்ரஹ்ம புத்ரத்வம் ப்ரஸித்தமாயிருக்கையாலே, எல்லாரிலும் ப்ரதாநனன ப்ரஹ்மாவையும் கீழான இந்த்ரனையும் சொன்னபோதே †ப்ரத்யாஹாரந்யாயத்தாலே மத்யே அவனையும் சொல்லிற்ருகக்கடவது. இந்திரனுக்கும் பிரமனுக்கும் என்னுதே ரேபாந்தமாகச் சொல்லிற்று - பூஜ்யதாபுத்தியாலன்று, க்ஷேபிக்கிருர். ஈஶ்வரனலே ஸ்ருஜ்யனயிருக்கச்செய்தேகிடீர் "த்ரைலோக்யாத்யக்ஷன் நான்" என்றிருக்கிறதும், "சதுர்த்தசபுவநமும்என்னலே ஸ்ருஜ்யம், இத்தனைக்கும் நிர்வாஹகன்நான்" என்றிருக்கிறதும், கும்பிடுகொள்ளுகிறதும்.

(†முதல்வன்) தனக்கு உத்பாதகனின்றியே யிருக்கிறவன். (தன்னை) வ்யஷ்டிஸ்ருஷ்டிக்குக் காரணமான தன்னை யென்னுதல். (இருநிலமித்யாதி)-கீழ் வ்யஷ்டிஸ்ருஷ்டியைச் சொல்லிற்று; இத்

(ப்ரத்யாஹாரம்) - "அசி-அல்" என்று - அகாரத்தையும் லகாரத்தையும் எடுக்கவே நடுவுள்ள அக்ஷரங்கள் தன்னடையே ஸித்திக்குமென்கிற சப்தப்ரக்ரியாந்யாயம்; அப்படியே ஆத்யந்தங்களைச் சொல்லவே நடுவுள்ளதும் ஸித்திக்குமென்றபடி.

(முதல்வன்) - தனக்கும்தானே காரண மென்னுதல், இவ்வருகுள்ளார்க்கும் காரண மென்னுதல். (கால், தீ, நீர்) என்கிற மூன்று பூதங்களும்

(க) - உ (உ)

தால் † ஸமஷ்டிஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது. முற்படவ்யஷ்டி ஸ்ருஷ்டியைச்சொல்லிப் பின்பு ஸமஷ்டிஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது, ஈஸ்வரத்வசங்கையுள்ளது இவர்கள்பக்கலிலே யாகையாலே; பூதங்களுக்கு ஈஸ்வரத்வசங்கையில்லையிறே. பூதங்களை அப்யயக்ரமத்தைச் சொல்லுதல், ஸ்ருஷ்டி க்ரமத்தைச் சொல்லுதல் செய்யாதே அக்ரமமாகச்சொல்லிற்று ஒரு நினைவைப்பற்ற, ஸர்வாதாரமுமாய் அஸஞ்சாரியுமாய் அபாதகமுமா யிருக்கும் பெருமையைப் பற்ற,பூமியை முற்படச்சொன்னார்; அல்லாத பூதத்ரயங்களும் ஸஞ்சாரியுமாய் ரக்ஷகத்வ பாதகத்வங்களுக்கும் பொதுவாயிருக்கையாலே அக்ரமத்திலே சொன்னார்; இத்தனைக்கும் அவகாசப்ரதாநம் பண்ணுமேற்றத்தைப் பற்ற ஆகாசத்தைப் பின்பே யருளிச்செய்தார். இவை நினைவல்லாதபோது இதுக்குப்ரயோஜநமில்லை. "முதல்வன்தன்னை" என்றார் - கீழ்; இங்கே - (ஐந்தாய்) என்கிறார். ஆகையாலே, இந்த ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் - உத்பாத்யோத்பாதகபாவஸம்பந்தமென்கை.

(செந்திறத்தவித்யாதி) மேல்சாஸ்த்ரவஸ்யருடைய ஸ்ருஷ்டியைச் சொல்லுகைக்காக சாஸ்த்ரஸ்ருஷ்டியைச் சொல்லுகிறார். த்ராமிட ஸம்ஸ்க்ருதங்களை ஸ்ருஷ்டித்து. † ஆரியத்தைச்சொல்லி அதினுடைய சிதைவாகையாலே பின்னைத் தமிழைச்சொல்ல ப்ராப்தமாயிருக்க இத்தைப்ரதமத்திலே உபாதாநம் பண்ணிற்று - இது ஸர்வாதிகார மாகையாலும், ஸ்வார்த்தத்தைச் செவ்வேப்ரகாசிப்பிக்கக்கடவதா யிருக்கையாலும், †தம்பாழி யாகையாலும், இன்னமும் அத்தோபாதி இதுவும் ப்ரமாணமென்கைக்காக முற்படவருளிச்செய்கிறார். வேதங்கள் போலேயும், இதிஹாஸ புராணங்கள்போலேயுமன்றிறே - ஆழ்வார்கள்வார்த்தை; †அநுஷ்ட்டாதாவின் வார்த்தையிறே- இது. †ஐஸ்வர்யகைவல்யங்கள் த்யாஜ்யதயா புகுருமித்தனையிறே - இவர்கள் பக்கல். (செந்திறத்ததமிழோசை) திறம் - கூறுபாடும், ப்ரகாரமும். ஸ்வார்த்தத்தைச் செவ்விதாக ப்ரகாசிப்பிக்கையே கூறுன த்ராமிட சப்தம்; உபப்ரும்ஹணாபேக்ஷயற்றிருக்கை. வேதங்களுக்கு உபப்ரும்ஹணாபேக்ஷயுண்டிறே.

---

ஏகரூபமா யிருக்கையாலே ஸ்ருஷ்டிக்ரமத்திலே சொல்லிற்றென்றபடி.

(ஆரியம்) - ஸம்ஸ்க்ருதம். (தம்பாழி) - தம்துறை. ஆழ்வார்வார்த்தையான த்ராவிடப்ரபந்தத்துக்கு ஆதிக்யமேதென்ன; அருளிச்செய்கிறார் (அநுஷ்ட்டாதாவித்யாதி). அநுஷ்ட்டாநமேதென்ன; அருளிச்செய்கிறார் (ஐஸ்வர்யேத்யாதி).

(ஓசை) என்று - பாட்டுக்கும் த்வநிக்கும்பேர், †லக்ஷணயா சப்தத்தைச் சொல்லுகிறது, மேல்"வடசொல்" என்கையாலே. (வடசொல்) என்று - ஸம்ஸ்க்ருதத்தைச் சொல்லுகிறது. த்ராமிட பாஷை ஸஞ்சரிக்கும் தேசத்துக்கு வடவெல்லையாகத் திருமலையைச் சொல்லக்கடவர்களிறே. அதுக்கு வடக்கெல்லாம் ஸம்ஸ்க்ருதமேயிறே ஸஞ்சரிப்பது. அத்தேசத்தில் தமிழ்ஸஞ்சரியாது; உபயமும் ஸஞ்சரிக்குமேற்றமுண்டிறே இத்தேசத்துக்கு. (ஆகில்) சாஸ்த்ரத்தை ஈச்வரன் ஸ்ருஷ்டிக்கையாவது - ப்ரகாசிப்பிக்கை.

(திசைநான்குமாய்) நாலுதிக்கிலுமுண்டான ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டித்து. "మఞ్చాః క్రోశన్తి - மஞ்சா:க்ரோசந்தி" இதிவத். இத்தால் - சாஸ்த்ரவச்யருடைய ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது. (திங்கள்நாயிறுகி) (க)†"అగ్నౌ ప్రాస్తాహుతిస్సమ్యగాదిత్యముపతిష్ఠతే। ఆదిత్యాజ్జాయతే వృష్టిః వృష్టేరన్నం తతః ప్రజాః - அக்நௌ ப்ராஸ்தாஹுதிஸ்ஸம்யக் ஆதித்யமுபதிஷ்டதே । ஆதித்யாஜ்ஜாயதே வ்ருஷ்டி: வ்ருஷ்டேரந்நம்தத:ப்ரஜா:" என்னக்கடவதிறே. ஸ்ருஷ்டிஸமாப்திதோற்ற (ஆகி) என்கிறது.

கீழ் - நாரசப்தார்த்தஞ் சொல்லிற்று; மேல் - அயநசப்தார்த்தம் சொல்லுகிறது. (அந்தரத்தில்) அந்தரனுமிடத்தில், ஸ்ருஷ்டமான ஸகலபதார்த்தங்களிலும் வ்யாபித்து நிற்குமிடத்தில்.(உ)"పృథివ్యా అన్తరః, ఆత్మనో‌ఽన్తరః-ப்ருதிவ்யா அந்தர:, ஆத்மநோந்தர:" என்று - அந்தரசப்தத்தாலே வ்யாப்தியைச் சொல்லக்கடவதிறே. (தேவர்க்குமறியலாகா) ஸ்ருஷ்டமான ஸகலபதார்த்தங்களுக்குமறியவொண்ணுதிருக்கை.(உ) "యమాత్మా న వేద-யமாத்மாநவேத" என்று-யாவனொருவனை ஆத்மாவறியான், அவன் அந்தரனான அந்தர்யாமியென்னக்கடவதிறே. அதுதோற்ற துர்ஜ்ஞேயனென்கிறார். ஆனால் (தேவர்க்கும்) என்று இவர்களை விசேஷித்து எடுப்பானென்னென்னில்; ஜ்ஞாநசக்திகளால் அதிகரானவர்களுக்கும் அறி

---

† லக்ஷணையாலே சப்தமாகவேணு மென்றபடி.

† சந்த்ராதித்யர்களை உண்டாக்க வேண்டுவானென்னென்ன, லோகோபகாரக ராகையாலேயென்கிறார் (அக்நௌ ப்ராஸ்தாஹுதிரித்யாதி.)

---

(க) (உ) ப்ருஹ-உ-ரு-உ.

யவொண்ணுதென்கைக்காக வருளிச்செய்கிறார். (அந்தணனை) சுத்தனை. †ஆழ்வார்களெல்லாரும் இஸ்ஸப்தத்தாலே சுத்தியைச் சொல்லக்கடவதா யிருப்பதொரு ஏற்றமுண்டு. (க) "அறவனையாழிப் படையந்தணனை" என்றாரிறே - நம்மாழ்வார். † கையும் திருவாழியுமா யிருப்பானொரு ப்ராஹ்மண னில்லையிறே. †கேவலனுக்கு சுபாஸ்ரயமாக வருளிச்செய்கிறா ராகையாலே அங்ஙனருளிச்செய்கிறது. †பகவத்ப்ராப்திகாமன்குணவிசிஷ்டமாக உபாஸிக்கக்கடவன்; குணங்களே ப்ராப்யமாகையாலே. ஆத்ம ப்ராப்திகாமன் சுத்திவிசிஷ்டனாக உபாஸிக்கக்கடவன்; (௪) *ஜராமரணமோக்ஷமே புருஷார்த்தமாகையாலே. ஆகில், இவர்க்குசுத்தி அபேக்ஷிதமோவென்னில்; கீழ் - ஸ்ருஷ்டியைச் சொல்லி, ஸ்ருஷ்டமான ஸகலபதார்த்தங்களிலும் வ்யாபித்துநிற்குமென்கையாலே, தத்கததோஷாஸம்ஸ்ப்ருஷ்டனென்கை யபேக்ஷிதம்; அத்தைப் பற்றச் சொல்லுகிறது. (௩) "ఏష సర్వభూతాన్తరాత్మా ఉపహతపాప్మా -ஏஷ ஸர்வபூதாந்தராத்மாஉபஹதபாப்மா" என்று - வ்யாப்தியைச்சொன்ன ப்ரதேசங்களிலே தத்கததோஷாஸம்ஸ்ப்ருஷ்டத்வங்களையுஞ் சொல்லக்கடவதிறே. †இதிறே இவர் திருவுள்ளத்தில் கிடப்பது. பரமவைதிகர்களிறே - ஆழ்வார்களாகிறார்.

(அந்தணர்மாட்டந்திவைத்தமந்திரத்தை) கீழ்உக்தமான இவ்வஸ்து வேதசிரஸ்ஸிலே குஹ்யமாயிருக்குமென்கிறார். (அந்தணர்மாடு) (௪) "బ్రాహ్మణానాం ధనం వేదః - ப்ராஹ்மணாநாம்தநம்வேதঃ" என்கிறபடியே ப்ராஹ்மணர்க்குதநம் வேதமிறே. (ரு) "ధనం మదీయం తవ పాదపఙ్కజమ్ - தநம்மதீயம்தவபாதபங்கஜம்" என்கிற ஈஶ்வரனன்று காணும் தநம், வேதமாயிற்று. † வேதைகஸமதிகம்ய

அந்தணன் - ப்ராஹ்மணனன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஆழ்வார்களித்யாதி). அங்கும் ப்ராஹ்மணனுலோவென்ன; அருளிச்செய்கிறார் (கையும்திருவாழியுமித்யாதி). அங்குசுத்தியாகக் கொள்ளவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கேவலனுக்கித்யாதி). ஆனால் குணவிசிஷ்டமாக வன்றோ உபாஸிப்பது, சுத்திவிசிஷ்டமாக வேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (பகவத் ப்ராப்தீத்யாதிவாக்யத்வயத்தாலே). (இதிறே) - சொன்னவேதார்த்தமிறே திருவுள்ளத்தில் பட்டதென்றபடி.

(க) தி-வாய்-க-எ-க. (௨) கீதை-எ-௨௯.
(௩) ஸுபாலோப. (௪)
(ரு) ஸ்தோ-ர-௩௦.

னென்றிறே - வஸ்துவுக்கேற்றம். ப்ரமாணமுகத்தாலே யிறே - ப்ரமேயபூதனன ஈஶ்வரனை தநம் என்றறிவது. (அந்திவைத்தமந்திரத்தை) வேதாந்தத்திலே ப்ரகாசிக்கிறரஹஸ்யத்தை. மாட்டந்தி - வேதத்தின்முடிவிலே; வேதாந்தத்தி லென்றபடி. மந்திரம் என்றும், ஸர்வஸ்மாத்பரனென்றும் - பர்யாயம்போலேகாணும். ஈஶ்வரனை ரஹஸ்யமென்கிறது - தலைக்கடையையும் புழைக்கடையையுமடைத்துக் கிழிச்சீரையை யவிழ்த்துப் பார்ப்பாரைப்போலே அஷ்டகர்ணமாக உபதேசிக்கவும் அநுஸந்திக்கவும்வேண்டி இப்படி சீரியசரக்காயிருக்கையாலே.

அதவா,(மந்த்ரம்)என்று-ஈஶ்வரனுக்குத்திருநாமமாக ஸ்ரீஸஹஸ்ர நாமத்திலே சொல்லிற்று.(க) "మన్త్రశ్చన్ద్రాంశుర్భాస్కరద్యుతిః மந்த்ரஶ்சந்த்ராம்ஶுர்ப்பாஸ்கரத்யுதிஃ" என்னக்கடவதிறே. "మన్తారం త్రాయత ఇతి మన్త్రః-மந்தாரம்த்ராயதஇதிமந்த்ரஃ" என்கிற வ்யுத்பத்தியாலே, மந்த்ரமென்று - ஈஶ்வரனுக்குத் திருநாமமாகிறது. (அந்தணர்மாடு) என்கிறூர்காணும் தாம் அதுக்கு அயோக்யரென்னுமிடந்தோற்ற. ஸர்வமும் திருவுள்ளத்திலே ப்ரகாசியாநிற்க வாய் விடுகை மர்யாதாஹாநி யென்றிருக்கிறூரிறே. தாம்பரமவைதிகராயிருக்கச் செய்தே பிறர்தநமென்பாரைப்போலே அத்தோடு ஸம்பந்தமற வார்த்தைசொல்லுகிறூரிறே மர்யாதாஸ்த்தாபநார்த்தமாக.

(அந்தணர் மாட்டந்திவைத்த மந்திரத்தை மந்திரத்தால்-வாழ்தியேல்) ப்ரதிபாத்யமும் அங்கேயாய் ப்ரதிபாதகமும் அங்கேயாயிருக்கிறபடி. (மந்திரத்தை - வாழ்தியேல்) ஜகத்காரணபூதனுய், ஸர்வாந்தர்யாமியாய், துர்ஜ்ஞேயனுய், தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனுயிருக்கிறவனை அநுபவிப்புதியாகில், (மந்திரத்தால்-வாழ்தியேல்) அவ்விஷயத்தை அநுபவிக்குமிடத்தில் வேதாந்தமுகத்தாலே யாதல் இதிஹாஸபுராண முகத்தாலே யாதல் அநுபவிக்கப் பாராதே நானிழிந்ததுறையிலே யநுபவிக்கப்பார்; திருமந்த்ரத்தாலே யநுபவிக்கப்பார்; திருமந்த்ரத்தாலே அநுபவிக்குமாபோலே ஸுகரமாயிராதிறே.(உ) "సర్వమష్టాక్షరాన్తస్థమ్-ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம்"-என்கிறபடியே ஸர்வார்த்தங்களையும் †திரளச்சொல்லுகிற மந்த்ரமிறே.

அவனன்றோதநம், வேதம் தநமானபடி எப்படி யென்ன; அருளிச்செய்கிறூர் (வேதைகஸமதிக்யாதி).

(திரள) - ஸங்க்ரஹமாக.

(க) ஸஹஸ்ரநா- (உ)

பகவந்மந்த்ரங்கள் அஸங்க்யாதங்களன்றோ, மந்த்ரம் என்னப் பெரியதிருமந்த்ரத்தைக் காட்டுமோவென்னில்; (க)"யாநிநாமாநி கௌணாநி-யாநிநாமாநிகௌணாநி" என்கிறபடியே அல்லாதவை குண சேஷ்டிதங்களுக்கு வாசகமாயிறே யிருப்பது. கீழ்ச்சொன்ன அர்த்தத்துக்கு வாசகமாயிருப்பதொரு சப்தமில்லையிறே; ஆகையாலே காட்டும். அல்லாத வ்யாபகமந்த்ரங்கள் இதுக்கு வாசகமன்றோ வென்னில்; அவைஇத்தைப்பற்ற †ஸாபேக்ஷமாகையாலே வ்யாபகாந்தரங்களையுங் காட்டாது. அடியிலே இவர்தாம் (உ) "நான் கண்டு கொண்டேன்" என்று தலை சீய்த்தமந்த்ரம் இதுவேயிறே.

(மறவாது வாழ்தியேல்) விஸ்மரியாதே அநுபவிப்புதியேல். பகவதநுபவத்துக்கு விஸ்ம்ருதிஹேது விஷயாந்தரஸ்பர்சமாகையாலே விஷயாந்தரம் கலசாதபடி அநுபவியென்கிறாரோவென்னில்; அது இவர்க்குச்சேராது, சரமதசையிலேஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கிறவராகையாலே. இனி இவர்க்கு விஸ்ம்ருதி ஹேதுவென்னென்னில்; தாபத்ரயாஶ்ரயமான தேஹஸம்பந்தத்தோடேயிருக்கையாலே தேஹத்தைப்பாரார், பூர்வவ்ருத்தத்தைப் பாரார், விஷய வைலக்ஷண்யத்தைப் பாரார், தங்கிவ்ருத்திக்கும் அபிமதஸித்திக்கு முறுப்பாக ஈஶ்வரனை உபாயமாக அநுஸந்திப்பதொரு அநுஸந்தாநமுண்டு, அது பகவதநுபவத்துக்கு விஸ்ம்ருதிஹேதுவாகக்கடவது. ஆகையாலே, பூர்வார்த்தத்திலிழியாதே அநுபவிக்கப்பார். இவர்தாம் த்வயநிஷ்டரன்றோ, இங்ஙனே சொல்லுவானென்னென்னில்; அடியிலே ஒருகால் ஈஶ்வரன்கையிலே நம்கார்யத்தை ஸமர்ப்பித்துவிட்டோமாகில் இனி ஸ்வோஜ்ஜீவநத்தைச் சிந்திக்கையாவது-†பிறர் கார்யத்திலேயிழிகையிறே. † ஸ்வரக்ஷணத்தோடு ஜகத்வ்யாபாரத்தோடு வாசியில்லையிறே ப்ராப்தியில்லாமைக்கு.

---

(ஸாபேக்ஷம்) - வ்யாப்யபதார்த்தாதிகள், அவை அத்யாஹரிக்கவேணும், அவற்றுக்கு; திருமந்த்ரத்துக்கு அதுவேண்டாவென்றபடி. (பிறர்கார்யம்) - ஈஶ்வரனுடையகார்யம். ஈஶ்வரகார்யமான ஜகத்வ்யாபாரமன்றோ இவனுக்கு வேண்டாதது, ரக்ஷணசிந்தை பண்ணவொண்ணுதோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வரக்ஷணத்தோடித்யாதி).

---

(க) ஸஹஸ்ரநாமோபோத்காதம். (உ) திமொ-௧-௧-௧.

(வாழ்தியேல்) அவனுடைய பாவநத்வத்திலும் ஸாதநத்திலும் இழியாதே போக்யதையிலேயிழிந்து அநுபவிப்புதியாகில். (வாழ்தியேல்) வாழ்ச்சி உன்னதிறே; நானும் உனக்கு ஸஹகாரி யித்தனை யிறே. (வாழ்தியேல்) என்று - தமக்குக் கரணமான மநஸ்ஸை சேதநஸமாதியாலே கர்த்தாவாகப் பேசுகிறுரிறே; மநஃப்ராதாந்யந்தோற்ற. †யாவதாயுஷம் பகவதநுபவத்துக்குப் பரிகரமிதுவாகையாலே, தத்ஸாபேக்ஷனுயிறே முமுக்ஷு-விருப்பது. (என்றும் - வாழலாம்) நித்யஸூரிகள்நடுவேயிருந்து யாவதாத்மபாவிவாழலாம். எங்குமொக்க அநுபவமிறே இவனுக்குள்ளது. வைஷ்ணவனுகிறுன்-ராஜகுமாரனிறே. (மடநெஞ்சமே) எனக்கு பவ்யமான நெஞ்சே! விஷயப்ராவண்யநிவ்ருத்திவேளையோடு, உஜ்ஜீவநவேளையோடு, போகவேளையோடுவாசியற, என்பின்னே யொழுகும்படி எனக்குவிதேயமாகப் பெற்றேனென்று திருவுள்ளத்தைக் கொண்டாடுகிறுர். (க) "நெஞ்சமே நல்லைநல்லை" என்னுமாபோலே. (௪)

மூ.—ஒண்மிதியில்புனலுருவியொருகால்நிற்ப
ஒருகாலுங்காமருசீரவுணனுள்ளத்து
எண்மதியங்கடந்தண்டமீதுபோகி
யிருவிசும்பினூடுபோயெழுந்து, மேலைத்
தண்மதியுங்கதிரவனுந்தவிரவோடித்
தாரகையின்புறந்தடவியப்பால்மிக்கு
மண்முழுதுமகப்படுத்துநின்றவெந்தை
மலர்புரையுந்திருவடியேவணங்கினேனே. (ரு)

பதம்.—ஒருகால், ஒண்மிதியில், புனலுருவி, நிற்ப, ஒருகால், (ரு) காமருசீர், அவுணன், உள்ளத்தெண்மதியம் கடந்து, அண்டமீது, போகி, (௰) எழுந்து, இரு, விசும்பினூடுபோய், மேலைக்கதிரவனும், மேலை, (௰ரு) தண்மதியும், தவிர வோடி, தாரகையின் புறந்தடவி, அப்பால்மிக்கு மண்முழுதும், அகப்படுத்துநின்ற, (௨௰) எந்தை, மலர்புரையும் திருவடி, வணங்கினேன். (௨௩)

உரை.—ஒருதிருவடி, ஓரடியிட்டமாத்ரத்தில், ஆவரணஜலத்தளவும் ஊடுருவிச்சென்று, (அப்புறம்போக இடம் பெருமையாலே, அங்கே) நிற்க,

---

மநஸ்ஸூப்ரதாநமோவென்ன; அருளிச்செய்கிறுர் (யாவதாயுஷமித்யாதி). ... ... ... ... ... (௪)

---

(க) தி - வாய் - ௧ - ௰ - ௪.

ஒருதிருவடி (டு) நல்ல (ஔதார்ய)ஸ்வபாவத்தை யுடையனுன, மஹாபலி, தன் மநஸ்ஸிலே நினைக்கும் நினைவைக்கடந்து, அண்டபித்திக்கும், அவ்வருகேபோகைக்காக, (க௦) கிளம்பி, விசாலமான, ஆகாசத்தை ஊடுருவிச் சென்று, மேலேயிருக்கிற ஸூர்ய மண்டலத்தையும், அதுக்குமேலேயிருக்கிற, (கடு) குளிர்ந்த சந்த்ரமண்டலத்தையும், கடந்துசென்று, ( அதுக்குமேலேயிருக்கிற) நக்ஷத்ர மண்டலத்தையும் கடந்து, அதுக்குமேலே (ப்ரஹ்மலோகத் தளவும்வ்யாபித்து) பூலோகம் முதலான பதினுன்கு லோகங்களையும், அளந்துகொண்டு க்ருதக்ருத்யனுய்நின்ற,(உ௦)எனக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரனுடைய, தாமரைமலரையொத்த திருவடிகளை, ஆஶ்ரயித்தேன். ()

வ்யா..—அஞ்சாம்பாட்டு. (ஒண்மிதியில்) கீழ் - ஜகத்காரணபூதனுய் ஜகச்சரீரியாயிருக்கிறபடியை யநுபவித்தார் ; அநந்தரம் நாராயண சப்தார்த்தத்தை நாராயணுநுவாகமாகிற ஓலைப்புறத்தே கேட்டுப்போகாதே கண்ணுலேகண்ட நுபவிக்கலாம்படி ஸ்ரீவாமநனுயவதரித்துத் திருவுலகளந்தபடியை யநுபவிக்கிருர். †சேஷசேஷித்வஸம்பந்தமிறே - நாராயண சப்தார்த்தமாகிறது. † ஜகத்காரணத்வத்தாலும் - ஈஶ்வரனேடு இவ்வாத்மாவுக்குண்டான ஸம்பந்தத்தையிறே சொல்லுகிறது. †(க)“காண்மின்களுலகீரென்றுகண்முகப்பே நிமிர்ந்த” என்று - ஸர்வலோகமும் இவ்வர்த்தத்தைக் கண்ணுலே காணலாம்படியிறே திருவுலகளந்தருளினது. ஆகையாலே நாராயணசப்தார்த்தமான த்ரைவிக்ரமாபதாநத்தை யநுபவிக்கிருர். †யஜ்ஞவாடத்தே சென்றபடியையும் அர்த்தித்தபடியையும் சொல்லாதே எல்லார்தலைகளிலும் திருவடிகளை வைத்த இவ்வம்சத்தைச் சொல்லுகையாலே - சேஷசேஷித்வ ஸம்பந்தத்தை அநுபவிக்கிருரென்று தோற்றுகிறதிறே.

(ஒண்மிதியிலித்யாதி) ஒருதிருவடிகளாலே பூமியையடங்கவளந்தான், ஒருதிருவடிகளாலே ஊர்த்த்வலோகங்களை யடங்கவளந்தா

---

அஞ்சாம்பாட்டு. (ஒண்மிதி) த்ரிவிக்ரமாபதாநம் நாராயணசப்தார்த்தமெப்படியா மென்ன; அருளிச்செய்கிருர் (சேஷசேஷித்வேத்யாதி). காரணத்வம் சொல்லிற்றே, ஸம்பந்தமானபடி யெப்படி யென்ன ; அருளிச்செய்கிருர் (ஜகத்காரணத்வேத்யாதி). அப்படி அளந்தானே வென்ன ; அருளிச்செய்கிருர் (காண்மின்களித்யாதி). வாமநாவதாரத்திலே சீலமன்றே தோற்றுவது, ஸம்பந்தம் தோற்றும்படி யென்னென்ன ; அருளிச்செய்கிருர் (யஜ்ஞவாடத்திலித்யாதி).

---

(க) தி - வாய் - சு - ரு - கக.

னென்கிறார். (ஒண்மிதியில்) ஸர்வாதாரமானவஸ்து சேதநர்தலையிலே திருவடிகளை வைத்தால் லோகம் தரிக்கவற்றோ? கம்ஸன், திருவடிகள்பட்ட காட்டில் நக்கணைந்து கிடந்திலனோ வென்னில்; †அதுதானேயாயிற்று தரிக்கைக்கு ஹேதுவும். †தாரகமான பதார்த்தம் தார்யமானாலும் தாரகத்வம் நழுவாதிறே. † திருவடிகளுக்குத் தான் தாரகனானவோபாதி இவர்கள்தலைக்கும் தாரகம் தானேயிறே. †தார்யமானது தாரகமாக மாட்டாது, தாரகமானது தார்யமாக மாட்டாது. †சரீரம் ஆத்மாவுக்கு அதிஷ்டாநமாயிருந்தாலும் சரீரம் தாரகமாகிறதன்று, ஆத்மா தார்யமாகிறதன்றிறே. † ஆத்மா தாரகம், சரீரம் தார்யமென்னுமிடம் †சரீராத்மலக்ஷணஞ் சொல்லுகிறவிடத்தே சொல்லிற்றிறே.

(மிதியில்) (க)“మదీయమూర్ధానమలఙ్కృతి-மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி” என்றும்,(உ) “படிக்களவாக நிமிர்ந்த நின்பாதபங்கயமே தலைக்கணியாய்” என்றும் - திருவடிகளைச் சிரோபூஷணமாகச் சொல்லுவது திருவடிகளின்வைலக்ஷண்யத்தையு மறிந்து தங்களுக்கும் அதிலே ஆதரமுண்டானாலிறே; தேஹாத்மாபிமாநிகளாகையாலே வெற்றுக்கால் தங்கள்தலையைத் துகைத்ததாக நினைத்

(அதுதானே) - திருவடிகள் வைத்ததுதானேயாயிற்று. வைத்தது தரிக்கைக்குடலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (தாரகமானவித்யாதி). அப்படி எங்கேகண்டோமென்ன; அருளிச்செய்கிறார் (திருவடிகளுக்கித்யாதி). (திருவடிகளென்றது) திருமேனியாய், திருமேனி திவ்யாத்மஸ்வரூபமானதனக்கு ஆபாதப்ரதீதியில் அதிஷ்டாநத்யாதாரஸம்பாலேதோற்றினாலும் வஸ்துகத்யா திவ்யாத்மஸ்வரூபம் திருமேனிக்கு தாரகமாகிறாப்போலே இவர்கள்தலையிலேவைக்கைகயாலே தான் தார்யனானாலும் சரீரபூதரான இவர்களுக்குத் தான் தாரகனாகக் குறையில்லை. தாரகத்வம் வ்யவஸ்த்திதமாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (தார்யமானதித்யாதி). இப்படி வ்யவஸ்த்திதமா யிருக்குமென்னுமத்தை சரீராத்மவிஷயத்திலும் காட்டுகிறார் (சரீரம் ஆத்மாவுக்கு இத்யாதி). இப்படிக்கு ப்ரமாணமேதென்ன; அருளிச்செய்கிறார் (ஆத்மாதாரகமித்யாதி). சரீராத்மலக்ஷணமாவது; - யஸ்ய சேதநஸ்ய யத்த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்த்தே நியந்தும் தாரயிதும்சசக்யம், தச்சேஷதைகஸ்வரூபஞ்ச, தத்தஸ்ய சரீரம், ஸர்வாத்மநா-எப்போதும் ஸ்வார்த்தே வல்லவளவு.

ஆபரணமாக வைத்து என்னுமல் (மிதித்து) என்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் (மதீயமூர்த்தாநமித்யாதி).

க) ஸ்தோ - ர· கூ0. (உ) தி - வாய் - கூ - உ - உ,

திருக்கு மித்தனையிறே; ஆகையாலே அவர்க ளபிப்ராயத்தாலே யருளிச்செய்கிறார். (ஒண்மிதியில்) நிலா தென்றல் ஸஞ்சரித்தாற் போலே அநுகூலமாகத் திருவடிகளை வைத்தபடி. அல்லாதபோது (க) "திருவாணை" என்று - ஆணையிடுவர்களிறே. அதவா, மேலொரு காலத்திலே ஆபிமுக்யம் பிறந்தால் தங்கள்பூர்வவ்ருத்தத்தையும் ஈஶ்வரவைலக்ஷண்யத்தையும்பார்த்து இறாயாதே வழக்குப் பேசிப் பற்றலாம்படி மிதித்த மிதியாகையாலே - (ஒண்மிதி) என்கிறது என்னவுமாம். "நான் விமுகனானவன்று என்தலையிலே யிருந்த திருவடிகளை ஆபிமுக்யம் பண்ணினவின்று பற்றக்குறையென்?" என்னலாமிறே.(உ)"லோகவிக்ராந்தசரணௌ-லோகவிக்ராந்தசரணௌ" என்றால் ஈஶ்வரனுக்கு மறுமாற்றமில்லைபோலேகாணும்.

(புனலுருவி) பூமியளவாதல், ஸப்தஸமுத்ரங்களளவாதல், ஸப்தத்வீபங்களளவாதல், சக்ரவாளகிரியளவாதல், மஹாஜலத்தளவாதல், அண்டகடாஹத்தளவாதல் நிமிருகையன்றியே, ஆவரணஜலத்தளவுஞ் செல்லத் திருவடிகளை நிமிர்த்தபடி. அண்டகடாஹத்துக்குள்ளேயன்றோ ரக்ஷ்யவர்க்கம், அவ்வருகுபோகவேண்டுவானென்னென்னில்; ரக்ஷ்யத்தினளவல்ல ரக்ஷகனுடையபாரிப்பென்கை. (ங) "அதனில் பெரியவென்னவா" என்று - இவருடைய அவாவைப்போலேகாணும் அவனுடைய அவாவும்; † இவனுடைய ப்ரேமம்செய்ததுசெய்யமாட்டாதோ அவனுடைய வாத்ஸல்யம். திருவடிகள் அண்டகடாஹத்தையும் ஊடுருவி ஆவரணஜலத்தளவும் சென்றால் அண்டகடாஹம் போகாதோவென்னில்; அது வேண்டுவதில்லையிறே - ஸூக்ஷ்மம்ஸ்தூலத்தை வ்யாபிக்கும்போது. ஆகாசம் அண்டகடாஹத்தை வ்யாபியாநின்றது, அதிற்காட்டில் ஸூக்ஷ்மமான மூலப்ரக்ருதியிலும் ஸூக்ஷ்மமாயிறே திவ்யமங்கள விக்ரஹமிருப்பது.

(ஒருகால்நிற்ப) ஒருதிருவடிகள்நிற்ப. (ச) "திருவடியே வணங்கினேனே" என்னாநின்றார் - மேல்; கீழே - (ரு) "திருவடி என்றலைமேலவே" என்றார்; ஆயிருக்க, திருவடிகள்என்னுமிடத்தை (கால்) என்கிறது ஸம்ஸாரிக ளபிப்ராயத்தாலே. ஒருவன்கால் நந்தலை

---

† சேஷிக்கு சேஷபூதனிடத்தில் அபிநிவேசம் கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (இவனுடைய ப்ரேமமித்யாதி).

---

(க) தி - வாய் - ௧௦ - ௧௦ - உ.   (ங) தி - வாய் - ௧௦ - ௧௦ - ௧௦.
(உ) கத்யத்ரயம் -   (ச) ஞ,   (ரு) க.

யிலே யிருந்ததென்று நினைத்திருக்குமதொழிய, வருத்தத்துமாய் ஸௌரிபோக்யமுமான திருவடிகளிறே நந்தலையிலிருந்ததுஎன்னும் முறையறியார்களிறே. (நிற்ப) திருவடிகள் பூமியையளக்கவென்று உத்யோகித்த உத்யோகத்தே † குசைதாங்கின வருமையெல்லாந் தோற்றுகிற தாயிற்று. இதினுடைய உத்யோகத்தைக்குசை §(போலே) தாங்கினான் என்றிறே அவன்றனக்கேற்றம். (ஒருகாலும்) பூமியை யளந்த திருவடிகளை யநுபவித்தார் - கீழ்; இத்தால் - ஊர்த்த்வலோகங்களை யளந்த திருவடிகளை யநுபவிக்கிறார். (ஒருகாலும்) மற்றத்திருவடிகளும். மற்றக்காலும் என்னாதே (ஒருகாலும்) என்கையாலே - "இதொன்றிருந்தபடி யென்!" என்கிறார். அந்தத் திருவடிகளையநுபவிக்கிறபோது இதுக்குமேற்பட்ட போக்ய வஸ்துவில்லையாகாதே யென்றிருந்தார், இந்தத் திருவடிகளைக் கண்டவாறே இதுக்கு மேற்பட்ட போக்யவஸ்து வில்லையென்கிறார்.

(காமருசீரித்யாதி), மஹாபலியுடைய மநோரதரூபமான ஜ்ஞாநத்தை அதிக்ரமித்து. († காமருசீரவுணன்) ஸ்ப்ருஹணீயஸ்வபாவனான மஹாபலி. ஜ்ஞாதாக்களடங்க இவனை "அஹங்காரக்ரஸ்தன், பகவத்விபூத்யபஹாரி" என்று நிந்தியாநிற்க, இவர் "மஹாபாக்யவான்" என்கிறார். அதுக்கு ஹேதுவென்னென்னில்; பிற்பாடரான நம்மைப்போலன்றியே ஸ்ரீவாமநனுடைய வடிவழகையும் சீலத்தையும் கண்ணாலேகாணப்பெற்றவனன்றோ, இவனோபாதிபாக்யவான்களுண்டோவென்றிருக்கிறார். நானும் "அடியேன்" என்றிருக்கிறத்தைவிட்டு, பகவத்விபூதியை அபஹரித்து, ஔதார்யத்தை யேறிட்டுக்கொண்டு யஜ்ஞத்திலே இழியப்பெற்றிலேனேயென்கிறார். காமருதல் - விரும்புதல்.

(எண்மதியங்கடந்து)(௧)"மூவடி" என்றவாறே அத்தையொழிந்தவிடம் நம்மதன்றோவென்றிருந்தான், பூமியையடங்க அளந்தவாறே ஊர்த்த்வலோகங்களுண்டிறேயென்று நினைத்திருந்தான், அந்தரிக்ஷத்தைஅளந்தவாறே மேலுள்ளலோக மிழந்தோமென்று நிவ்ருத்தனானான்; ஆகையாலே (கடந்து) என்கிறார். (அண்டமீதுபோகி)

---

(குசைதாங்குகை) - வேகத்திலே போகிற குதிரையைக்கடிவாளத்தை வெட்டி நிறுத்துமாபோலே நிறுத்துகை.

(காமருசீர்) ஆசைப்பட்ட ஔதார்ய குணத்தையுடைய மஹாபலியினுடைய ஹ்ருதயத்திலே எண்ணாநிற்கிற ஜ்ஞாநத்தைக்கடந்தென்று சப்தார்த்தம்.

---

§குண்டலிதம் க்வாசித்கம். (௧) பெரி - திரு ௨ - ௧௦ - ௭.

ஒருதிருவடிகளே அண்டபித்திக்கு மவ்வருகேபோய். அளந்தக்ரமத்திலேசொல்லாதேப்ரதமத்திலே (அண்டமீதுபோகி) என்பானென்னென்னில்; ஸ்ரீவாமநனுடைய விஜயத்தில் தமக்குண்டான ஆதராதிசயத்தாலே அளக்கும்ப்ரதேசத்துக்குக் கொண்டைக் கோல்நாட்டுகிறார். (க) "ஜிதம்பகவதாஜகத்" என்று † ஸ்ரீஜாம்பவாந் மஹாராஜர் அவனுடைய விஜயத்தில் தமக்குண்டான ஆதராதிசயத்தாலே சக்ரவாளகிரியைச் சூழப் பறையடித்துக்கொண்டு திரிந்தாற்போலே. († மீதுபோகி) என்றது - மீதுபோகைக்காகவென்று அர்த்தத்தோடேசேர சப்தத்தை நியமித்துச் சொல்லிப்போகக்கடவது. (உ) "திருவுடையடிகள்தம் நலங்கழல்வணங்கி" என்றத்தை, (வணங்க) என்று அர்த்தத்தை நியமித்துச் சொல்லக்கடவதிறே; அப்பக்ஷத்திலும் முற்படச் சொல்லுகைக்கு ஹேது கொண்டைக்கோல் நாட்டுகிறரென்கிற விதுவாமித்தனை. (எழுந்து - இருவிசும்பினூடுபோய்) என்றந்வயம். (எழுந்து) கையில் நீர்விழுந்த ஸமநந்தரம் மஹாபலியினுடைய யஜ்ஞவாடத்தில்நின்றும் கிளம்பி. இருவிசும்பு - பெரியவாகாசம். பூமியைப்பற்றப் பெரிதாயிருக்கையாலும் அவனுடைய வளர்த்தியில் தமக்குண்டான ஆதராதிசயத்தாலும் அந்தரிக்ஷத்தை (இருவிசும்பு) என்கிறார். (ஊடுபோய்) பூமிக்குமேலே ஸ்வர்க்கத்துக்குக் கீழ நூறாயிரக்காதமாறு ஒக்கத்தையுடைத்தான அந்தரிக்ஷமித்தனையும் விம்மும்படியாகத் திருவடிகளை நிமிர்த்தபடி. அந்தரிக்ஷ ஸ்ருஷ்டி ஸபலமாயிற்றென்கிறார். திருவடிகள் வ்யாபியாதபோது பாழ்போலேகாணும்.

(மேலையித்யாதி) அந்தரிக்ஷத்துக்கு மேலெல்லையாய், ஸ்வர்க்கத்துக்குக் கீழெல்லையா யாயிற்று ஆதித்யபதமிருப்பது; அதுக்கு மேலே நூறாயிரக்காதமாறு - சந்த்ரபதம். ஆனால் ஆதித்ய பதத்தைச்சொல்லி சந்த்ரபதத்தைச் சொல்லாதொழிவா னென்னென்னில்; அஹங்காரக்ரஸ்தராய் பகவத்விமுகரா யிருக்கிறவர்கள்தலையிலே அத்யந்தஸுகுமாரமான திருவடிகளை வைக்கைகையாலே இவர்

† ஸ்ரீஜாம்பவாந் மஹாராஜர் வாமநன் திருவவதாரத்தை § உடனே விஜயத்தைக் கொண்டாடினு ரென்றபடி. (மீது, போகி) போயென்னுதல்; போகைக்காக என்றுதுமுனுதல். (போகி) என்றத்தை, போக என்று நியமிக்கை.

(க) (உ) தி - வாய் - க - ரு - அ.
§ இங்கு சில அக்ஷரங்கள் பதிதமாயிருக்கலாம்,

சிரோபசாரம் பண்ணுகிறார். † அது தோற்றவிறே (தண்மதி) என்கிறது. † "வெங்கதிரோன்" என்றிலரே. வெறும் சதிரவனிறே - அங்கு. மேலைத்தண்மதியும், கீழைக்கதிரவனும். மேலென்றது - கீழையுங் காட்டுமிறே. (தவிரவோடி) அதுக்குமேலேபோய். ஓடியென்று — திருவடிகளை அமைக்கவேண்டும்படியான த்வரையிருக்கிறபடி. (க) "தாய்நாடுகன்றேபோல்" என்று சேஷபூதன் சேஷியைக் கிட்டுகைக்குண்டான த்வரையோபாதி போருமிறே - சேஷிக்கும் சேஷபூதனை லபிக்கைக்குண்டான த்வரையும். எல்லார்க்கும் தந்தாமபிமதஸித்தியிலே த்வரையுண்டாயிருக்குமிறே.

(தாரகையின் புறந்தடவி) நக்ஷத்ரபதத்தையும் வ்யாபித்து அதுக்குமேலேபோய். சந்த்ரபதத்துக்குமேலே நூறாயிரக்காதமாறு உண்டிறே - நக்ஷத்ரபதம்; நக்ஷத்ரபதத்துக்குமேலெல்லை † சிம்சுமாரப்ரஜாபதியிறே; க்ருஹங்களோபாதி நக்ஷத்ரங்களிலேயொருவனிறே; அவனும் பன்னிரண்டுநூறாயிரக் காதமாறுண்டிறே. (தடவி) கெடுத்துத்தேடுவாரைப்போலே ரக்ஷகனுக்கு ரக்ஷ்யவர்க்கம் தேட்டமாயிருக்கிறபடி. இப்படி தடவித் திரிகிறவிடத்திலும் அகப்படாதே (கடந்து) என்கிறார். (உ) "புடைதான்பெரிதே புவி" என்கிறபடியே - த்ரைவிக்ரமாபதாநத்திலும் அகப்படாதே கிடப்பதொருபுடையுண்டாவதே! (தடவி) அநுகூலமாகத் திருவடிகளை வைக்கையாலே ஸுகஸ்பர்சமாயிருந்தபடி யென்னவுமாம். (அப்பால்மிக்கு) ப்ரஹ்மலோகமவதியாக வ்யாபித்து. மஹாபலி அபஹரித்தது த்ரைலோக்யமன்றோ, மேலுள்ளலோகங்களை அளக்கவேண்டுவானென்னென்னில்; அந்யசேஷத்வத்தாலே த்ரைலோக்யமும் நசித்தவோபாதி ஸ்வஸ்வாதந்த்ர்யத்தாலே மேலுள்ளலோகங்களும் நசித்துக் கிடந்ததாயிற்று, (ங) "ஈஶ்வரோஹம்" என்றிருக்குமவர்களாகையாலே. அந்யசேஷத்வத்தால் வரும் அநர்த்தம்போலன்

சிரோபசாரமென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (அதுதோற்றவிறேயித்யாதி). சந்த்ரனுக்குத் தட்பம் ஸ்வபாவமன்றோ, அதிஜ்ஞாபகமானபடியெப்படியென்ன; அருளிச்செய்கிறார் (வெங்கதிரோனென்றிலரே) என்று. ஆதித்யனைச் சொல்லும்போது சிரோபசாரம் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (வெறுங்கதிரவனிறே யங்கு) என்று.

சிம்சுமாரப்ரஜாபதி பதம் - நக்ஷத்ரங்களுக்கவ்வருகே பன்னிரண்டு லக்ஷம் காதமென்றபடி. § ஸ்வதந்த்ரனுக்கானால் அந்ய சேஷமன்றோ வென்ன;

(க) க - திரு - ௯௦. (ங) கீதை - கசு - கச.
(உ) பெரியதிருவந் - எடு. § இங்கு சில அக்ஷரங்கள் மாறியிருக்கலாம்.

றே ஸ்வஸ்வாதந்த்ர்யத்தால் வருமனர்த்தம். † சேஷத்வத்தை யிசைந்தானிறே இவன்.

(மண்முழுதுமகப்படுத்து) சதுர்த்தசபுவநத்தையு மளந்துகொண்டு. மண்என்று பூமியைச்சொல்லி, முழுதும் என்கையாலே - ஊர்த்த்வலோகங்களை நினைக்கிறார். அங்ஙனன்றிக்கே, மண்ணென்று - ஸ்த்தலமாய் மேலுண்டான ஸ்த்தலங்களைச் சொல்லுகிறது. அளந்து என்னாதே (அகப்படுத்து) என்கையாலே - இவன் மேல் விழுக்காடும் அவர்கள் இருப்பும் தோற்றுகிறது. (நின்ற) க்ருதக்ருத்யனாய்நின்ற. சேஷபூதன் சேஷியையலபித்து க்ருதக்ருத்யனாற்போலேகாணும் - சேஷியும் சேஷவஸ்துவை லபித்து க்ருதக்ருத்யனானபடி. (எந்தை) ஸ்ரீவாமநனுடைய வடிவழகையும் சீலத்தையுங்கண்டால் ராஜ்யத்தைக் காற்கடைகொண்டு மார்பைப்பிளக்க வெழுத்துவாங்கிக் கொடுக்க ப்ராப்தமாயிருக்க, ராஜ்யத்தைக் கொண்டுபோனான் இந்த்ரன், மஹாபலி தன்னைவைத்து ராஜ்யத்தைக் கொடுத்தான்; நான் என்னைக் கொடுத்தேனென்கிறார்.

(மலர்புரையு மித்யாதி) நிரதிசயபோக்யமான திருவடிகளை அநுபவிக்கப் பெற்றேன். கீழே-(க) "தளிர்புரையுந்திருவடி" என்கிறார், இங்கே - (மலர்புரையுந்திருவடி) என்கிறார், இதுக்கு ஹேது வென்னென்னில்; ஆழ்வாருடைய விஶ்லேஷத்தாலே வாடினவன் அவருடைய தலையிலே திருவடிகளை வைக்கையாலே தளிரும் முறியுமானபடியைச் சொல்லிற்று - அங்கு; இங்கு - போக்தாக்களாய் அநுபவிக்க இழிந்தவாறே போக்யமாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. (மலர்புரையும்) † ஆஶ்ரிதர்ஸந்நிதியிலே அலரும்தாமரையிறே இது. (திருவடி) அநுபவிக்க இழியுந்துறையும் திருவடிகளிறே. (திருவடியே) என்கிற அவதாரணத்தாலே - அவயவாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறது. மேன்மையும், நீர்மையும், வடிவழகும் §(மூன்றும்) குறைவற்ற விஷயமிறே. "ஈஶ்வரோஹம்" என்றிருப்பார்தலையிலுமகப்படத் திருவடிகளைவைக்கையாலே - மேன்மையில் குறையில்லை; தன்னுடைமையை லபிக்கைக்குத் தான் அர்த்தியாய்ச் செல்லுகையாலே - நீர்மையில் குறையில்லை; துஷ்ப்ரக்ருதியான

---

அருளிச்செய்கிறார் (சேஷத்வத்தையித்யாதி).

மலரோடொத்தால் இந்தமலர் எதுக்கலருமென்ன, அருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதரித்யாதி).

---

(க) க.   § குண்டலிதம் க்வாசித்கம்.

மஹாபலியையுமகப்பட எழுதிக் கொள்ளுகையாலே - வடிவழகில் குறையில்லை; ஆகையாலே புறம்புபோகவேண்டாவிறே.

(வணங்கினேன்) அநுபவிக்கப்பெற்றேன். (க) "𑌨𑌮 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌵𑌾𑌦𑌿𑌨𑌃-நமஇத்யேவவாதிந:" என்று முக்தபோக்யத்தைச் சொல்லக்கடவதிறே. † இவர்க்கு ஆஶ்ரயணீயமும் திருவடிகளே, அநுபாவ்யமும் திருவடிகளே. (௨) "உலகமளந்த பொன்னடியை யடைந்துய்ந்தேன்" என்றிறே ஆஶ்ரயணவேளையிலும் அருளிச்செய்தது. † விமுகனான மஹாபலிக்கும் ருசியைப்பிறப்பிக்கும் ஸௌந்தர்யத்தையுடையவனையொழிய ஆஶ்ரயணீயருண்டோ? தன்னுடைமையை லபிக்கைக்குத்தான் அர்த்தியாய்ச்செல்லும் சீலவானையொழிய ஆஶ்ரயணீயருண்டோ? அதீந்த்ரியமான விக்ரஹத்தை துஷ்ப்ரக்ருதிகள் கண்ணுக்குமகப்பட விஷயமாக்கும் ஸௌலபனையொழிய ஆஶ்ரயணீயருண்டோ? சதுர்த்தச புவநத்தையுமளந்த ஸர்வஸ்மாத்பரனையொழிய ஆஶ்ரயணீயருண்டோவென்கிறார். ஸர்வஸ்மாத்பரனாய், சீலவானாய், ஸௌலபனாய், ருசிஜநகனாயிருக்குமவனிறே-ஆஶ்ரயணீயனுமானும் போக்யபூதனுமானும். (௩) "𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌕𑍍𑌰𑌮 𑌤𑍍𑌵𑌚𑍍𑌚𑌰𑌣𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌦𑍍𑌵𑌯𑌂 𑌮𑌦𑍀𑌯𑌮𑍂𑌰𑍍𑌧𑌾𑌨𑌮𑌲𑌙𑍍𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 - த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி" என்றார் ஆளவந்தார்; (௪) "𑌲𑍋𑌕𑌵𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌤𑍇 𑌵𑍍𑌰𑌜𑌂 𑌵𑌿𑌭𑍋 - லோகவிக்ராந்தசரணௌ ஶரணம்தேவ்ரஜம்விபோ" என்றார் உடையவர். ... (௫)

மூ.—அலம்புரிந்தநெடுந்தடக்கையமரர்வேந்தன்
அஞ்சிறைப்புள்தனிப்பாகனவுணர்க்கென்றும்
சலம்புரிந்தங்கருளில்லாத்தன்மையாளன்
தானுகந்தவூரெல்லாந்தன்தாள்பாடி

---

வணங்குகை ஆஶ்ரயணமன்றோ; அநுபவமோ வென்ன, அருளிச்செய்கிறார் (நம இத்யேவ வாதிந: இத்யாதி). திருவடிகளிலே வணங்குகை ஆஶ்ரயணமன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் (இவர்க்கித்யாதி). அவதாராந்தரங்களையொழிய இவனே ஆஶ்ரயணீயனும் அநுபாவ்யனு மென்கைக்கு அநுகுணமான குணங்களை யருளிச்செய்கிறார் (விமுகனானவித்யாதி). அவ்வவதாரத்தை அநுபாவ்யமும் ஆஶ்ரயணீயமுமாகப் பற்றினபேருண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (த்ரிவிக்ரமேத்யாதி). ... ... ... ... (௫)

---

(க) பார - மோக்ஷ -
(௨) தி - மொ - ௫ - அ - ௯.
(௩) ஸ்தோ - ர - ௩௦.
(௪) கத்யத்ரயம்.

நிலம்பரந்துவருங்கலுழிப்பெண்ணையீர்த்த
நெடுவேய்கள்படுமுத்தமுந்தவுந்திப்
புலம்பரந்துபொன்விளைக்கும்பொய்கைவேலிப்
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே. (சு)

பதம்.—அலம்புரிந்த, நெடும், தடம், கை, அமரர் வேந்தன், (ரு) அம், சிறை, புள், தனிப்பாகன், அவுணர்க்கு,(கo) என்றும், சலம்புரிந்து, அங்கு, அருளில்லா, தன்மையாளன்தான், (கரு) உகந்தவூரெல்லாம், தன்தாள்பாடி, நிலம்பரந்துவரும், கலுழி, பெண்ணை, (உo) ஈர்த்த, நெடுவேய்கள், படு, முத்தம், உந்த, (உரு) உந்தி, புலம், பரந்து, பொன்விளைக்கும், பொய்கை, (௩o) வேலி, பூம், கோவலூர், நெஞ்சே, தொழுதும்போது. (௩ரு)

உரை.—(இரப்பாளர்)போதும்போதும் என்னும்படி கொடாநிற்பதாய், நீண்டு, பரந்திருந்துள்ள, திருக்கைகளை யுடையனாய், நித்ய ஸூரி நிர்வாஹகனாய், (ரு) அழகிய, சிறகை யுடைத்தான, பெரியதிருவடிக்கு, அத்விதீயனான பாகனாய், ராக்ஷஸர்களுக்கு, (கo) எந்தக்காலத்திலும், தீங்கிழைக்குமவனாய், அவர்கள் விஷயத்தில், தயையின்மையையே, ஸ்வபாவமாகவுடையனான ஸர்வேஸ்வரன், (கரு) உகந்தருளின நிலங்களிலெல்லாம், அவனுடைய திருவடிகளைப்பாடி, பூமியெங்கும் வ்யாபித்து வருமதாய், கலக்கத்தை யுடைத்தான, தக்ஷிண பிநாகிநியானது, (உo) இழுத்துக்கொண்டு வருகிற, பெரிய மூங்கில்களில், உண்டாகிற, முத்துக்களை, (கழனிகளிலே கொண்டு)தள்ள, (உரு) (கர்ஷகர் தங்கள் பயிருக்குக்களையென்று) தள்ளப்பட்டு, கழனிகளெங்கும், பரவியிருக்குமதாய், பொன்னை விளையாநின்றுள்ள, தடாகங்களை, (௩o) சுற்றிலுமுடையதாய், தர்சநீயமான, திருக்கோவலூரை, மநஸ்ஸே! அநுபவிப்போம் வருவாயாக. (௩ரு)

வ்யா.—ஆறும்பாட்டு. (அலம்புரிந்த) (க) "மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழ்தியேல்" என்று † திருமந்த்ரத்தை ப்ரமாணத்தாலே கண்டுபோகையன்றியே கண்ணாலேகண்டநுபவிக்கலாம்படி வந்தவதரித்து எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்து முறையுணர்த்தின ஸம்பந்தத்தையும் தத்காலத்தில் செவ்வியையும், அதுக்குப் பிற்படுகையாலே அநுபவிக்கப்பெற்றிலோமென்று விஷண்ணராக, "அவதாரத்துக்குப் பிற்பட்டாரை அநுபவிப்பிக்கைக் குறைப்பாகவன்றோ நாம் செவ்வியோடே திருக்கோவலூரிலேவந்துநின்றது" என்று உகந்தருளினதேசத்தைக்காட்டிக்கொ

ஆறும்பாட்டு.—(அலம்புரிந்த) (திருமந்த்ரத்தை) மந்த்ரமென்று கீழே சொல்லப்பட்ட ஸர்வேஸ்வரனை. மந்த்ரார்த்தபூதன் ஈஸ்வரனன்றோ, ஊரை

(க) ச-

டுக்க, "நெஞ்சே! நமக்கு வாய்த்தது, அநுபவிக்கப்போராய்" என்கிறார். † திருமந்த்ரார்த்தத்துக்கெல்லை உகந்தருளின நிலங்களிறே. திருமந்த்ரத்தை ப்ரதமத்திலே லபித்து அதினர்த்தத்தை யநுபவிக்கிறவிடத்திலே, (க) "சூழ்புனற்குடந்தையே தொழுது" என்றன்றே யநுபவித்தது. ஆனால், "புலம்பரந்து பொன்விளைக்கும் பொய்கை வேலிப்பூங்கோவலூர் தொழுதும்" என்னவமையாதோ, இவையெல்லாம் சொல்லவேண்டுவா னென்னென்னில்; † உகந்தருளின நிலங்களுடைய † அடிப்பாடு சொல்லுகிறது. மேன்மையும் நீர்மையும்போலேகாணும் நாராயண சப்தார்த்தமாகிறது.

(அலம்புரிந்த நெடுந்தடக்கை) இட்டுநீண்டகை என்கிறார். அர்த்திகள் "அலம்" என்னும்படியாகக் கொடுக்கை. பின்னைப் புறம்பொருவர்வாசலிலே செல்லாதபடி பர்யாப்தமாகக் கொடுக்கை. இத்தால் - ஈஸ்வரனைப்பற்றியிருக்கிறவன் வ்யதிரிக்த விஷயங்களில் ஸாபேக்ஷனல்ல னென்னுமிடம் சொல்லுகிறது. அதவா, (அலம் புரிந்த) ஔதார்யம்பண்ண உத்யோகித்தால் அவன் "அமையும்" என்றவாறே மீளுமித்தனை போக்கித் தன்கொடைக்கு அவதியின்றியிலேயிருக்கை. உழக்கிலே பதக்கைப் பொகடவொண்ணாமையாலே மீளுமித்தனை. † இவனுடைய ஔதார்யத்தைப் பார்த்தால் அவனுடைய மநோரதம் கடலில்குளப்படிபோலேயிறே யிருப்பது § (புரிகை - கொடுக்கையும் மீளுகையும்) அலம்என்னக் கொடுக்கையாவது - பின்னையொருத்தன்பக்கலிலும் ஸாபேக்ஷனாகாதபடியாகக் கொடுக்கை. அநந்யப்ரயோஜநனுக்குத் தன்னையும் தன்னுடைமையையும் கொடுத்தால் பின்னைத் தனக்குக் கொடுக்க விரகில்லை, அவனும் அபேக்ஷிக்கவேண்டுவதில்லை, அவனும் அநுபவத்திலே யிழியுமித்தனை, இவனும் (உ) *என்செய்வனென்றே யிருந்துபோமித்தனை.

(நெடுந்தடக்கை) கொடுக்கையே விளைநீராகவளர்ந்தகை. ரக்ஷகனுக்குவ்ருத்தி ரக்ஷணதர்மத்தாலேயிறே. ஔதார்யத்தைப்

---

அநுபவிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (திருமந்த்ரார்த்தத்துக்கித்யாதி). வரலாறு சொல்லுகிறானென்னுதல்; மேன்மையும் நீர்மையும் அர்த்தமாகையாலே சொல்லுகிறானென்னுதல். இவற்றைவாக்யத்வயத்தாலே யருளிச்செய்கிறார் (உகந்தருளின நிலங்களித்யாதி.) (அடிப்பாடு) - வரலாறு.

(புரிந்த) புரிகை - கொடுக்கையாதல்; மீளுகையாதல். ஆசைபெருத்தன்றோ விருப்பது, உழக்கு என்பா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (இவனுடையவித்யாதி).

---

(க) தி - மொ - ௧ - ௧ - ௨. (௨) பெரி - திருவந் - ௫௩.

§ குண்டலிதம் அரும்பதத்தோடு புநருக்தம்.

பரிச்சேதிக்கவொண்ணாதகை என்னவுமாம்; அர்த்திகளிருந்தவ ளவும் செல்ல நீண்டகையென்னவுமாம். (தடக்கை) (க) "பாஹு ச்சாயாமவஷ்டப்த:- பாஹுச்சாயாமவஷ்டப்தஃ" என்கிறபடியே லோகமடங்க ஒதுங்கினாலும் விஞ்சியிருக்கும்படியான தோள். † ஸர்வாதாரமுமாய் ஆஸ்ரயணீயமுமாய்த் தானே ப்ரயோஜநமுமா யிருக்குங்கை. தடக்கை - பரந்தகை.

(அமரர்வேந்தன்) இந்த ஔதார்யத்தை உபஜீவிக்குமவர் களைச் சொல்லுகிறது. அமரர் - மரணதர்மங்களில்லாதவர்கள். நித்யஸூரிகளுக்கு மரணப்ரஸங்க முண்டோவென்னில்; போக விச்சேதத்திலே மூச்சடங்குமவர்களாகையாலே மரணப்ரஸங்க முண்டு, அதில்லாமையாலே (அமரர்) என்கிறது. † அநுபவம் நித்யமானவாறே அவர்களும் நித்யரானார்களித்தனையிறே. (வே ந்தன்) அவர்களை அடிமைகொள்ளக்கடவதாக முடிகவித்திருக்கிற வன். வேந்தன் - அரசன். † அவன் அடிமைகொள்ளுகையிலே அபி ஷிக்தனாயிருக்கும்; இவர்கள் (உ) "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி- அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று தாஸ்யத்திலே அபிஷிக்தரா யிருப்பர் கள்; அபிஷேகம் இருவர்க்கு மொக்கும். (ரு) "அரசமர்ந்தானடி சூடுமரசு" என்னக்கடவதிறே.

(அஞ்சிறைப்புள்தனிப்பாகன்) அவர்களை யடிமைகொள்ளும் படிக்கு த்ருஷ்டாந்தமாக ஒருவ்யக்தியைப் பேசுகிறார். † அழ கியசிறகையுடைத்தான பெரியதிருவடிக்கு அத்விதீயனான பாகன். வினையுள்ளபோதன்றோ வாஹநாபேக்ஷையுள்ளதென்னில்; வினை யில்லாதபோதும், ராஜாக்கள் அழகுசெண்டேறக் கடவதா யிறேயிருப்பது. (ச) "ஓடும்புள்ளேறி" என்னக்கடவதிறே. பெரியதிருவடியுடைய செல்லாமையாலும் தன் செல்லாமை யாலும் நித்யஸூரிகளை அநுபவிப்பிக்கைக்காகவும் அழகு செண் டேறக்கடவதாயிறே யிருப்பது (ரு) "செழும்பறவைதானேறித்

எடுத்தஸ்லோகத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸர்வாதாரமு மாயித்யாதி).

மூச்சடங்கும்படியானால் நித்யரானபடி யெப்படி யென்ன; அருளிச்செ ய்கிறார் (அநுபவமித்யாதி). (முடியுடைவானவர்) என்று அவர்களுக்கு முடியு ண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (அவன் அடிமைகொள்ளுகையித்யாதி).

எடுத்த பாசுரத்துக்கு அர்த்தமருளிச் செய்கிறார் (அழகியசிறகையித் யாதி). தன் செல்லாமைக்குப்ரமாண மருளிச்செய்கிறார் (செழும்பறவையித்

(க) ரா-ஸு-ருச-ருக. (ச) தி-வாய்-க-அ-க.
(உ) ரா-அ-ருக-உ௫. (௫) பெரியதிருவந்-அக.
(ரு) பெரு-திரு-கo-எ.

திரிவான்" என்னக்கடவதிறே. (அஞ்சிறை) பெரியதிருவடியை மேல்கொண்டால் திருப்பரியட்டத்தைக் கொய்து சாத்தினாற்போலே அங்குத்தைக்கு அலங்காரமா யிருக்கை. அதவா, அழகு சென்றேறப்போதை ஆயாஸத்துக்கு ஆலவட்டம் பணிமாறினாற்போலே இரண்டு திருச்சிறகாலும் ஆஸ்வாஸகரா யிருக்கிறபடியைச் சொல்லுகிறது. † (க) "வ்யஜந த்ரயீமய:- வ்யஜநம் த்ரயீமய:" என்னக்கடவதிறே. அங்ஙனன்றியே, பரதத்வத்தை ஆஸ்ரிதருடைய காற்கடையிலேகொண்டுவந்து சேர்க்கைக்கடியான † பரிகரத்தையுடையவனென்னுதல்.

(புள்) பாபயோநியான ஜந்மம் அவர்களுக்குண்டோவென்னில்; பிராட்டியும் ஸர்வேஸ்வரனும் திருத்திரைக்குள்ளேயிருந்தால், நிலா, தென்றல் ஸஞ்சரிக்கும்போது பிற்காலிக்க வேண்டும்படியிறே அப்போதை ஐகாந்த்யமிருப்பது; அவ்வவஸ்த்தாநுகுணமாக † கூனர் † குறளர் ஸஞ்சரிக்குமாபோலே அந்தரங்கஸேவைக்கு அநுகூலமான வடிவைப் பரிக்ரஹிப்பார்களென்கை. † ஸரீஸ்ருப ஜாதியோடு பக்ஷிஜாதியோடு ஸ்த்தாவரஜாதியோடுவாசியற பரிக்ரஹிப்பர்கள், † ஸம்ஸாரி, கர்மபலாநுகுணமாக சரீரபரிக்ரஹம் பண்ணக்கடவன்; † அவன் அவஸ்த்தாநுகுணமாக சரீரபரிக்ரஹம் பண்ணக்கடவன். (தனிப்பாகன்) பாகன் என்கையாலே - அவனுக்குத்தான் பவ்யனாய் தனக்கு அவன் பவ்யனாயிருக்கிறபடியும் தோற்றுகிறது. ஆஜ்ஞையைத் தன் நினைவிலே நடத்தக்கடவனாயும் அதுக்கு சேஷனாயுமிறே பாகனிருப்பது; பெரியதிருவடிமுதுகிலே நற்றரிக்கவிருந்து அவனைநடத்துகையிறே ஸர்வாதிகத்வலக்ஷணம்; அதுபுறம்பில்லாமையாலேஅத்விதீயத்வம். அதவா, (தனிப்பாகன்) நித்யஸூரிகளுக்கு அத்விதீயநிர்வாஹகனென்னவுமாம். "அயர்வறுமமரர்களதிபதி" என்னக்கடவதிறே.

(அவுணர்க்கித்யாதி) இத்தால் - அத்தேசத்தில் விரோதிப்ரஸங்கமில்லாமையாலே ராமக்ருஷ்ணாதிரூபத்தாலே ஸாதுபரித்ரா

---

யாத்.) (பரிகரத்தையுடையவன்) (பரிகரம்) சிறகு. "புள்தனிப்பாகன்" என்றது - நித்யஸூரிகளுக்கும் உபலக்ஷணமாக்கி, அத்விதீயநிர்வாஹகத்வ மருளிச்செய்கிறார் (வ்யஜநமித்யாதி). (கூனர்) - வ்ருத்தர். (குறளர்) ஏக்கடிகள் - (ஸரீஸ்ருபம்)-பாம்பு. ஆனாலும் சரீரபரிக்ரஹம் கர்மபலமன்றோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரீத்யாதி). (அவன்) - பெரிய திருவடி.

---

க) ஸ்தோ. ர - சக.

ஞார்த்தமாகவவதரித்து தத்விரோதிநிரஸநம் பண்ணினபடியைச் சொல்லுகிறது. துஷ்க்ருத்விநாசமும் அவதார ப்ரயோஜநமிறே. †அவதாரத்துக்கு ப்ரயோஜநம் விரோதிநிவ்ருத்தியைப்பண்ணுகை யோவென்னில்; ப்ரதாநம் விரோதிநிவ்ருத்தியாகையாலே சொல்லு கிறது. (க) "సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి - ஸர்வபாபேப்யோமோ க்ஷயிஷ்யாமி" என்னக்கடவதிறே. † ஸஹஜகைங்கர்ய மாகையா லே ஆவிர்ப்பாவமிறே யுள்ளது; † ஸாத்யம் விரோதிநிவ்ருத்தியிறே. ஆகையாலிறே † இத்தையிட்டு † அத்தை உபலக்ஷிக்கவேண்டுகி றது. (அவுணர்) இத்தால் - அஸுரஜாதியைச் சொல்லுகிறதன்று, அஹங்கார மமகாரயுக்தராய், (உ) "నన మేయమ్-நநமேயம்" என்றி ருக்குமவர்களைச் சொல்லுகிறது. ஸ்ரீப்ரஹ்லாதனை, ஜந்மமதுவா யிருக்கச்செய்தே, (௩) "ఉపమానమశేషాణాం సాధూనామ్-உபமா நமசேஷாணாம் ஸாதூநாம்" என்கையாலும், ராக்ஷஸஜந்மமா யிருக் கச்செய்தே ஸ்ரீவிபீஷணாழ்வானை, (௪) "విభీషణస్తు ధర్మాత్మా-விபீஷ ணஸ்து தர்மாத்மா" என்கையாலும், தேவயோநியாயிருக்கச்செய் தே ஜயந்தன் ப்ரஹ்மாஸ்த்ரத்துக் கிலக்காகையாலும் ஜாதிபரம ன்று, ஸ்வபாவபரம். (௫) "విష్ణుభక్తిపరో దేవో విపరీతస్తథాఽసురః- விஷ்ணுபக்திபரோதேவோ விபரீதஸ்ததாஉஸுர:" என்னக்கடவ திறே.

(என்றும் சலம்புரிந்து) அவர்களுக்கு (உ) "నన మేయమ్-நநமே யம்" என்றிருக்கை வ்யவஸ்திதமானாற்போலேயாயிற்று அவர் கள் திறத்தில் இவனுக்கும் க்ரோதம் வ்யவஸ்திதமாயிருக்கும்படி. (புரிந்து) ஈஸ்வரனைக்கிட்டினார்க்கு வெறுமன்போகவேண்டா கா ணும். ஔதார்யத்தைப்பெற்றுப் போதல், க்ரோதத்தைப் பெற்று ப்போதல் செய்யுமித்தனைபோக்கி ப்ரயோஜநசூந்யமாயிராது. ஸ்வ விநாசம் ப்ரயோஜநமாயிருக்குமோவென்னில்; அவர்கள் நினைவா லே ப்ரயோஜநமன்றியிலே யிருந்ததேயாகிலும் அதுதான் அவர் களுக்கு ஹிதமாய்த் தலைக்கட்டாநின்றதிறே. ஒருவன் தலையை யறுத்துக்கொள்ளப்புக்கால் கையில்வாளைவாங்குகை ஹிதமா யிரு

இரண்டும் ப்ரயோஜநமானால் பரித்ராணமும் சொல்லவேண்டாவோ என்று சங்காபிப்ராயம். சரமஸ்லோகத்திலேதான் இஷ்டப்ராப்தி சொல்லா திருப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸஹஜகைங்கர்யேத்யாதி). (ஸாத்யம்)-ஸாதிக்கவேண்டுவது. (இத்தை)-விரோதிநிவ்ருத்தியை. (அத்தை) கைங்கர்யத்தை.

(க) கீதை-கஅ-௬௬-
(உ) ரா-யு-௩௬-௧௧.
(௩)
(௪) ரா-ஆ-௧௭-உ௪. (௫) விஷ்ணுத.

க்குமாபோலே, பகவத்பாகவத நிந்தைக்கு உபகரணமான கரணத்தைப் போக்குகை உபகாரமாகக்கடவது. தலையையறுப்பது † ரக்ஷகனுடைய வ்யாபாரமாகையாலே ஸர்வமும் ரக்ஷணமாயிருக்குமிறே. (க) † "రామబాణాసనక్షిప్త మావహత్పరమాంగతిమ్-ராமபாணாஸநக்ஷிப்தமாவஹத்பரமாங்கதிம்" என்றும், (உ) "தலையையாங்கேயறுப்பதே கருமம்" என்றும் சொல்லக்கடவதிறே. புரிகையாவது - க்ரோதகார்யமான நிரஸநத்தைப்பண்ணுகை. புரிதல் - செய்தலென்று தமிழர் சொல்லுவர்கள். சலத்தைப்பண்ணி என்றபடி. புரிதல் - செய்தலும், கொடுத்தலும்.

(அங்கருளில்லாத் தன்மையாளன்) ஆம்ரிதவிஷயத்தில் தயை வ்யவஸ்த்திதமாயிருக்குமாபோலே அவர்கள்பக்கல் நிர்த்தயத்வம் வ்யவஸ்த்திதமாயிருக்கும். †சிற்றமும்தலையுமிரண்டும் விருத்த தர்மம், ஏகாம்ரயத்திலே வர்த்திக்கலாமிறே விஷயவிபாகத்தாலே. அசேதநமாயிருப்பதொரு கல்லு, சந்த்ரஸந்நிதியிலே நீராகவும் அஸந்நிதியிலே கல்லாகவுங் காணாநின்றோமிறே. (தன்மையாளன்) இதுவே தனக்கு ஸ்வபாவமாக வுடையவன். ஆம்ரிதவிஷயத்தில் உதாரனாய் தயாவானாயிருக்கையும், தத்விரோதிகள்பக்கல் க்ருத்தனாய நிர்த்தயனாயிருக்கையுமே ஸ்வபாவனாயிருக்கும்.

(தானுகந்தவூர்) (அமரர்வேந்தன் தானுகந்தவூர்) (அங்கருளில்லாத்தன்மையாளன் தானுகந்தவூர்) நிரதிசய போக்யன் வர்த்திக்கிற தேசம்; விரோதி நிரஸநசீலன் வர்த்திக்கிறதேசம். நித்யஸூரிகளும் தானுமாக உகந்ததேசமிறே பரமபதம்; ஸம்ஸாரிகள் விமுகராயிருக்கத் தானே யுகந்ததேசமிறேயிது. உடைமை நசியாமைக்காகத் தானே ஆதரித்துவந்து நிற்கிறதேசமிறே. இத்தால் - உகந்தருளினநிலங்களை ஆம்ரயணீயமும் ப்ராப்யமுமென்கை. ‡(அமரர்வேந்தன்) என்கையாலே - ஸ்வாமித்வங் கண்டோம், அத்தேசத்தைக் காற்கடைகொண்டு தோஷபூயிஷ்டமான இத்தேசத்திலே

---

† விநாசமும் ப்ரயோஜநமென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன, அருளிச்செய்கிறார் (ரக்ஷகனுடைய வித்யாதி) ஹிம்ஸிக்கை உபகாரமென்னுமதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (ராமபாணாஸநேத்யாதி). "వహ ప్రాపణే - வஹ ப்ராபணே" தாது; - அடைவிப்பிக்கை.

† விருத்ததர்மம் ஏகாம்ரயத்திலே கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (சீற்றமுமித்யாதி).

‡ ப்ராப்யமும் ப்ராபகமும் என்கைக்கு அவற்றுக்கு உபயோகியான குண

---

(க) ரா-கி-கஎ-கஅ. (உ) தி-மா-அ.

வந்து நிற்கையாலே வாத்ஸல்யங் கண்டோம், கீழ் உக்தமான சக்தி கிடக்கச்செய்தே "மூச்சிலீ" என்னும்படி தன்னை அவர்களிட்ட வழக்காக்கி வைக்கையாலே ஸௌசீலதை கண்டோம், சக்ஷுர்விஷயமா யிருக்கையாலே ஸௌலப்யங் கண்டோம். நித்யஸூரிகள் ஏற்றுஅஂகமுண்ண இங்கேவருகையாலே ப்ராப்யபௌஷ்கல்யமுள்ளது இங்கேயிறே. (க) "வானவர் வானவர் கோனொடுஞ் சிந்து பூம கிழுந் திருவேங்கடம்" என்றாரிறே - நம்மாழ்வார்.

(க) [வானவர் வானவர்கோனொடும்] † அடியறப் போந்தபடி. எல்லாரையும் போகவிட்டு அகம்பார்த்திருக்கிறாப்போலேகாணும் ஸ்ரீ வைகுண்டநாதன். (தானுகந்தவூர்) அவனுகந்ததாக வமையும் போலேகாணும் இவராதரிக்கைக்கு.

(ஊரெல்லாம்) ஜ்ஞாநம் பிறப்பதற்கு முன்பு, (உ) "அவரவர் பணை மூலே துணையா" என்று ஜாதிநியதியின் றியிலே வரையாதே உத்தேஶ்யமானாப்போலே ஜ்ஞாநம்பிறந்தபின்பு திருப்பதிகளெல்லாம் உத்தேஶ்யமாயிருக்கிறபடி. அநுபவிக்கப்போகிறது திருக்கோவலூராயிருக்க, (ஊரெல்லாம்) என்பானென்னென்னில்; ஒருருக்குப்போம்போது நீர்ச்சாய்வையும் நிழற்சாய்வையும் பற்றிப் போவாரைப்போலே திருப்பதிகளிலே ஒதுங்கிப் போகிறார். (௩) * †வாஸுதேவதருவை அநுபவிக்கப் போம்போது (௩)*வாஸுதேவ தருச்†சாயையிலேயிறேஒதுங்கிப்போவது †"ஸர்வம்வஸதிதிவாஸுதேவஃ' என்கிறபடியே - உகந்தருளினநிலங்களெல்லாம் வஸ்தவ்ய பூமியிறே; தத்வ்யதிரிக்தங்களை மருபூமியாகவிறே இவர் நினைத்திருப்பது. (தன்தாள்பாடி) வழிபோவார்க்குப் பாதேயம்வேணுமிறே. (௪) "పాథేయం పుణ్డరీకాక్షనామసఙ్కీర్తనామృతమ్- பாதேயம்புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ருதம்" என்னக்கடவதிறே. ப்ரா

ங்களுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (அமரர்வேந்த னித்யாதி).

(அடியற) - எல்லார்க்கும் ப்ரதாநரான ஸேனைமுதலியாரோடேகூட.

திருப்பதிகளிலே தங்கவேணுமோ, மேருவிடமாநாதோவென்ன; அருளிச்செய்கிறார் (வாஸுதேவ தருவையித்யாதி). (தரு) ப்ராப்யம்; (நிழல்)- ப்ராபகம். உபாயோபேயம் அவனே யென்றபடி. அவன் சாயையிலே போகைக்கு அங்கே வர்த்திக்கிறாரோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸர்வம்வஸதீத்யாதி). ஸர்வசப்தத்தை தவ்ய தேசமாத்ரத்திலே ஒதுக்குகிறார்.

(க) தி-வாய்-௩-௩-எ. (௩)
(உ) தி-மொ-க-க-உ- (௪)

ப்யப்ராபகங்களிரண்டுமான தன் திருவடிகளை. தன்னைப்பாடி என்னாதே (தாள்பாடி) என்கையாலே, கீழ் (௧) "ஒருகால் நிற்பவொருகாலும்" என்றதிருவடிகளாயிற்று இவர்க்குப் பாதேயம் (பாடி) ப்ரீதிப்ரேரிதராய்க் கொண்டுபாடி.

(நிலமித்யாதி) பெண்ணையைக்காண்பதற்கு முன்புபோலேகாணும் திருவடிகளைப் பாடுவது, பெண்ணையைக்கண்டவாறே திருவடிகளைமறந்து இத்தைக்கவிபாடத்தொடங்கினர். அதுக்குஹேதுவென்னென்னில்; அத்தேசத்திலே தமக்கு ஆதரமுண்டாகையாலே அத்தேசத்தை ஆதரிப்பாரும் தமக்குத் துணையாயிருப்பரிறே. (நிலம் பரந்துவரும்) † புருஷோத்தமனை ஒருஸ்த்ரீ அநுபவிக்கப் § போகிறுளாகையாலே அத்யாதரத்தோடே யாயிற்றுப் போகிறது. திருக்கோவலூரை அநுபவிக்கப்போகிற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே கரைக்குமீதேவழிந்து குடியிருப்புக்களை யழித்து. கரையில் நிற்கிறவேய்களை † பீட்கன்றாக வேர்ப்பற்றிலே குத்தியெடுத்து இழுத்துக்கொண்டு வருவதாய்க்கொண்டு பெரியகிளர்த்தியோடே வருகிறபடி. (கலுழி) கலக்கமும், ‡ கானாறும். ப்ரீதிப்ரகர்ஷத்தாலே கலங்கிப்போகிறபடி. பகவத்விஷயத்தை யநுபவிக்கப்போம்போது அவன்விபூதியை யழித்துக்கொண்டுபோகலாமோ வென்னில்; விபூதியினழிவுபாரான், இவளாதரத்தையிறே அவன் பார்ப்பது. கண்டாகர்ணன், "ருஷிப்பிணம் இப்போதுகொன்றது, இத்தை இப்போது அமுதுசெய்தருளவேணும்" என்றானிறே. பிராட்டியைக்கண்ட ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, முதலிகள் மதுவநத்தை யழிக்க அத்தைவந்து மஹாராஜர்க்குச் சொல்ல, "நங்கார்யம் க்ருதக்ருத்ய மாயிற்றது" என்று உகந்தார்களிறே-மஹாராஜரும் ராஜகுமாரர்களும். (௨) "த்ருஷ்டா ஸீதா-த்ருஷ்டாஸீதா" என்னவேண்டுவதில்லை. எம்பார் இவ்விடத்திலே "நடுவே மதுவநமொன்றில்லையாகில் முதலிகளுடையகிளர்த்தி ராஜகுமாரர்களுடையமுதுகோடே போமித்தனைகாண்" என்று அருளிச்செய்வர்.

---

† ஆர்க்கு ஆதரமுண்டாவென்ன; அருளிச்செய்கிறார் (புருஷோத்தமனையித்யாதி). (பீட்கன்றாக)-கீழ்க்கன்றோடே. (கானாறு)-காட்டருவிகள். ரஸோக்த்யாகவருளிச்செய்கிறார் (எம்பாரித்யாதி). (முதுகோடேபோகை)-ஸந்தோஷத்தாலே ஒருத்தரொருத்தராகத் திருமேனியைக் கட்டிக்கொண்டால் ஸௌகுமார்யத்தாலே ஸஹியாதென்றபடி.

---

(௧) ௫-　　(௨) ரா-பா-௧-௭௮.

§ (பா)பார்க்கிறுளாகையாலே. ப்ரார்த்திக்கிறுளாகையாலே.

(பெண்ணையீர்த்தநெடுவேய்கள்படுமுத்தம்) ஆஸந்நப்ரஸவைகளான கர்ப்பிணிகளை மயிரைப்பிடித்திழுத்தால் அதுவே ஹேதுவாக ப்ரஸவிக்குமாபோலே வேர்ப்பற்றிலே குத்தியெடுத்து அலைத்துக்கொண்டு போகப்புக்கவாறே வேய்கள் உடைந்து முத்தை ஈன்றபடி. (நெடுவேய்கள்) திருவுலகளந்தருளினபடிக்கு ஸ்மாரகமா யிருக்கிறதாயிற்று - வேய்களுடைய ஓக்கம். (உந்தவுந்தி) பெண்ணையானது ப்ரீதிப்ரகர்ஷத்தாலே முத்தைக்கொடுசென்று வயல்களிலே தள்ள, கர்ஷகர் தங்கள்பயிருக்குக் களைகளென்றுதள்ள, †அவர்களாலே நோக்கவொண்ணாதபடியாகத் தள்ளி வயலெங்கும் பரந்ததாயிற்று முத்து. விளைவதுபொன்னாய், முத்து களையாம்படியிறே தேசத்தின்போக்யதை. (௧)*பொன்படுகுட்டமிறே. (௨) "பொன்னாய்" என்கிறவஸ்துவை விளைக்கும் தேசம்போலே காணும். (பொய்கைவேலி) இப்படிப்பட்டவயல்களையும் தடாகங்களையும் சுற்றிலேயுடைத்தாயிருக்கை. (௩)"†నదీ స్తటాకాని చ పూరయిత్వా-நதீஸ் தடாகாநிசபூரயித்வா" என்கிறபடியே வர்ஷம் நிறைக்கையன்றிக்கே ஆறுநிறைக்கக்கடவதான பொய்கைகளிறே.

(பூங்கோவலூர்) அவன்றன்பாடுபோகவேண்டாதபடி தேசந்தானே போக்யமா யிருக்கிறபடி. (தொழுதும்போதுநெஞ்சே) நெஞ்சே! அநுபவிக்கப்போராய் (தொழுவோம்) என்னுமளவைத்திருக்க (போது) என்கிறது, ஆற்றினுடைய ஆதரத்தையும், வயலின்போக்யதையையும், ஊரின்போக்யதையையும சொல்லக் கேட்டபோதே திருவுள்ளம், கட்டணம் கட்டியெடுக்கவேண்டும்படிதளைப்பட்டுக் கிடந்தது. அன்றியே, தன்தாள்பாடிஎன்று - திருவடிகளைப் பாடுகையாலே திருவடிகளின்போக்யதையும் மிடற்றோசையும் வருத்தத்திருவுள்ளம் தளர்ந்தபடியாகவுமாம், கையைக் கொடுத்துப்போராயென்கிறார். (தொழுதும்) (௪) "నమ ఇత్యేవ వాదినః- நம இத்யேவவாதிநः" என்றார் - கீழ்; இதில் - (௪) "బద్ధాఞ్జలిపుటాః- பத்தாஞ்சலிபுடாः" என்கிறார். இரண்டும் முக்தருடைய அநுபவமிறே. ... ... ... ... ... (௬)

(உந்தவுந்தி) - கர்ஷகர் களையென்றுதள்ள அத்தை மீறித்தான் தள்ளியென்றபடி. (பொய்கைவேலி) பொய்கைகளுக்கு அதிசயமேதென்ன; அருளிச்செய்கிறார் (நதீஸ்தடாகாநிஇத்யாதி). (௬)

(௧)
(௨) ௧௦.
(௩)
(௪) பார-மோக்ஷ-௧௩௩.

மூ.—வற்புடையவரைநெடுந்தோள்மன்னர்மாள
வடிவாயமழுவேந்தியுலகமாண்டு
வெற்புடையநெடுங்கடலுள்தனிவேலுய்த்த
வேள்முதலாவென்றானூர்விந்தைமேய
கற்புடையமடக்கன்னிகாவல்பூண்ட
கடிபொழில்சூழ்நெடுமறுகில்கமலவேலி
பொற்புடையமலையரையன்பணியநின்ற
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே!. (எ)

பதம்.—வடிவாய, மழு, ஏந்தி, வற்புடைய, வரை, (ரு) நெடு, தோள், மன்னர், மாள, உலகமாண்டு, (௧௦) வெற்பு, உடைய, நெடுங்கடலுள், தனி வேல், உய்த்த, (௧ரு) வேள்முதலா, வென்றான், ஊர், விந்தைமேய, கற்புடைய, (௨௦) மடம், கன்னி, காவல்பூண்ட, கடி, பொழில்சூழ், (௨ரு) நெடு, மறுகில், கமலம் வேலி, பொற்புடைய, மலையரையன், (௩௦) பணியநின்ற, பூங்கோவலூர், தொழுதும், நெஞ்சே, போது. (௩ரு)

உரை.—(பரசுராமாவதாரம்செய்தருளி), அழகுமிக்கிருந்துள்ள, மழுவைத், தரித்து, பலத்தையுடைய, மலைபோலே, (ரு) உயர்ந்த, தோள்களையுடையரான, (ஸஹஸ்ரபாஹுவர்ஜுநன் முதலான) அரசர்கள், அழியும்படி செய்தும், (சக்ரவர்த்தித் திருமகனாய்த் திருவவதரித்து ராவணாதிகளையழியச் செய்து) லோகங்களைப் பரிபாலநம்செய்தும், (௧௦) மலைகளை, (தனக்குள்ளே) யுடைய, மஹா ஸமுத்ரத்திலே, ஒப்பற்றவேலை, ப்ரயோகித்த,(௧ரு) ஸுப்ரஹ்மண்யன்முதலானாரை, ஜயித்த ஸர்வேஸ்வரனுடைய, தேசமாய், விந்த்யபர்வதத்திலேவர்த்திக்கிற, மிக்கஅறிவை யுடையளாய், (௨௦) தான்பற்றின கர்மத்தை விடாதவளாய், அநந்ய பரையான துர்க்கையாலே, காக்கப்பட்டதாய், பரிமளத்தை யுடைய, சோலையாலே சூழப்பட்டதாய், (௨ரு) அகலத்தையும் நீளத்தையு முடைத்தான, திருவீதிகளையும், தாமரைமலர்ந்திருந்துள்ள தடாகங்களையுமுடையதாய், செறிவை யுடைத்தான,பர்வதராஜன், (௩௦)ஆஸ்ரயிக்கும்படி (ஸர்வேஸ்வரன்) வர்த்திக்கிற, அழகியதிருக்கோவலூரைத், தொழுவோம்; மநஸ்ஸே!, வாராய். (௩ரு)

வ்யா.—ஏழாம்பாட்டு. (வற்புடைய) இப்படி திருவுள்ளத்தையுங் கூட்டிக்கொண்டு அநுபவிக்கப்பார்த்தவர், அநுபாவ்யவிஷயமானது வரையாதே எல்லார்தலைகளிலும் திருவடிகளை வைத்த † தூளிதாநத்தோடே வந்து நிற்கையாலே அத்தை யநுஸந்தித்து அநுபவத்தை விஸ்மரித்து பயப்படத் தொடங்கினார். † அதுவும்

ஏழாம்பாட்டு.— (வற்புடைய) (தூளிதாநத்தோடே) - அந்தச்செவ்வியோடே, - அந்தி வாகாரத்தோடேயென்றபடி. (அதுவும்) - அளந்த செவ்வி

அ

அநுபவத்துக்குறுப்பா மித்தனையன்றே, பயப்பட வேண்டுவா னென்னென்னில்; அநுபவிதாக்களான தம்படியாலும் அநுபாவ்யவிஷயத்தின்படியாலும் பயம் மேலிட்டது. அஸ்த்தாநே பயசங்கைபண்ணும்படியாயிற்று இவர்தம்முடையப்ரேமாந்ததையிருப்பது. பக்தி போகோபகரணமாகைதவிர்ந்து,§ உபாயோபகரணமாம்படியிறே இவருடைய ப்ரேமாந்ததை யிருப்பது. † இவர் தமக்கு அநுபாவ்யம் ஸௌந்தர்யாதிகளிறே.

இதில்ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்தவாறே வயிறுபிடிக்க வேண்டியிருக்கும். மஹாராஜர், ஸ்ரீ விபீஷணாழ்வான் அநுகூலனாய்வந்து சரணம்புகுராநிற்கத் தம்முடைய ப்ரேமாந்த்யத்தாலே (க) "வத்⁴யதாம் வத்⁴யதாம்- வத்யதாம் வத்யதாம்" என்றாரிறே. †அஸுரராக்ஷஸராலே மிடைந்துகிடக்கிற தேசமாகையாலே அத்தைப் பார்த்தவாறேவயிறுபிடிக்கவேண்டியிருக்கும். இவர்பயத்தாலே இழிந்தாலும் ரக்ஷகனுக்கு அவ்வோபயநிவ்ருத்தியைப்பண்ணி யநுபவிப்பிக்கை பரமிறே. ஆகையாலே, மஹாராஜர் பயத்தைப் பெருமாள் தம்முடைய ராஜநீதியைக்காட்டியும், சரணாகத விஷயத்தில் (உ) "நத்யஜேயம்-நத்யஜேயம்" என்று பண்ணின ப்ரதிஜ்ஞையைக்காட்டியும் சமிப்பிக்க வொண்ணாதென்றுபார்த்துத் தம்தோள்வலியைக்காட்டி பயநிவ்ருத்திபண்ணினாற்போலே, தன்மிடுக்கையும், காவலுறைப்பையும், தேசத்தினுடைய அரணுடைமையையும் புத்திப்ரதாந முகத்தாலேகாட்டிக் கொடுக்க நிர்ப்பயராய், நெஞ்சே! நாம் அநுபவிக்கப்போரா யென்கிறார். அத்தலையில்ஸௌகுமார்யத்தையநுஸந்தித்து பயப்படக்கடவன், சௌர்ய வீர்யாதிகளையநுஸந்தித்து நிர்ப்பயனாகக்கடவன்.

---

யும். ப்ரேமம் அநுபவத்துக் குடலன்றோவென்ன; அருளிச்செய்கிறார் (பக்தி போகோபகரணமித்யாதி). (உபாயோபகரணம்) - உபாயபூதனானவனை ரக்ஷிக்கைக்கு உபகரணம். (அநுபாவ்யவிஷயத்தின்படியாலும்) என்றத்தைக் காட்டுகிறது (இவர்தமக்கித்யாதி).

(பழிக்கக்கூடுமோஎன்ன;) அங்கு விரோதி பூயிஷ்ட்டமாகையாலே மஹாராஜர் பயப்படுகிறார், இங்கு விரோதியுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (அஸுரராக்ஷஸராலேஇத்யாதி). (ங) "விபரீத ஸ்து தாஸுர:-விபரீதஸ்துதாஸுர:" என்கிற அஸுரர் இங்குமுண்டே. (ராஜநீதி) - தம்முடைய பூர்வர்கள் சரணாகதரைரக்ஷித்துப்போந்தவை.

---

§ (பா)பயோபகரணமாய். (உ) ரா-யு-௧௮-௩.
(க) (ங) விஷ்ணுதர்மம். ‡ குண்டலிதம் அநந்விதம்.

(வற்புடையவித்யாதி) அநேகாவதாரங்களிலுண்டான மிடுக்கையெல்லாங்காட்டி சமிப்பிக்க வேண்டும்படி காணும் இவருடைய பயாதிசயமிருப்பது. (வற்புடையவரை நெடுந்தோள் மன்னர்) ஹிரண்யராவணாதிகளுடைய பலத்தைச் சொல்லுமாபோலே இவர்களுடைய பலத்தை யருளிச்செய்கிறது, அத்தலையில் மிடுக்குத் தோற்றுகைக்காக. பலத்தையும் மலைபோலே ஓங்கின தோள்களையுமுடையவர்கள். மலையிலே சிலபதார்த்தங்கள் வந்தடியுண்டால் அவைதான் நக்கநைந்துபோமத்தனையொழிய மலைக்குச் சிதைவில்லாதாற்போலே எதிரிகள் நசித்துப்போய் இவர்கள் தோளுக்குச் சலநமின்றிக்கே யிருக்கை. (மன்னர்மாள) †அநுகூலவேஷத்தைப் பரிக்ரஹித்தாலும் ஆஸுரமளாவியிருக்குமாகில் ஈஶ்வரன் அழியச்செய்யுமென்கை. ரக்ஷகஜந்மமிறே யென்றுபாரான், அவர்கள் ஆஸுரமாயிற்றுப் பார்ப்பது. ஸஹஸ்ரபாஹ்வர்ஜுநன் முதலான ராஜாக்களெல்லாம் நிஶ்ஶேஷமாக நசிக்கும்படி.

இவர்கள் நசிக்கும்படி பண்ணின வ்யாபாரமேதென்னில்; (வடிவாய மழுவேந்தி) கையிலே மழுவையேந்த நஶித்துக்கிடந்தித்தனையாயிற்று. மழுவின்கூர்மையையும் பிடித்தபிடியையுங் கண்டு நசித்தவித்தனை; நரஸிம்ஹவேஷத்தைக்கண்டு ஹிரண்யன் ம்ருதனானாற்போலே. அங்ஙனன்றியே கையும் மழுவுமாயிருக்கிறவிருப்பு தர்சநீயமாயிருக்கையாலே (ஏந்தி) என்னவுமாம். ரௌத்ரமான அஸ்த்ரமென்று வைஷ்ணவர்களெல்லாரும் இத்தை அநாதரியாநிற்க, இவர் (வடிவாயமழு) என்கிறார்†; எம்தேனு மோராயுதத்தைப் பிடிக்கிலும் இவர்க்கு தர்சநீயமாயிருக்குமிறே. திருவாழியும் அவன்பிடித்தவாறேயிறே தர்சநீயமாயிருக்கிறது. (உலகமாண்டு) ஸ்ரீபரசுராமாழ்வானுண்டதொரு ராஜ்யமில்லாமையாலே ராமாவதாரத்தை நினைக்கிறது. †தன்பிதாவை நலிந்தார்களென்னும் கோபத்தாலே ராஜாக்கள் தலையையறுத்து அவர்களுடைய ரக்தத்தாலே தடாகத்தை நிரப்பி உதகக்ரியை பண்ணிப்போனானித்தனையிறே. ஆனாலும், (க) "ஸ்நாத்வா புஞ்ஜீத-ஸ்நாத்வாபுஞ்சீத" என்னு

---

ராஜாக்கள் ரக்ஷகரன்றோ அவர்களை யழிக்கக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (அநுகூலவேஷேத்யாதி).

(மழு) என்கிறார், "இது கூடுமோ" என்று பூரிப்பது. ராஜ்யம் பண்ணிவிட்டால் நலிவானென் னென்ன; அருளிச்செய்கிறார் (தன்பிதாவையித்யாதி).

---

(க)

மாபோலே, (ஏந்தி) என்கிற இந்த ல்யப்பு ஏககர்த்ருகமாகவன்றே இருக்கிற தென்னில்; வஸ்த்வைக்யத்தாலே ஏககர்த்ருகமாகவும் தட்டில்லே, அர்த்தாநுபபத்தியாலே பிந்நவ்யக்திகமாகவும் தட்டில்லே. †மேலே க்ருஷ்ணவதாரமா யிருக்க ஏக கர்த்ருகமாயிருக்கிறது-வஸ்த்வைக்யத்தாலேயிறே. ஆகையாலே ஆகாரத்வயத்தாலும் (உலகமாண்டு) என்கிறவிது - ராமாவதாரத்தைக் காட்டுகிறது. † பரசுராமாழ்வான் பெருமாளைக் கண்டவாறே கையில் மழுவைப்பொகட்டு வில்லேயெடுக்க, வில்லோடேகூட அவனுடைய சக்தியைவாங்கி அவ்வில்லாலே ராவணாதிகண்டக நிரஸநபூர்வகமாகச் சிறியத்தைப் பெரியது நலியாதபடி ராஜ்யத்தை யாண்டபடியைச்சொல்லுகிறது.

(வெற்பித்யாதி) வெற்பைத் தனக்குள்ளேயுடைத்தான மஹா ஸமுத்ரத்திலே அத்விதீயமான வேலேவிட்ட இளமறிப் பேரானஸுப்ரஹ்மண்யன். அதாவது - பர்வதங்களுடைய பக்ஷவத்தாய்க் கொண்டு § பறந்து லோகங்களேயும் அழித்துக்கொண்டு திரிகையாலே இந்த்ரன், தன்கையில்வஜ்ரத்தாலே பக்ஷங்களைச்சேதித்துப்பொகட, ஒருபர்வதம் அவனைத் தப்பித்தெரியாதபடி ஸமுத்ரத்துக்குள்ளே கிடக்க, தேவஸேநாபதியாகையாலே அதுகிடக்கிறவிடமறிந்து அழியச்செய்தபடியைச் சொல்லுகிறது. (நெடுங்கடல்) இப்போது ஸமுத்ரத்தினுடைய மஹத்தையைச் சொல்லுகிறது-பர்வதம் இன்னவிடத்திலே புக்கொளித்ததென்று ஒருவருக்கும் நிலேநாடவொண்ணுதென்கைக்காக. (தனிவேலுய்த்த) வேலேயெறிந்தால் தந்நிரஸநத்துக்குப் பின்னை ஓராயுதம் விடவேண்டாதபடியா யிருக்கை. வேளென்று - காமனுக்குப் பேராயிருக்க, இவனை (வேள்) என்கிறது - பருவத்தாலும் வீர்யத்தாலும் எதிரிகளை யழியச் செய்கையாலே சொல்லுகிறது. (முதலாவென்றானூர்) ஸுப்ரஹ்மண்யன் முதலாக ஜயித்த ஆண்பிள்ளை வர்த்திக்கிறதேசம். பாணயுத்தத்திலே ப்ரதாநனாய் முற்தூசியிலேவந்தான் இவனிறே. (க) "நேர்சரிந்தான் கொடிக்கோழி கொண்டான்" என்னக்கடவதிறே. அப்போதுவந்து எதிரிட்டார்க்கும் தோற்றார்க்கும் தொலகயில்லாமையாலே (வேள்

வஸ்த்வைக்யத்தாலே எங்கே கூடிற்றென்ன; அருளிச்செய்கிறார் (மேலேக்ருஷ்ணவதார மித்யாதி). "ஏந்தி, ஆண்டு" என்ற சொத்தியைப்பற்ற ஐக்யபக்ஷத்திலே (பரசுராமாழ்வானித்யாதி). வில்லேயெடுத்து எதிராகவரத், தாமும் ஏகமாகையாலே அத்தை வாங்கிப் பெருமாள் எய்தாரென்றபடி.

(க) தி-வாய்-எ-ச-அ. § (பா)புகுந்து.

முதலா)என்று †திரளப்பேசுகிறார்.(க)†"முண்டன்நீறன்" இத்யாதி. (வென்றானூர்) அநிருத்தாழ்வானை பந்தித்தவளவிலே ஸ்ரீநாரதபகவான் க்ருஷ்ணனுக்கு வந்து விண்ணப்பஞ் செய்ய, பெரியதிருவடி முதுகிலே புறப்பட்டு அழியச்செய்யக்கடவதாகச் சென்றால், க்ருஷ்ணன் ஒருதலையானல் நமக்கு ஜயிக்கப்போகாதென்றறியாத மதிகேடனுகையாலே அவனை ரக்ஷிக்கக்கடவதாகப் பண்ணின ப்ரதிஜ்ஞையை நினைத்துளதிரிட,(உ) "ஶ்ரமேயம்-நநமேயம்" என்றிருக்கும் நிர்ப்பந்தம் இவர்களுக்கில்லாமையாலே "ஈஶ்வரோஹம்" என்றிருக்கைக்கடியான செருக்கைக்காட்டி ரக்ஷிக்கக்கடவதாகவந்து பாணனைக்காட்டிக்கொடுத்துத் தோற்று முதுகிட்டு ஓடும்படி பண்ணினுயிற்று. பாணனைபழியச் செய்யாதே அவன் செருக்குக்கடியான தோள்களைச் சேதித்துவிட்டது-உஷை, "நாம்பித்ருஹீநை" என்று கண்ணநீர் பாய்ச்சவொண்ணுதென்கைக்காக. †அதுதான் † இரண்டொருகார்யமாயிற்று,"உன்னைரக்ஷகனுகப்பற்றி நான்பட்டபாடே" என்றும், "உன்னை ரக்ஷிக்கக்கடவதாக ஏறிட்டுக்கொண்டு நான்பட்டபாடே' என்றும் அந்யோந்யம்கட்டிக்கொண்டு கதறுகைக்குறுப்பாயிற்று. (வென்றானூர்) இப்படிப்பட்ட வீரன்வர்த்திக்கிறதேசம்.

(விந்தைமேயவித்யாதி) காவலுறைப்பை யருளிச்செய்கிறார். (விந்தைமேய) விந்த்யாடவியிலே வர்த்தித்தவள். துர்க்கை என்னவமைந்திருக்க இப்போது இது சொல்லுகிறது, காவல்பூண்கைக் குறுப்பாக தபஸ்ஸுபண்ணினவாம் சொல்லுகைக்காக. †தான் அடிமை செய்ப ப்ராப்தையானலும் அவன் இரங்கிக்கொள்ளும்போது தபஸ்ஸுபண்ணவேணும்போலே காணும். இவளுடைய வைபவமெல்லாம் அங்குத்தைரக்ஷைக்கு உறுப்பாகையாலே யருளிச்செய்கிறார்.

(†கற்புடைய) கற்பு - ஜ்ஞாநம். கட்டும் கழற்று மறிந்துகாக்க வல்லஜ்ஞாநாதிக்யத்தை யுடையவள். கற்பென்று - ஸ்த்ரீத்வமாய்,

---

(திரள) - ஸங்க்ரஹமாக, கூட்டியென்றபடி. அப்படி திரளாக வந்தார்களோ வென்ன; அருளிச்செய்கிறார் (முண்டன்நீறனித்யாதி). (அதுதான்) - தலையையறுக்காமல் வைத்ததுதான். (இரண்டொருகார்யம்)-பித்ருஹீநையாகாமைக்கும், கட்டிக்கொண்டமைக்குமுடலாயிற்றென்றபடி.

அடிமைக்கு ருசியமையாதோ, தபஸ்ஸுபண்ணவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (தான் அடிமையித்யாதி).

(கற்பு) - கல்வியாய், ஜ்ஞாநமாதல்; ஸ்த்ரீத்வமாதல்.

---

(க) தி-ச-வி-எக. (உ) ரா-யு-ந்கூ-கக.

தந்தாமையழியமாறியும் ஸ்த்ரீத்வத்தை நோக்குமாபோலே தன்னையழியமாறியும் அத்தை நோக்கக்கடவளாயிருக்கை. மடப்பமாவது - பற்றிற்றுவிடாதொழிகை. ப்ரபல விரோதிகளுண்டானாலும் விட்டுப்போகாதொழிகை. கன்னி - அநந்யபரையென்கை. (காவல்பூண்ட) பிறர் நியமிக்கக் காக்கையன்றிக்கே தன்னுதரத்தாலே காக்கை. (காவல்பூண்ட)†பரிவின்மிகுதியாலே ரக்ஷணதர்மத்திலே அந்வயித்தாளென்கை. காவலுக்கு அழிவுவருமிறே - இவள் போகப்ரவணையாமாகில். † கன்னியென்று-அழிவில்லாததுக்குப் பேராகையாலே, இவளுக்கு அழிவில்லாமையாலே ஊருக்கு அழிவில்லையென்றபடி. பிறந்தவன்றே நடைபோந்தவளாகையாலே என்றுமொக்கப் பரிவையா யிருக்குமிறே. "தம்பிவளைக் காரியன்றோ" என்று நஞ்சீயரருளிச்செய்வர். சேஷபூதனு யிருக்கச்செய்தே தன்பரிவின் மிகுதியாலே ரக்ஷண தர்மத்தையேறிட்டுக் கொள்ளுமிறே. (க) "நின்செவ்வடிசெவ்வி திருக்காப்பு" என்றாரிறே - பெரியாழ்வார்.

(கடிபொழிலித்யாதி) பரிமளத்தை நிரூபகமாக வுடையபொழில். நித்யவஸந்தமான தேசமென்கை. இப்போது தேசத்தின் போக்யதை சொல்லுகிறதன்று - இவருடைய பயநிவ்ருத்திக்குறுப்பானவற்றைச் சொல்லுகிற ப்ரகரணமாகையாலே; நம்மாசார்யர்கள் பயநிவ்ருத்திக்குறுப்பாக வருளிச்செய்து போருவர்கள். போக மோக்ஷங்களை பொழியப் புருஷார்த்த மில்லையிறே. பகவத்விரோதிகளாயிருப்பார் விஷயாந்தரப்ரவணரா யிருக்கையாலே அவர்களைத் தன்னுடைய போக்யதாதிசயத்தாலே உள்ளுப்புகுராமே தன்பக்கலிலே துவக்கவற்றாயிருக்கை. உள்ளுப்புக்கு ஒருவனை அழியச் செய்யவேணுமோ, இந்தபோக்யதையை அநுபவிக்கவமையாதோ வென்னும்படிபண்ணுகை.

(நெடுமறுகில்) அத்தைத்தப்பிப்புகுந்தாரைத், திருவீதிதான் ஆயாம விஸ்தாரங்களாலே தர்சநீயமாய்உள்ளுப்புகுராதபடி துவக்கவற்றாயிருக்கை. (கமலவேலி) பரப்புமாறப்பூத்த தாமரைகளையுடைததானதடங்களை யுடைத்தாயிருக்கை. ஓடைகள் பரப்புமாறப் பூத்துக்கிடக்கையாலே தர்சநீயமாய் அங்கே கால்தாழும்படிபண்ணுகை. இத்தால்-ஒருகாவல்வேண்டாதபடி அரணையுடைய தேசமென்கை.

---

ரக்ஷ்யபூதையான தான் காவலிலே பூணக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (பரிவின்மிகுதியாலே யித்யாதி). அர்த்தாந்தரம் (கன்னியென்று அழிவில்லாததுக்குப்பேர்) என்று.

---

(க) திருபல்லாண்டு-க-   § (பா) கடியை.

(பொற்புடைய வித்யாதி) அரணின்றியிலே யொழிந்தாலும் கிட்டவொண்ணாத காவலுடைத்திருக்கிறபடி. இத்தேசத்தோடே செறிவை யுடைய மலயமாநவர்களுக்கு ஆஶ்ரயணீயனானவன் வர்த்திக்கிறதேசம். தபஸ்ஸு பண்ணிவந்து காக்கையன்றியே நிலவராலே காக்கப்பட்ட தேசமென்கை. அந்யோந்ய முண்டான செறிவைச் சொல்லுதல். அதாவது - எல்லாருமொக்க ஏககண்டராய்க் காக்கும்தேசமென்கை. ஏகவசநம்-ஜாத்யபிப்ராயத்தாலே. (பணியநின்ற) ஸர்வஸமாஶ்ரயணீயன் வர்த்திக்கிற தேசமென்கை. (நின்ற) ஸர்வஸமாஶ்ரயணீயனான பின்புகாணும் க்ருதக்ருத்யனாய்த் தரையில் கால் பாவிற்று; சேதநர்பகவத்விஷயத்தில் போக்யதையளவுஞ்செல்ல அவகாஹித்தால் க்ருதக்ருத்யராமாபோலே. †விமுகராயிருக்கச்செய்தே நிர்ஹேதுகமாக ஸம்பந்தத்தை உணர்த்தினவன் ஸம்பந்தாநுரூபமாக ஆஶ்ரயித்தால் க்ருதக்ருத்யனாகச் சொல்லவேணுமோ?

(பூங்கோவலூர்தொழுதும்) அவனை யொழிய அத்தேசமே போக்யமாம்படியிறே - இவர்திருப்பதிகளிலேமண்டினபடி. (போது நெஞ்சே) இவர்க்கு பயநிவ்ருத்தி பிறந்தவிடத்திலும் திருவுள்ளம் தரைப்பட்டுக்கிடந்தது, ஸர்வப்ரகாரத்தாலும் ரக்ஷகமான தேசமாகையாலே நமக்கு பயப்படவேண்டா, நெஞ்சே! நாம் அநுபவிக்கப்போரா பென்கிறார். (தொழுதும்போது நெஞ்சே) "உண்ணப்போராய்" என்பாரைப்போலே அழைக்கிறார். *†தொழுதெழவிறே; தொழாதபோது ஸத்தையில்லை, (தொழுதும்போது நெஞ்சே) என்கிறார். ... ... ... ... ... (எ)

மூ.— நீரகத்தாய்நெடுவரையினுச்சிமேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய்நிறைந்தகச்சி
ஊரகத்தாய், ஒண் துறைநீர்வெஃகாவுள்ளாய்
உள்ளுவாருள்ளத்தாய், உகலமேத்தும்
காரகத்தாய்கார்வானத்துள்ளாய்கள்வா
காமருபூங்காவிரியின்தென்பால்மன்னு
பேரகத்தாய், பேராதென்னெஞ்சினுள்ளாய்
பெருமானுன்திருவடியேபேணினேனே. (அ)

---

(பொற்பு) செறிவு. இவன் ஆஶ்ரயித்தமட்டில் ஈஶ்வரன் க்ருதக்ருத்யனாக கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (விமுகராயித்யாதி). ஊண்தாரகமானாற்போலே தொழுகையும் ஸத்தாஹேதுவோவென்ன; அருளிச்செய்கிறார் (தொழுதெழவிறே) என்று. (எ)

பதம்.—நீரகத்தாய், நெடுவரையின், உச்சிமேலாய், நிலாத்திங்கள் துண் டத்தாய், நிறைந்த, (ரு) கச்சி, ஊரகத்தாய், ஒண், நீர்த்துறை, வெஃகாவுள் ளாய், (க0) உள்ளுவார் உள்ளத்தாய், உலகம் எத்தும், காரகத்தாய், கார்வா னத்துள்ளாய், கள்வா, (கரு) காமருபூம், காவிரியின், தென்பால், மன்னு பேரகத்தாய், என்நெஞ்சில், (உ0) பேராதுள்ளாய், பெருமான், உன்திருவ டியே, பேணினேன், (உசு)

உரை.—திருநீரகத்திலே நித்யவாஸம்பண்ணுகிறவனே! உயர்ந்த திரும லையின், சிகரத்திலே நின்றருளினவனே! ஸகல கலைகளாலும் பூர்ணனான சந்த் ரனைப்போலே தாபத்தைப்போக்குமவனாய் (பூமியிலே) ஒருகண்டமான நிலாத்திங்கள் துண்டமென்கிற திருப்பதியிலே நின்றருளினவனே! அழகு நிறைந்த, (ரு) காஞ்சீபுரத்திலே, திருவூரகத்திலே நின்றவனே! அழகிய, தடா கத்தின் கரையிலே, திருவெஃகாவிலே கண்வளர்ந்தருளுமவனே! க0) (உன் னை சேஷியென்று) அநுஸந்திப்பாருடைய மநஸ்ஸிலே நித்யவாஸம்பண்ணும வனே! லோகத்தா ரெல்லாரும் ஸ்தோத்ரம்பண்ணும்படி, திருக்காரகத்திலே நின்றருளினவனே! திருக்கார்வானத்திலே வர்த்திக்குமவனே! (ஆஸ்ரிதர்க்கா யிருக்கிற திருமேனியை அவர்களுக்குக்காட்டாத) கள்வனே! (கரு) மிக்க அழகை யுடைத்தான, காவேரியின், தென்கரையிலே; திருப்பேரகத்திலே பொருந்தி யெழுந்தருளியிருப்பவனே! என்னெஞ்சிலே, (உ0) பேராதிருப் பவனே! ஸர்வஸ்வாமியான, உன்னுடைய திருவடிகளையே, காணவேணுமெ ன்கிற ஆசையாலே கூப்பிடாநின்றேன். (உசு)

வ்யா.—எட்டாம்பாட்டு. (நீரகத்தாய்) "திருவுலகளந் தருளின படியைத் தத்காலத்தில் அநுபவிக்கப்பெற்றிலோம்" என்று விஷ ண்ணராக, "அச்செவ்வியோடே திருக்கோவலூரிலே வந்துநின் றோம், அநுபவியீர்" என்ன; தம்முடைய திருவுள்ளத்தையுங் கூட் டிக்கொண்டு அநுபவிக்கவிழிந்தவர், ஆயனுடைய சௌர்யவீர் யாதிகளையும் விஸ்மரித்துத் தம்முடைய அநுபவத்தையும் விஸ்ம ரித்து முகப்பிலே ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்தும் † தேச ஸ்வபாவத்தை யநுஸந்தித்தும் "இவ்விஷயத்துக்கு என்னதீங்குவரு கிறதோ?" என்று பீதரானார். † அவ்விஷயத்திலேஆசை பிறக்கையும் அங்குத்தைக்குப்பரிகையும் ஆத்மதர்மமிறே. அவன் தன்னுடைய §சக்த்யாதிகளைக் காட்டித்தெளிவிக்கத், திருவுள்ளத்தையுங் கூட்டி

---

எட்டாம்பாட்டு.—(நீரகத்தாய்) (தேசஸ்வபாவம்) - ஆஸுரப்ரக்ருதிகள் மேலிட்டிருக்கை. ஆசைப்படுகிறதென், துக்கப்படுகிற தென்னென்ன; அரு ளிச்செய்கிறார் (அவ்விஷயத்திலே யித்யாதி).

---

§ (பா)வீர்யாதிகளை.

க்கொண்டு அநுபவத்திலே உத்யோகித்தாராய் நின்றார் - கீழ்; இதில் - திருக்கோவலூரிலேபோய் அநுபவிக்க ஒருப்படுகிறார் †தாமாகையாலே போகவென்று ஒருப்பட்டவளவிலே ஸ்ரீபாதம் பேர்ந்ததில்லை, ஆயனுடைய ஸௌந்தர்யாதிகளை யநுஸந்தித்து, (க) "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்கிறபடியே - கரணங்கள் சிதிலமாகையாலும், ஸ்வரூபாநுஸந்தாநத்தாலே வந்த அப்ராப்தியாலும்.†ஆஶ்ரயணவேளையோடு போகவேளையோடு வாசியற அவன் மேல்விழுந்து ஆஶ்ரயிப்பிக்க ஆஶ்ரயிக்கையும் அவன்மேல் விழுந்து புஜிப்பிக்க புஜிக்கையுமிறே ஸ்வரூபம். (உ) "கூவுதல் வருதல் செய்யாய்" (ங) "என்திறஞ்சொல்லார்" என்னக்கடவதிறே. ஆக, கரண்சைதில்யத்தாலும் அப்ராப்தியாலும்,தாம்போகமாட்டிற்றிலர்; தாம் இருந்தவிடம் திருக்கோவலூராகப்பெற்றிலர், கூப்பிடத்தொடங்கினார். திருக்கோவலூரை யநுபவிக்கப்பாரித்தவர் திருப்பதிகளைப்பற்றிக் கூப்பிடுவானென்னென்னில்; கதிர்பொறுக்கிக் கூட்டுவாரைப்போலே ஆயனுடைய ஸ்வபாவம் திருப்பதிகளிலே ப்ரகாசிக்கையாலே அத்தைப்பற்றிக் கூப்பிடுகிறார். (ச) "విష్ణునా సదృశో వీర్యే- விஷ்ணுநாஸத்ருசோவீர்யே" என்னுமாபோலே.

(நீரகத்தாய்) திருநீரகத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனே! நீரினுடைய ஸ்வபாவத்தை யுடையவன் வர்த்திக்கையாலே தத்ஸம்பந்தநிபந்தநமாக (நீரகம்) என்று - திருப்பதியைச் சொல்லுகிறது. ஆத்மஸ்வரூபம் ஏகரூபமாயிருக்கச்செய்தே கர்மாநுகுணமாக தேவாதிஜாதிபேதமுண்டாய், §(ஜாத்யநுகுணமான புத்திபேதமுமுண்டாய்,)ததநுகுணமாக ஜீவநபேதங்களுண்டானாலும் ஸர்வோபஜீவ்யமாயிறே ஜலமிருப்பது. அப்படியே திருநீரகத்து நாயனாரும் ஸர்வோபஜீவ்யராயிருக்கை. திருவுலகளந்த திருவடிகள் ஸர்வோபஜீவ்யமாயிறே யிருப்பது; இஸ்ஸ்வபாவம் இத்திருப்பதியிலே ப்ரகாசிக்கையாலே, வரையாதே எல்லார்க்கும் அநுபாவ்யனான நீ எனக்குமுகங்காட்டாதொழிவதே! என்கிறார்.

(நெடுவரையினுச்சிமேலாய்) பூமியிலுள்ளார் அநுபவிக்கையன்றிக்கே ஊர்த்த்வலோகங்களிலுள்ளாரும் அநுபவிக்கும்படி திரு

---

† (தாமாகையாலே) - ப்ரேமாந்தரான தாமாகையாலே. ஆஶ்ரயணத்துக்கொழிய அநுபவத்துக்குத் தாம் மேல்விழ வேண்டாவோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஆஶ்ரயணேத்யாதி).

---

(க) பெரியதிருவந்-கூச.
(உ) தி-வாய்-கூ-உ-கக.
(ங) தி-வாய்-அ-ங-எ.
(ச) ரா-பா-க-கஅ.
§ குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

மலையிலே நின்றருளினவனே! (க) “வானவர் வானவர்கோனொடும் நமன்றெழுந்திருவேங்கடம்” என்னக்கடவதிறே. † ஊர்த்த்வலோகங்களை யளந்த திருவடிக்கு ஸ்மாரகமாயிருக்கிறதாயிற்று - திருமலையின்நிலை. “ஈஶ்வரோஹம்” என்றிருப்பார்க்கு மகப்பட முகங்கொடுக்கக்கடவ நீ எனக்கு முகங்காட்டாதொழிவதே!.

(நிலாத்திங்கள்துண்டத்தாய்) இதுவும் நாயனார்ஸ்வபாவத்தைப்பற்றத் திருப்பதிக்குத் திருநாமமாகிறது. ஸகலகலைகளாலும் பூர்ணனான சந்த்ரனைப்போலே தாபத்ரயாதுரர்க்குத்தாபஹரனாயும் அநுபவிப்பார்க்கு போக்யனாயுமிருக்கிறவனே! (உ) “సూర్యాంశుజనితం తాపం నిన్యే తారాపతిశ్శమమ్- ஸூர்யாம்சுஜநிதம்தாபம் நிந்யேதாராபதிஶ்ஶமம்” என்கிறபடியே - ஆதித்யகிரணங்களாலே தப்தரான சேதநர்க்கு சாந்திஹேதுவாயும் ஆஹ்லாதகரனாயுமிறே சந்த்ரனிருப்பது. (நிலாத்திங்கள்) † கலைகுறைந்தநாளில் நிலாமழுங்கியிருக்கையாலே (நிலாத்திங்கள்) என்கிறது. பூமியிலே ஒருகண்டமிறே திருப்பதியாகிறது; அத்தைப்பற்றத் (துண்டம்) என்கிறது. இத்தால் - அல்லாத தேசங்களிற்காட்டில் இதுக்குண்டான வ்யாவ்ருத்திதோற்றச் சொல்லுகிறது. திருவுலகளந்தருளினபோதை வடிவில் ஶ்ரமஹரதைக்கும் போக்யதைக்கும் ஸ்மாரகமாயிருக்கிறது. ஸர்வர்க்கும் ஶ்ரமஹரனாய் ஆஹ்லாதகரனாயிருக்கிற நீ எனக்கு முகங்காட்டாதொழிவதே!.

(நிறைந்தகச்சியூரகத்தாய்) அழகாலும் சீலத்தாலும் காஞ்சீபுர மித்தனையும் நிரம்பிச் சுழியாறுபடும்படி திருவூரகத்திலே நின்றருளினவனே! திருவுலகளந்தருளினமையை ப்ரத்யபிஜ்ஞை பண்ணலாம்படியிறே அங்குநிற்கிறது. (நிறைந்தகச்சி)†(௩)“శోభయన్ దణ్డకారణ్యమ్- சோபயந் தண்டகாரண்யம்” என்னுமாபோலே திரு

---

§ (ஆழ்வார்கள் நாயனாருடைய ஓரோருணமென்றதுக்குத்) திருமலையில் நிலையிலே எந்தகுணம் ப்ரகாசிக்கிறதென்ன; அருளிச்செய்கிறார் (ஊர்த்த்வலோகேத்யாதி). இங்கு, (வானவர்)என்கிறது - இரண்டா மர்த்தத்தைப்பற்ற. (வானவர்) - தேவர்கள்.

திங்கள் என்னவமையாதோ, நிலாவென்று விசேஷிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கலைகுறைந்தநாளிலித்யாதி).

விவரணம் (சோபயந்இத்யாதி).

---

(க) தி-வாய்-௩-௩-எ.
(உ)
(௩) ரா-ஆ-௩-அ-கரு.
§ குண்டலிதம் ஸந்திக்தம்.

க்கச்சியுடைய இவர் நிழலீட்டாலே நிரம்பியிருக்கை. திருப்பதி களாலே நிறைந்தகச்சி யென்னவுமாம்.

(ஒண் துறை நீர்வெஃகாவுள்ளாய்) திருவெஃகாவில் அழகிய துறையைப்பற்றிக் கண்வளர்ந்தருளினவனே! அல்லாததுறைகளை ப்போலன்றியே ஆழ்வார்திருமழிசைப்பிரான் இழிந்து தீர்த்தமா டின துறையாகையாலே அழகிய துறையென்கிறது. தத்ஸம்பந் தத்தாலேயிறே அத்துறையைப் பற்றிக்கிடக்கிறது. ஆஶ்ரிதன்போ னபோது அவன்பின்னேபோயும் அவன் வந்தவாறே வந்து கால் கடைதலைமாடாகக்கிடந்தும் இப்படியிறே அங்குத்தை ஆஶ்ரித பாரதந்த்ர்யமிருப்பது. (க) "இருந்தவூரிலிருக்கும் மானிடரெத்த வங்கள் செய்தார் கொலோ" என்று - வைஷ்ணவனிருந்ததேசம் வைஷ்ணவனுக்கு உத்தேஶ்யமாயிருக்குமாபோலே ஆஶ்ரிதஸ்பர்ச முள்ள தொருதுறையும் ஈஶ்வரனுக்கு உத்தேஶ்யமாயிருக்கிறபடி. (உ) "வாசல்கடைகழியாவுள்புகா காமருபூங்கோவலிடைகழியே பற்றியினி" என்றவர்களோடேகூட நெருக்கிக்கொண்டு புகுந்திரு ந்து அவர்கள்போனவிடத்திலும் அவ்விடத்தை விடாதே யிருந்த படிக்கு ஸ்மாரகமாயிருக்கிறதாயிற்று - திருவெஃகாவில்நாயனார் ஸ்வபாவம். ஆஶ்ரிதரோடே காற்கடை தலைமாடாகவிறே பரிமா றிக்கிடக்கிறது. சொன்னவண்ணஞ் செய்தார். ஆஶ்ரிதஸ்பர்சமு ள்ள தொன்றைப்பற்றி விடாதே யிருக்கிற நீ உன்னையொழியச் செல்லாத வெனக்கு முகங்காட்டாதொழிவதே!.

(உள்ளுவாருள்ளத்தாய்) சேஷியொருத்தனுண்டென்று அநுஸ ந்திப்பாருடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணுமவனே! † திரு ப்பதிகள்நிலையும் ஓராஶ்ரிதனுடைய ஹ்ருதயத் தைக்கணிசித்திறே. (ங) "நின்றதெந்தை" இத்யாதி. ஆசாலேச முடையாருடைய ஹ்ருதயத்திலே குடியிருக்கக்கடவ நீ உன்னையொழியச்செல்லாத வெனக்குமுகங்காட்டாதொழிவதே!.

(உலகமேத்துங்காரகத்தாய்) லோகமடங்க ஏத்தும்படியாகத் திருக்காரகத்திலே நின்றருளினவனே! (ச) "ஸ்ரீமல்லோகவிக்ராந்தசரணௌ--- லோகவிக்ராந்தசரணௌ" என்று ஸர்வலோகங்களும் வழக்குப் பேசி ஆஶ்ரயிக்கலாம்படி த்ரைவிக்ரமபதாநம்பண்ணின ஆயனு

---

† திவ்ய தேசத்தை அநுபவிக்கிறவர் ஆஶ்ரிதவிஷயத்தி லிருப்பைச் சொல் லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (திருப்பதிகளித்யாதி).

---

(க) தி-மொ-
(உ) க-திரு-அகு,
(ங) தி-ச-வி-௯ச.
(ச) கத்யத்ரயம்-

டையஸர்வஸமாஸ்ரயணீயதைக்கு ஸ்மாரகமாயிருக்கிறபடி. ஸர்வ ஸமாஸ்ரயணீயனான நீ எனக்கு முகங்காட்டாதொழிவதே!.

(கார்வானத்துள்ளாய்) வர்ஷுகவலாஹகம்போலே திருக்கார் வானத்திலே வர்த்திக்கிறவனே! இத்திருப்பதிக்குத் திருநாமம் இந் நாயனார் ஸ்வபாவத்தைப் பற்ற வாயிற்று. மேகம் ப்ரயோஜநநிரபே க்ஷமாக ஜலஸ்த்தலவிபாகமின்றிக்கே வர்ஷிக்குமாபோலே அர்த் தித்வ நிரபேக்ஷமாக எல்லார் தலைகளிலும் திருவடிகளை வைத்த ஆய னுடைய ஔதார்யத்துக்கு ஸ்மாரகமாயிருக்கிறது. அபேக்ஷாநிர பேக்ஷமாக ஔதார்யம் பண்ணக்கடவ நீ என்பக்கல் ஔதார்யம் பண்ணுதொழிவதே!.

(கள்வா) அபஹாரகனே! நாங்கள் (கள்வா) என்னமாட்டோ மே - இவரோபாதிபந்தமில்லாமையாலே. அபஹாரமாவது - ஒருவ னுக்காயிருக்குமத்தை அவனுக்காகாதபடி மறைக்கை. ஆஸ்ரிதனுக் கநுபாவ்யமான வடிவை அவனுக்குக் கொடாதொழிகையிறே - ஈஸ் வரனுக்கு அபஹாரமாவது. அதிறே சேதநனுக்கும் ஆத்மாபஹார மாகிறது, தாதர்த்யம் ஸ்வரூபமாயிருக்க, அத்தை இசையாதே "ஸ்வதந்த்ரோஹம்" என்கையிறே - அபஹாரமாகிறது. என்னு டைய ஆத்மாபஹாரத்தைத்தவிர்த்தது † உன்னுடையவாத்மாவை அபஹரிக்கைக்கோ? தாதர்த்யத்தைஜீவிப்பித்தது (க) "ஏ[illegible]- பக்தாநாம்" என்கிறத்தை அழிக்கைக்கோ?.

(காமரு பூமித்யாதி) ஸ்ப்ருஹணீயமானவழகையுடைய காவேரி யின் தென்பார்ஸ்வத்தில் திருப்பேரிலே நித்யவாஸம் பண்ணுகிற வனே! கோயிலை நடுவேயுடைத்தாகையாலே (காமருபூங்காவிரி) என்கிறார். † ரக்ஷ்யரக்ஷக விபாகமற இரண்டுதலைக்கும் உத்தேஸ்ய மாயிறே கோயிலிருப்பது. (தென்பால்) கரைவழியேபோவாருண் டோவென்று கரையைப்பற்றிக் கிடக்கிறபடி. ஜீவநார்த்தமாகக் கரையைப் பற்றியிருப்பாரைப்போலே - ரக்ஷகத்வ ஸித்திக்காகக் கரையைப்பற்றிக் கிடக்கிறபடி. (மன்னு) ஸம்ஸாரம் கிழங்கெடுத் தாலல்லது கிளம்போமென்று கிடக்கிறபடியிறே. "ஆரோநம்மை வந்து கிட்டுவார்?" என்று அவஸரப்ரதீக்ஷனாய்க்கிடக்கிற நீ என

"ஆத்மா தேஹோ" என்கிற ந்யாயத்தாலே (உன்னுடைய வாத்மா) உன் திருமேனி. நடுவே யுடைத்தென்கைக்கு நம்பெருமாள் கோயிலுக்கு ஆதிக் யமேதென்ன; அருளிச்செய்கிறார் (ரக்ஷ்யரக்ஷகேத்யாதி).

(க) ஜி-ஸ்தோ-ரு.

க்கு முகங்காட்டாதொழிவதே!. இதுவும் ஆஶ்ரிதரை யொழியச் செல்லாதே யிருக்கிற ஆயனுக்கு ஸ்மாரகமாயிருக்கிறது.

(பேராதென்னெஞ்சினுள்ளாய்) உன்னை சக்ஷுர்விஷயமாக்கா தொழிந்தால் மநஸ்ஸுக்கு விஷயமாக்கவும் வேணுமோ? அகவாய் பெரியதிருநாளாய்ச் செல்லும்படி பண்ணினால் புறம்பு †ஊத்தும் †சுவடுமற்றுக் கிடக்கவும் வேணுமோ? நெஞ்சுக்குவிஷயமாக்கா தொழிந்தாயாகில் மறந்து பிழைக்கலாயிற்றே!, (§கண்டு பிழைக்கலாயிற்றே.) கண்டுபிழைக்கப்பெற்றிலேன், மறந்துபிழைக்கப்பெற்றிலேன், முடிந்துபிழைக்கப்பெற்றிலேன். கண்டுபிழைக்கப்பெற்றிலர் - காட்சி அவன்பக்கலதாகையாலே; மறந்துபிழைக்க மாட்டிற்றிலர் - விஷயவைலக்ஷண்யத்தாலே; முடிந்து பிழைக்கப் பெற்றிலர் - இன்னமொருகால் காணலாமென்னும் நசையாலே. பிரிந்தாலும் "அது, அது" என்றுகிடக்கும்படியிறே விஷயவைலக்ஷண்ய மிருப்பது. விஷயாந்தரங்களாகிலிறே - நாளோட்டைத்தோடே மறந்து பிழைக்கலாவது; நாள்செல்லச்செல்ல ஆற்றாமை மிகுக்கும் விஷயமிறே இது. முடிந்து பிழைக்கமாட்டுகிறிலர் - ஸத்தை அவனதீநமாகையாலே. †பிராட்டிக்கு ஆற்றாமைமீதூர்ந்து வேண்யுத்க்ரதநத்திலே யொருப்பட்டவிடத்திலும் முடியப்போயிற்ற தில்லையிறே; தான் பிறர்சரக்காகையாலே. (க) "உயிரினால் குறைவிலம்" என்றவிடத்திலும் முடியாமையாலே, (உ) "சாமாறே - பணி" என்று அவனை இரக்கவேண்டிற்றிறே.

(பெருமான்) இப்படிப்பட்ட திருப்பதிகளுக்குத் தொகையில்லாதவனே! ஆயன்ஸ்வபாவத்துக்கு ஸ்மாரகமான திருப்பதிகளுக்குத் தொகையில்லாமையாலும், அவை எல்லாவற்றையும் பேசத்தமக்குச் சக்தியில்லாமையாலும், அநுக்தமான திருப்பதிகளை ஸமுச்சயிக்கிறார். அதவா, (பெருமான்) சேஷியானவனே! முறையறிந்து என்னகார்யம் செய்தேனென்கிறார். முறையறிந்திலேனாகில் ஸம்ஸாரிகளைப்போலே விஷயப்ரவணனாய்க்களித்துத் திரியலாயிற்றே. தாபத்ரயதப்தரான ஸம்ஸாரிகளைப்போலேயாகப் பெற்றிலேனென்பா னென்னென்னில்; அஹங்காரமமகாரங்க ளடியாகவரும் துக்கத்தைப் பொறுக்கலாம், அதுபோலன்றே விரஹதாபம்.

---

(ஊத்து) - சாஹளத்வநி. (சுவடு) - த்வஜாதி. ஸத்தை பராதீநமானால் முடியவொண்ணுதோவென்ன; அருளிச்செய்கிறார் (பிராட்டிக்கித்யாதி).

---

§ குண்டலிதம் க்வாசித்கம்.

(க) தி-வா-ச-அ-கூ. (உ) தி-வாய்-ச-கூ-க.

(க) "ஸர்வம்ஸஹே - ஸர்வம்ஸஹே" (உ) நான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்றது ஸுகஹேதுவென் திருந்தோம், துக்கஹேதுவாய்த்தலைக்கட்டிற்றீ யென்கிறார். ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் ஸ்வரூபாநுரூபமான ஜீவநம்பெற்றாலிறே ஸுகமுள்ளது; அல்லாதபோது துக்கஹேதுவாமித்தனையிறே. † மாந்த்யமுடையவனுக்கிறே பசி உத்தேஶ்யமாவது; பசியனுக்குச் சோறுபெறுதபோது பசிதானே துக்கஹேதுவாயிறே யிருப்பது. ஒன்றில் ஸம்ஸாரிகளைப்போலே விஷயாநுபவத்தாலே களித்தேனல்லேன், முக்தரைப்போலே பகவதநுபவத்தாலே களித்தேனல்லேன், முமுக்ஷுக்களைப்போலே ஸ்வரூபத்தையுணர்ந்து (ங) "தத்ஸ்யஸத்ருஶம்பவேத் - தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" என்றிருந்தேனல்லேன். இவை யொருகோடியிலும் அந்வயியாதேயிருப்ப தொரு புடையுண்டாவதே! எனக்கு என்கிறார்.

தேஹாத்மாபிமாநிகளாய் விஷயப்ரவணராய்த் திரிகிற உமக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தையுண்டாக்கி, ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தையறிவிப்பித்து, நம்மோட்டை ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களை ஸுகதுக்கமாம்படி புகுரநிறுத்தி, இப்படி நாம் பண்ணின உபகாரங்களெல்லாம் கிடக்க க்ருதக்நரைப்போலே ஒன்றுஞ் செய்திலோமாக நீர் இங்ஙனே கூப்பிடுவானென்னென்னில்; (உன் திருவடியேபேணினேனே) செய்த அம்சத்தில்க்ருதக்நனாய்க்கூப்பிடுகிறேனல்லேன், அவ்வம்சத்தில் க்ருதஜ்ஞன், உன் திருவடிகளைக் காணவேணுமென்கிற வாசையாலே கூப்பிடுகிறேனென்கிறார். நாட்டாரில்காட்டில் ஒரு வ்யாவ்ருத்திபிறக்கையோ வெனக்குப் புருஷார்த்தம், உன்னைக் கண்ணாலே கண்டநுபவிக்கையன்றோ வெனக்குப் புருஷார்த்தம். §உன் திருவடியைக் காட்டாதபடியாலே நீ பண்ணின க்ருஷியும்துக்கஹேதுவாய்விட்டதித்தனை.

(உன்திருவடி) ப்ராப்யமும் ப்ராபகமுமான உன்திருவடி. அநேகம் திருப்பதிகளைச் சொல்லி, (உன்திருவடி) என்கையாலே ஆயன்படியையே திருப்பதிகளிலு மநுபவிக்கிறாரென்னு மிடந்தோற்றுகிறது. (உன்திருவடி) ஏவம்விதமான ஸ்வபாவத்தையுடைய உன்திருவடி. ... ... ... ... ... ... (அ)

---

† ஸுகஹேதுவான சேஷத்வஜ்ஞாநம் துக்கஹேதுவாமோ வென்ன; அருளிச்செய்கிறார் (மாந்த்யமுடையவனுக்கித்யாதி). (அ)

---

(க) ஸ்தோ-ர-உ௰.
(உ) தி-மொ-க-க-க.
(ங) ரா-ஸு-௬௯-௬௦.
§ (பா) உன்வடிவைக்காட்டாமையாலே.

மூ.—வங்கத்தால்மாமணிவந்துந்துமுந்நீர்
மல்லையாய்மதிட்கச்சியூராய்பேராய்!
கொங்குத்தார்வளங்கொன்றையலங்கல்மார்வன்
குலவரையன்மடப்பாவையிடப்பால்கொண்டான்
பங்கத்தாய்பாற்கடலாய்பாரின்மேலாய்
பனிவரையினுச்சியாய்பவளவண்ணா!
எங்குற்றாயெம்பெருமானுன்னைநாடி
ஏழையேனிங்ஙனமேயுழிதருகேனே. (கூ)

பதம்.—வங்கத்தால், மா, மணி, வந்து, உந்தும், (ரு) முந்நீர், மல்லையாய், மதிள், கச்சியூராய், பேராய், (க0) கொங்கு, ஆர்வளம், கொன்றையலங்கல், மார்வன், குலவரையன்மடப்பாவை, (கரு) இடப்பால்கொண்டான், பங்கத்தாய், பாற்கடலாய், பாரின்மேலாய், பனி, (உ0) வரையினுச்சியாய், பவளவண்ணா, எங்குற்றாய், எம்பெருமான், உன்னை, (உரு) ஏழையேன், நாடி, இங்ஙனமே, உழிதருகேன். (உக)

உரை,—மரக்கலங்களாலே, பெருவிலையனான, ரத்நங்களைக், கொண்டுவந்து, தள்ளா நின்றுள்ள, (ரு) கடற்கரையிலுள்ள, திருக்கடல் மல்லையிலே நித்யவாஸம்பண்ணுமவனே! திருமதிள்களையுடைய, கச்சிநகரிலேவர்த்திப்பவனே! திருப்பேரிலே வர்த்திப்பவனே! (க0) தேனையும், மிக்க பரிமளத்தையுமுடைத்தான, கொன்றைமாலையை, மார்விலே யுடையனாய், ஶ்லாக்யனான பர்வத ராஜன்புத்ரியான பார்வதியை, (கரு) இடது பக்கத்திலே யுடையனான ருத்ரனை, வலதுபக்கத்திலேயுடையவனே! திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளுமவனே! பூமியில் (உள்ளார்க்கு நன்மை செய்கைக்காகத்) திருவவதரித்தவனே! குளிர்ச்சியே வடிவான, (உ0) திருமலையிலே நின்றருளின திருவேங்கடமுடையானே! பவளம்போலே போக்யபூதனான (காஞ்சிநகரத்திலேயிருக்கிற) பவளவண்ணனே! எங்கேபுக்காய், எனக்கு ஸ்வாமியானவனே! உன்னை, (உரு) அதிசபலனானநான், தேடிக்கொண்டு, இவ்வண்ணமாகவே, அலைச்சல் (க) படாநின்றேன். (உக)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வங்கத்தால்) தாமிருந்தவிடம் திருக்கோவலூராகப் பெருமையாலும், அவன் தாமிருந்தவிடத்திலே வந்து முகங்காட்டாமையாலும், அவன் வந்துமுகங்காட்டுகைக்கு ஹேதுவான ஸ்வபாவங்களைப் பற்றிக் கூப்பிட்டாராய் நின்றார் - கீழ்; இதில் - "திருவுலகளந்தருளினபோதைச் செவ்வியை யநுபவிக்கவேணுமென்று ஆசைப்பட்டவர்க்கு அச்செவ்வியோடே திருக்கோவலூரிலே வந்து நின்றபடியைக் காட்டிக்கொடுத்தோமாகில், ஸாபேக்ஷரான தாம் நம்பக்கலிலேவந்து அநுபவிக்குமத்தனையன்றோ" என்று நினைத்திருந்தானோ வென்றும், நான் அயோக்யனோ

ன்று முகந்தாரா திருந்தானோ வென்றும் சங்கித்து, அவன்படியைப் பார்த்தால் ஆசாலேசமுடையா ரிருந்தவிடத்தே சென்று முகங் கொடுக்குமவன், யோக்யதாயோக்யதைபாராதேமுகங்கொடுக்கும வன்; ஆகையாலே அக்குறை அவனுக்குண்டாகமாட்டாது. இனி இழக்கைக்கடி என்பாபமிறே. ஆகையாலே யாதநாசரீரம்போலே முடியவும்பெறாதே தரிக்கவும்பெறாதே கிடந்துழைக்குமிதுவே யாய்விட்டது என்கார்யமென்று தம்முடைய அவஸ்தையை யநு ஸந்தித்து விஷண்ணராகிறார்.

(வங்கத்தாலித்யாதி)ஓராஶ்ரிதன் இக்கரையிலே திருப்பளித்தா மத்தைச்சமைத்து "இச்செவ்விமாறுவதுக்கு முன்பேபோய்ச் சாத் த்வேணும்" என்று நினைத்துக், கடல்வற்றினாலல்லது நமக்கு வழி போகவொண்ணாதென்று கடலையிறைக்கத் தொடங்க,இவனுடைய ஆதராதிசயத்தைக்கண்டு கடற்கரையிலே இவன் ஆக்கின திருவினை யாடு சூழலுக்குள்ளே வந்து தரைக்கிடை கிடந்தவிடமாயிற்று - திருக்கடல்மல்லை. ஆனால் (முந்நீர்மல்லை) என்ன வமைந்திருக்க, இவ்விசேஷணங்களுக்கு ப்ரயோஜநமென்னென்னில்; மரக்கலமா கிறது - த்வீபாந்தரவஸ்துவை த்வீபாந்தரத்திலே கொடுவந்து தள்ளுமதிறே; அப்படியே பரமபத நிலயனானதன்னை லீலாவிபூதி யிலே கொடுவந்து பொகட்டதாயிற்று - ஆஶ்ரிதவாத்ஸல்யம். இது க்கு, மரக்கலஸ்த்தாநீயம்-ஆஶ்ரிதவாத்ஸல்யம். மாமணி - மஹார்க்க மானமணி. (க)"கையார் சக்கரத்தென்கருமாணிக்கம்" என்றும், (உ) "வானவருச்சிவைத்த - பெருமணி" என்றுஞ் சொல்லுகிற மாணிக் கத்தையிறே கொடுவந்து தள்ளிற்று. (வந்துந்தும்) கொள்வாரற் றிருக்கக் கடற்கரையிலே வந்து தள்ளிக்கிடக்கிறபடி. மாணிக்கத் தின் சீர்மையறிந்து கிழிச்சீரையிலேயிட்டு ஆளுமாபோலே ஸுலி போக்யமானவஸ்து கடற்கரையிலேவந்து கிடக்கிறதென்று வாசியறி ந்து பேணுவாரற்றிருக்கச்செய்தேகிடீர் கண்வளர்ந்தருளுகிறது. கிட்டினாலும் ப்ரயோஜநத்தைக் கொடுபோமத்தேயொழியத் தன்னை யாசைப்படுவாரில்லையே. (முந்நீர்மல்லையாய்) மஹார்க்கமான த்வீ பாந்தரச்சரக்கு த்வீபாந்தரத்திலேவந்து விலையுண்ணாதே போகச் சேர்ம்பாதே கடற்கரையிலேகிடக்கிறபடி. †அநந்தசாயிகிடீர், அவனை விட்டு ஆஶ்ரிதனுக்காகக் கடற்கரையிலே தரைக்கிடைகிடக்கிறான்.

ஒன்பதாம்பாட்டு.—(வங்கத்தால்) (மல்லையாய்) என்று - தரைக்கிடை கிடக்கிறத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (அநந்தசாயித்யாதி).

(க) தி - வாய் : ௫ - க - க. (உ) தி - மொ : கூ - ௫ - ச.

நித்யாநபாயிநியானபிராட்டியையும் விட்டுக்கிடீர் ஓராஸ்ரிதனுக்காகத் தனியே வந்துகிடக்கிறது. இவ்விசேஷணங்களாலே, அவன் சீர்மையறிந்து பேணுவாரில்லையென்று இத்தேசத்தினுடைய தண்மையைச்சொல்லுகிறது. ஆஸ்ரிதனிருந்தவிடத்தே வந்து முகங்காட்டும் வத்ஸலன்கிடீர் என்னுற்றுமைக்கு முகங்காட்டாதொழிகிருன்.

(மதிட்கச்சியூராய்) கீழ்ச்சொன்ன திருப்பதிகளை இங்கே சொன்னாராகிலும் ப்ரயோஜநபேதத்தாலே புநருக்திதோஷமில்லை. திருக்கடல்மல்லைபோலே பேணுவாரற்றிருக்கையன்றியே இவ்விஷயத்தினுடைய சீர்மையையறிந்து சில தார்மிகர்மதிளிட்டு நோக்கப் பெற்றோமிறே யென்கிருர். அங்கு - இழவைப்பற்றக் கூப்பிட்டார்; இங்குப்பரிகிருர்.†இழவிலும்†அத்தலைக்கு என்ன தீங்குவருகிறதோ வென்று பரியவேண்டும்படியிறே ஸ்வரூபமிருப்பது. அதவா, ப்ரதிகூலர் கிட்டாமைக்கு இட்டமதிளென்றிருந்தோம், அதுபோய் அநுகூலர் கிட்டாமைக்கு இட்டமதிளாயிருந்ததீ! என்கிருரென்னவுமாம். (மல்லையாய் மதிட்கச்சியூராய்) ஒருதுறையிலே வந்திறங்கினது, ஒருநகரத்திலே விலைபெறுவது; அப்படியே திருக்கடல்மல்லைத் துறையிலேயிறங்கி காஞ்சிபுரத்திலே வந்து விலைபெற்றபடி. அத்தலையில் ஸௌகுமார்யத்தைப் பார்த்துப் பரிகையும், தனிமையைப் பார்த்துக் கிலாய்க்கையும் இரண்டும் ஆத்மதர்மமிறே.

(பேராய்) ஆஸ்ரிதனைக்கிட்டுமோவென்று அவஸரப்ரதீக்ஷனுயிருக்கிறபடியிறே கீழ்ச்சொல்லிற்று; †இங்கு - (க) "திருமாலிருஞ் சோலைமலையென்றேனென்னத் திருமால்வந்தென்னெஞ்சு நிறையப்புகுந்தான்" என்கிறபடியே - விமுகனையுமுட்பட மடிமாங்காயிட்டு விஷயீகரிக்க வந்திருக்கிறவன்கிடீர் தன்னையொழியச் செல்லாதவென்னை வந்து விஷயீகரியாதிருக்கிருனென்கிருர். †இத்தால், ஆஸ்ரிதருகந்தவிடத்திலே தானேவந்து முகங்கொடுக்கும்படியைச் சொல்லுகிறது.

---

இழந்து நோவுபடுகிறவர் பிரியக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிருர் (இழவிலுமித்யாதி). பிரிந்தவர் வெறுக்கக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிருர் (அத்தலையித்யாதி).

அவஸரப்ரதீக்ஷனுயிருக்கையன்றிக்கே தானேமேல்விழும்படி சொல்லுகிறது (இங்குத்திருமாலிருஞ்சோலைமலை யித்யாதி). (இத்தால்) - கீழ்ச்சொ

---

(க) தி - வாய் - கo - அ - க.

மேல் அயோக்யதை பாராதே முகங்கொடுக்கும்படியைச்சொல்லுகிறது (கொங்கித்யாதி) "நாயேகொள், † பேயேகொள்" என்கிற வடிவுகிடீர், அவ்வடிவை யொழியச்செல்லாதவெனக்கு அரிதாயிற்றென்கிறார். தேனையும் பரிமளத்தையும் செவ்வியையுமுடைத்தான கொன்றைமாலையாலே அலங்க்ருதமானமார்பையுடையவன். கொங்கு - தேன். ஆர் - மிகுதி. வளம் - அழகு; - புஷ்பத்துக்கு அழகு - செவ்விபெற்றிருக்கையும், பரிமளிதமாயிருக்கையுமிறே.

(குலவரையித்யாதி) பார்வதியைத் தனக்கு பார்யையாகவுடையவன். ருத்ரனுக்குப் பார்ஶ்வத்தைக் கொடுத்து என்னவமைந்திருக்க, இவனை இங்ஙனம் †திருநாளெழுந்தருளுவிக்கிறது-இவனுடைய தூர்மாநந் தோற்றுகைக்காக. திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனாய் ஶ்ரியஃபதியாயிருக்கிற ஸர்வேஶ்வரனோடேஸமமாகக் கொன்றைமாலையிட்டு, "ஈஶ்வரோஹம்" என்றிருக்கிற தூர்மாநிக்குக்கிடீர் உடம்புகொடுத்ததென்று தோற்றுகைக்காக.

(கொங்குத்தார் வளங்கொன்றையலங்கல்மார்வன்) (க) * தண்டுழாய்மாலைமார்பனுக் கெதிர்த்தட்டாயிருக்கிறபடி. ஈஶ்வரன் ஜகத்ரக்ஷணத்திலே தனிமாலையிட்டிருக்கிறபடியைக் கண்டு, நமக்கும் ஈஶ்வரத்வஸித்தி யுண்டாம்போதைக்கு ஒருமாலை வேணுமென்று பார்த்து கொன்றையை மாலையாக இட்டிருக்கிறபடி. (குலவரையன் மடப்பாவை) (உ) * மலர்மகள் விரும்பும் நமரும்பெறலடிகளுக்கெதிர்த்தட்டாயிருக்கிறபடி. அவன் ஶ்ரியஃபதியாயிருந்தானே, நமக்கும் அதுஸித்திக்கும்போது ஒருமிதுநமாயிருக்க வேணுமென்று பார்த்து உமாபதியாயிருக்கிறபடி. (இடப்பால்கொண்டான்) (ங)* வலமார்பினில் வாழ்கின்ற மங்கைக்கெதிர்த்தட்டாயிருக்கிறபடி.

(பங்கத்தாய்) (ச) "கூறுளுந்தனியுடம்பன்" என்கிறபடியே - பெரியபிராட்டியாரோடே வழக்குப் பேசியிருக்கும்படியிறே உடம்புகொடுத்தது. நித்யாநபாயிநியான பிராட்டிக்குக் கொடுத்த வுடம்பைக்கிடீர் - அந்யபரனாய் "ஈஶ்வரோஹம்" என்றிருக்குமவனுக்குக் கொடுத்தது. அவன் படியையும் இவள் படியையும் இவன் தன்

---

ன்ன மூன்று பதத்தாலும். (பேயே கொள்) - ருத்ரன் சுடுகாட்டுப் பேய். (திருநாளெழுந்தருளுவிக்கிறது) - குவாலாக விஶேஷணங்கள்சொல்லுகிறது.

---

(க) தி - மா - ௰.　　(ங) திருப்பல் - உ.
(உ) தி - வாய் - சு - ரு - க.　　(ச) தி - வாய் - ச - அ - க.

படியையுமன்று காணும் பார்ப்பது, ஸம்பந்தத்தையாயிற்றுப் பார்ப்பது. † "ஈஶ்வரோஹம்" என்றிருக்கிற துர்மாநிகளுக்குக்கொடுத்த வடிவுகிடீர் - பரதந்த்ரனுய் அத்தை யொழியச்செல்லாதவெனக்கு அரிதாயிற்றென்கிருர்.

(பாற்கடலாய்) குணக்ஷதந்யாயமாய் ருத்ரனெருவனுக்கு முடம்புகொடுத்தவளவேயோ, ப்ரஹ்மாதிகளுக்கு ஓராபத்து வந்தபோது ரக்ஷகரானநாம் தூரஸ்த்தராகவொண்ணுதென்று பரமபதத்தைக் காற்கடைகொண்டு க்ஷீராப்த்தியிலே வந்து கண்வளர்ந்தருளுகிற வனே! அபேக்ஷயுடையவெனக்குமுகங்காட்டாதொழிகிருய்.

(பாரின்மேலாய்) அஸுரராக்ஷஸராலே குடி யிருப்பிழந்து ஸகலதேவதைகளும் வந்து சரணம் புகுர ராமக்ருஷ்ணுதிரூபத்தாலே தன்னை யழிய மாறிவந்தவதரித்து ரக்ஷித்தபடிசொல்லுகிறது. (க) "సహిదేవైరుదీర్ణస్య రావణస్యవధార్థిభిః । అర్థితో మానుషేలోకే జజ్ఞేవిష్ణుస్సనాతనః-ஸஹிதேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபிஃ। அர்த்திதோ மாநுஷேலோகே ஜஜ்ஞேவிஷ்ணுஸ்ஸநாதநஃ." [సః - ஸ:] தச்சப்தம் ப்ரக்ருதபராமர்சியிறே. (உ) "బభూవగుణవత్తరః - பபூவகுணவத்தர:" என்றிறே கீழ்ச்சொல்லிற்று; அப்படிப்பட்டகுணுதிகனுகையாலே பிறந்தான் என்கிருர். †அநந்யப்ரயோஜநர்க்காகப்பிறக்கை குணமன்றிறே. *[హి - ஹி] சப்தம்ஹேதுவிலே. [దేవైః - தேவை:] வந்து பிறந்தது, திருவடி திருவநந்தாழ்வான் அர்த்திக்கவோ? ப்ரயோஜநாந்தரபரராய் "ஈஶ்வரோஹம்"என்றிருக்கிற துர்மாநிகள் அர்த்தித்த கார்யஞ் செய்யக்கிடீர். கார்யங்கொண்ட ஸமநந்தரம் எதிரம்பு கோக்குமவர்களிறே. [ఉదీర్ణస్యరావణస్య వధార్థిభిః - உதீர்ணஸ்யராவணஸ்யவதார்த்திபி:] தன்னுடைய செருக்காலே லோகத்தையடைய அழித்துக்கொண்டுதிரியும் ராவண கிர

---

பிராட்டியோ டொக்க துர்மாநியான ருத்ரனுக்குக் கொடுத்த வுடம்பென்றுகூட்டி யோஜிப்பது. §(பரரக்ஷகந்யாயம்) - உத்க்ருஷ்டனா ரக்ஷிக்கவேணுமென்கிறந்யாயம்.

ப்ரயோஜநாந்தர பரர்க்காகப் பிறக்கை குணமோ வென்ன; அருளிச்செய்கிருந் (அநந்யப்ரயோஜநர்க்கித்யாதி).

---

(க) ரா - அ - க - எ. (உ) ரா - அ - க - கூ. [ஸ்லோக்கிலை.

§ இவ்வரும்பதாநுகுணமானபங்க்தி வ்யாக்யாநகோசங்களிலெங்கும் கா

ஸநார்த்தமாக. ஸம்பந்தம் ஸர்வஸாதாரணமாயிருக்க ஆர்த்திக்கிறவர்கள் ப்ரயோஜநாந்தரபரராயிருக்க அவர்களை யழியச்செய்கைக்காகக் கிடீர்வந்து பிறந்தது. [ఆర్తితః - ஆர்த்திதః] இது கிடீர் அவர்கள் பண்ணினதபஸ்ஸு. [మానుషేలోకే - மாநுஷேலோகே] தேவதைகளுமகப்படக் கீழ்நோக்கி†முகம்நாட்டாததேசத்திலே கிடீர்வந்துபிறக்கிறது. [జజ్ఞే- ஜஜ்ஞே] நாட்டார் பத்துமாஸம் கர்ப்பவாஸம் பண்ணுவார்களாகில் பன்னிரண்டுமாஸம் கர்ப்பவாஸம் பண்ணிக் கிடீர் பிறந்தது. [విష్ణుః-விஷ்ணுஃ] வ்யாபக வஸ்துகிடீர் வ்யாப்யைகதேசத்துக்கு சேஷமாய்ப் பிறந்தது. [సనాతనః-ஸநாதநஃ] நித்யவஸ்துகிடீர் பிறந்தானென்னும்படி ஒருத்தனுக்குப்புத்ரனாய் வந்துபிறந்தது. இப்படி ப்ரயோஜநாந்தரபரர்க்கு மகப்படத் தன்னையழியமாறிக்கார்யஞ் செய்கிறவன்கிடீர் அநந்யப்ரயோஜநனான வெனக்கு முகங்காட்டாதொழிகிறானென்கிறார்.

(பணிவரையினுச்சியாய்) ப்ரயோஜநாந்தரபரர்க்கு முகங்கொடுத்தவளவேயோ, (க) "கானமும் வாநரமும் வேடுமுடை வேங்கடம்" என்கிறபடியே நிஹீநஜாதிக்கு மகப்பட முகங்கொடுக்கத் திருமலையிலே வந்து நிற்கிறவன்கிடீர் எனக்கு முகங்கொடாதொழிகிறான். (பவளவண்ணா) † அதுவுமாமிறே; க்ரமப்ராப்தியை ஸஹித்திருக்கலாம்வடிவு படைத்தானாகில். அப்படி பெற்றோமாகில் வேண்டினபோது முகங்கொடுக்கிறானென்று ஆறியிருக்கலாமிறே. ஸ்வரூபத்தை யநுஸந்தித்து ஆறியிருக்கும்படியன்றே அவன்வடிவு படைத்தது.

(பவளவண்ணாவெங்குற்றாய்) வடிவின்போக்யதையை யநுஸந்தித்துக் கண்ணுஞ்சுழலையிட்டு முன்னடிதோற்றாமையாலே (எங்குற்றாய்) என்கிறார். (உ) "రామంమేనుగతాదృష్టి రద్యాపినని వర్తతే। నత్వాపశ్యామి కౌసల్యే సాధుమాంపాణినాస్పృశ.- ராமம்மே நுகதாத்ருஷ்டி ரத்யாபி நநிவர்த்ததே। நத்வாபஸ்யாமி கௌஸல்யே

---

(முகம்நாட்டாத) - முகம்வையாத.

(அதுவுமாமிறே) - முகங்கொடாமையுமாமிறே.

---

(க) ௩ - திரு - ௩௭.          (உ) ரா - அயோ - ௬௨ - ௩௪.

ஸாதுமாபாணிநாஸ்ப்ருஶ." [𑌮𑍇𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 - 𑌰𑌾𑌮𑌮𑍍 - 𑌅𑌨𑍁𑌗𑌤𑌾 - மே த்ருஷ்டிঃ - ராமம் - அநுகதா] என்னுடைய கண்ணானது - அபிராமதையைப்பற்றிப் பெருமாள்பின்னே போயிற்று. ஆஶ்ரயத்தை விட்டு விஷயத்தின்பின்னேபோயிற்றது. பிறந்தகத்தில்ஸம்பந்தம் விஷயம் பெறுமளவும்போலே காணும். [𑌮𑍇𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 - மேத்ருஷ்டிঃ] என்று - கண்ணைக்கொண்டாடுகிருன். நான் விஶ்லேஷத்தாலே தளர்ந்து தரைப்பட்டுக் கிடந்தேன், கண் கூடப்போகப்பெற்றதிறே. கர்த்தாவாயிராதே கரணமாகப் பெற்றிலேனென்கிருன். [𑌅𑌧𑍍𑌯𑌾𑌭𑌿𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 - அத்யாபிநிவர்த்ததே] இவ்வளவிலும் மீண்டதில்லை; உன்னுடைய தர்சநத்தாலே ஆஶ்வஸிப்பிக்க யோக்யதை யுண்டானதசையிலும் மீண்டதில்லை. [𑌨𑌤𑍍𑌵𑌾𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 - நத்வாபஶ்யாமி] ஆஶ்ரயமான நீர் இங்கே யிருக்கக் கண் அவர்பின்னேபோகையாவதென்னென்னில்; கார்யத்தைக்கொண்டு காரணத்தைக் கற்பித்தேனென்கிருன். வந்து நிற்க உன்னைக்காணப்பெற்றிலேனே, அத்தாலே சொல்லுகிறேன். நித்யாநுமேயமாயிறே இந்த்ரியங்களிருப்பது, பதார்த்த தர்சநத்தாலே இந்த்ரியங்களுண்டென்றறிகையும், அவைதோற்றுதபோது இல்லை யென்றறிகையுமாயிறே யிருப்பது. [𑌕𑍌𑌸𑌲𑍍𑌯𑍇 - கௌஸல்யே] கைகேயியாயிட்டுக் காணுதொழிகிறேனன்றே. [𑌸𑌾𑌧𑍁𑌮𑌾𑌪𑌾𑌣𑌿𑌨𑌾𑌸𑍍𑌪𑍃𑌶 - ஸாதுமாபாணிநாஸ்ப்ருஶ] என்னுடைய அதிக்ரமத்தை நினையாதே தூர்க்கதியைப் பார்த்து "ஐயோ!" என்றிரங்கி உன்கையாலே என்னை ஸ்பர்சியாயென்கிருன். அபிஷேகத்தைப்பாரித்துக் காப்பைக் கட்டி வநத்தேறப்போகவிட்டேனென்றது பாராமல் "அவனைப் பிரிந்து முடியும்படியாய் விடுவதே!" என்றிரங்கி ஸ்பர்சியாயென்கிருன். "கண்ணானது அவன் பின்னே போயிற்று, த்வகிந்த்ரியம் போயிற்ருே இல்லையோவென்றறியும்படி உன்கையாலே தடவிப்பாராயென்கிருன்" என்று அருளிச்செய்வர்பட்டர்.

(பவளவண்ணு வெங்குற்ருய்) (க) "𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 - பக்தாநாம்" என்கிறவடிவைக் கொண்டு எங்கே புக்காய். வடிவின்வைலக்ஷண்யத்தை ப்ரகாசிப்பித்தது அவ்வடிவைக் கொண்டு ஒளிக்கவோ?

(௧) ஜி - ஸ்தோ - ௫.

அதவா, (எங்குற்ருய்) ஸர்வதா இவ்வாற்ருமையில் அவன் வாரா தொழியா னென்றும் தம்முடைய ஆற்ருமையே செப்பேடாக வரு மென்றும் நினைத்து (எங்குற்ருய்) என்று கையை நீட்டுகிருரென் னவுமாம். கையை நீட்டினவாறே கைக்கெட்டும், பிடித்துக்கொள் ளலாமென்றிருக்கிருர். உபக்நம் பெருத கொடிபோலே தரைப்பட் டுக்கிடக்கிறவராகையாலே உபக்நம் தேட்டமாயிறே யிருப்பது. படர்கொடியிறே ஆத்மவஸ்துவாகிறது. (எம்பெருமான் - எங்குற் ருய்) உன்னுடைமை நோவுபடாநிற்க உடையநீயெங்கேபுக்கிருக் கிருய். உடைமை யிருந்த விடத்தே உடையவன் வந்து முகங்காட்டு மித்தனை யொழிய உடையவனிருந்தவிடத்தே உடைமைசெல்லவற் ருே? சோறிருந்த விடத்தே பசியன் செல்லு மித்தனையொழியப் பசிய னிருந்தவிடத்தே சோறுசெல்லவற்ருே?

(உன்னைநாடி) நிரதிசயபோக்யனுமாய் ப்ராப்தனுமாயிருக் கிறவுன்னைத் தேடி. † ப்ராப்தியும் த்வராக்குடலா யிருக்கிறதிறே இவர்க்கு. அதவா, (உன்னைநாடி) அநாதிகாலம் (க)* எதிர்சூழல்பு க்குத்தேடித்திரிந்தவுன்னை நான்தேடும்படியாவதே!. (உ)†“ஓடினே னோடி” என்கிறபடியே விஷயாந்தரங்களிலேகைகழிந்த வெனக்கு நீயே மேல்விழுந்து முறையையுணர்த்தி உன்னை யொழியச்செல் லாதபடிபண்ணி, (ந) “தளிர்புரையுந்திருவடி யென்தலைமேலவே” என்னும்படி பண்ணி உன்பேருக என்தலையிலே யுன்திருவடிகளை வைத்தது, இன்று உன்னைப் பிரிந்து நோவுபட வந்துமுகங்காட்டா தொழிகைக்கோ?

அழகிது, நாமே மேல்விழுந்து கார்யஞ்செய்தோமென்னும் படி யறிந்தீராகில் பின்னை மேலுள்ளதும் நாமேசெய்தபடிகண்டு, (ச)“త త్తస్యసదృశంభవేత్ - தத்தஸ்யஸத்ருசம்பவேத்”என்றிருக்கை யன்ருேப்ராப்தம், இங்ஙனே த்வரிக்கக்கடவீரோவென்ன: (ஏழை யேன்) அதுசெய்யவொட்டுகிறதில்லை யென்னுடையசாபலம்; அதி

---

* தேடவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிருர் (ப்ராப்தியுமித் யாதி). † பலிதமருளிச்செய்கிருர் - (ஓடினேனித்யாதி).

---

(க) தி - வாய் - உ - எ - கூ. (ந) க.
(உ) தி - மொ - க - க - க. (ச) ரா - ஸு-நக-நo.

சபலன் நானென்கிறார். நீசெய்ததத்தை யநுஸந்தித்து "மேலும் தானே செய்கிறான்" என்று ஆறியிருக்கவொட்டுகிறதில்லை. (இங்ஙனமேயுழிதருகேனே) அவன் ஆஶ்ரிதபரதந்த்ரனல்லனென்னவொண்ணாது, அவன் போக்யதைபார்த்து முகந்தருவானென்னவொண்ணாது, இனி இழக்கைக்கடி என் பாபமிறே. இப்படி க்லேசித்தே போமித்தனையாகாதே!.

†(இங்ஙனமே) (க) "ఏహిపశ్యశరీరాణి –ஏஹிபஶ்யசரீராணி" என்று - ஸ்ரீ தண்டகாரண்யத்தில் ருஷிகள் ராக்ஷஸர்கள் தின்ற சரீரத்தைக் காட்டினாற்போலே விரஹம்தின்றவுடம்பைக்காட்டுகிறார்.

(உழிதருகேனே) யாதநாசரீரம்போலே முடியவும்பெறாதே தரிக்கவும்பெறாதே து:காநுபவமே யாத்ரையாம்படிபண்ணுவதே! என்கார்யமென்கிறார். ஒன்றில் பகவத் விஷயத்தை யநுபவிக்கப்பெற்றிலேன், ஒன்றில் ஸ்வரூபத்தை யநுஸந்தித்து (உ) "తత్తస్య సదృశంభవేత్ – தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" என்றிருக்கப்பெற்றிலேன், ஒன்றில் சிந்தயந்தியையும் சக்ரவர்த்தியையும் போலே முடியப்பெற்றிலேன், எனக்குக்கூறு விரஹக்லேசாநுபவமேயாய்விடுவதே! என்கிறார். ... ... ... ... ... (கூ)

மூ.—பொன்னானாய்பொழிலேழுங்காவல்பூண்ட
புகழானாயிகழ்வாயதொண்டனேன்நான்
என்னானாயென்னானாயென்னலல்லால்
என்னறிவனேழையேன், உலகமேத்துந்
தென்னானாய்வடவானாய்குடபாலானாய்
குணபாலமதயானாயிமையோர்க்கென்றும்
முன்னானாய்பின்னானார்வணங்குஞ்சோதி
திருமூழிக்களத்தானாய்முதலானாயே. (௧௦)

பதம்.—உலகமேத்தும், தென்னானாய், வடவானாய், குடபாலானாய், குணபாலமதயானாய், (ரு) இமையோர்க்கு, என்றும், முன்னானாய், பின்னானார், வணங்கும், (௧௦) சோதி, திருமூழிக்களத்தானாய், முதலானாய், பொன்னானாய், பொழிலேழும் காவல்பூண்ட, (௧ரு) புகழானாய், இகழ்வாய, தொண்டனேன் நான், என்னானாயென்னானாயென்னலல்லால், ஏழையேன், (௨௦) என் அறிவன். (௨௧)

---

(இங்ஙனமே) இப்படியே - இப்ப்ரகாரத்திலே யென்னுதல்; தேஹத்தைக்காட்டுதல் ... ... ... ... ... ... ... (கூ)

---

(க) ரா - ஆ - கூ - ௧௬. (உ) ரா - ஸு - ௩.௧௯ - ௩.௦.

உரை.—லோகத்தார்ஸ்துதிக்கத்தக்கதான, தென்திருமாலிருஞ்சோலை மலையிலே நின்றருளினவனே! வட திருவேங்கடத்திலே நின்றருளினவனே! மேற்றிசையிலே கோயிலிலே கண்வளர்ந்தருளினவனே! கீழ்த்திசையில் திருக்கண்ணபுரத்திலே மதயானைபோலே செருக்குத்தோன்றநின்றவனே! (௯) நித்யஸூரிகளுக்கு, எக்காலத்திலும், கண்ணாற்கண்டநுபவிக்கலாம்படி முன்னேயிருப்பவனே! அவதாரத்துக்குப்பிற்பட்டவர்கள், ஆஶ்ரயிக்கத் தக்கதாக, (கo) தேஜோமயனாய், திருமூழிக்களத்திலே வர்த்திக்கிறவனே! ஜகத்காரண பூதனே! பொன்போலே எல்லாப்படியாலும் எனக்கு உபகரிக்குமவனே! ஸப்த லோகங்களையும் ரக்ஷிக்கையால்வந்த, (க௯) குணப்ரதையையுடையவனே! இகழ்வையே வடிவாகவுடைய, தாஸபூதனானநான், என்னுடைய ஆனாய் என்னுடைய ஆனாய் என்று சொல்லுமித்தனை யல்லது, உன் விஷயத்தில் அதிசபலனானநான், (உo) உன்னுடைய குணசேஷ்டிதங்களில் எத்தை யறிவேன்? (உக) ... ... ... ... (கo)

வ்யா.—பத்தாம்பாட்டு. (பொன்னானாய்) இப்பாட்டால்-ஆஶ்ரிதரிருந்தவிடத்தேசென்று முகங்கொடுக்குமவனாய் யோக்யதாயோக்யதைபாராதே முகங்கொடுக்குமவனாயிருக்க ஸர்வதா நமக்கு முகங்காட்டாதொழிந்தது, அடியிலே, (க) "மந்திரத்தைமந்திரத்தால் மறவாதென்றும் வாழ்தியேல்வாழலாம்" என்று சொன்னவார்த்தையை ஸாதநத்திலே அந்வயிப்பித்து வந்துமுகங்காட்டா தொழிந்தானாக வேணுமென்று சங்கித்து, ஸம்பந்தஜ்ஞாபகமான திருமந்த்ரத்தை உபகரணமாகக்கொண்டு இங்கே அநுபவிப்பார்க்கு எங்கும் யாவதாத்மபாவி அநுபவிக்கலாமென்று காலக்ஷேபார்த்தமாகச் சொன்ன வித்தனை யொழிய,ப்ராப்யம் உன்னையொழிய வேறுண்டென்று அறியிலன்றோ - ப்ராபகம் உன்னையொழியவேறுண்டென்றறிவது, நான் என்னறிவனென்கிறார். "மந்திரத்தால்" என்கையாலே - ஒரு ஸாதநபாவமும், "மறவாது - வாழ்தியேல்" என்கையாலே - ஒரு கர்த்தவ்யமும், "வாழலாம்" என்கையாலே - ஒரு பலமுமாய்த் தோற்றுமிறே. இவருடைய * நோற்றநோன்பிருக்கிறபடி. (உ) "நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்" என்று - ஆகிஞ்சந்யத்தைச் சொல்லி, (உ) "ஆகிலும்இனி யுன்னைவிட்டொன்று மாற்றகிற்கின்றிலேன்" என்று - ருசியில் குறைவற்றிருக்கிறபடி-யையு மருளிச்செய்தாரிறே.

---

பத்தாம்பாட்டு. (பொன்னானாய்) * (நோற்றநோன்பு). இப்பாட்டு.

---

(க) ச. (உ) தி-வாய்-௫-எ-க.

(பொன்னானாய்) எனக்குப்ராப்யமானவனே! (க) "ருக்மாபம்ஸ்வ ப்நதீகம்யம் - ருக்மாபம்ஸ்வப்நதீகம்யம்" என்றும், (உ) "அவ்ய யஃ-நிதிஃ-அவ்யயோநிதிஃ" என்றும், (ங) "வைப்பாம்" என்றும் ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களிலே நிதிசப்தத்தாலே ப்ராப்யத்தைச் சொல்லக்கடவதிறே. நிதியாவது - ஆபத்ஸகமாய், உண்டென்ன உயிர் நிற்கும்படியாய், ஸர்வாநுபாவ்யமாயிறே யிருப்பது. † இப்போது இது சொல்லுகிறது - உன்னையொழிய வேறொருப்ராப்யமுண்டென்றறியிலன்றோ உன்னையொழிய வேறொருப்ராபகமுண்டென்றறிவது என்கைக்காக. அங்ஙனன்றிக்கே, ப்ராபகாபேக்ஷையுள்ளது ப்ராப்யஸித்திக்கிறே; அத்தைப்பற்றச்சொல்லிற்றாகவுமாம். (ங) "வைப்பாம்மருந்தாம்" என்றாரிறே - நம்மாழ்வாரும். † மேற்சொல்லுகிறஸாதநம் (ச) "அநந்யஸாத்யே-அநந்யஸாத்யே" என்கிற ஸாத்யத்துக்கநுரூபமென்கைக்காக ப்ரதமத்திலே உபாதாநம்பண்ணுகிறதாகவுமாம். (ஆனாய்) நான்விஷயப்ரவணனாய்த்திரியா நிற்க உன்னுடைய † வினைகேட்டாலே நீயே மேல்விழுந்து எனக்கு ருசியைப் பிறப்பித்து ப்ராப்யனானாய், இத்தனையன்றோசெய்தது.

(பொழிலேழும் காவல்பூண்ட புகழானாய்) இத்தால் - ப்ராபகமும் நீயேயென்கிறார். லீலாவிபூதிக்கு ரக்ஷகனானவனே! (பொழிலேழும்) என்று - ஸப்தலோகங்களையுஞ் சொல்லுகிறது. இத்தால் - கீழுள்ள லோகங்களையும் உபலக்ஷிக்கிறது. (ரு) "ஈத்ருஶாநாம்- ஈத்ருசாநாம்" என்கிற அண்டாந்தரங்களுக்கும் உபலக்ஷணம். பொழில்- லோகம். (காவல்பூண்ட) ராஜாவாய் அபிஷேகத்தைப் பண்ணியிருந்து ஆளிட்டு ரக்ஷிக்கையன்றியே கையிலே ஆயுதத்தை யெடுத்து ஒருவூரைநோக்குவாரைப்போலேயன்றோ ஸகலலோகங்களையும்அவதாரம் பண்ணி ரக்ஷிப்பது. (பூண்ட) ரக்ஷணப்ரதிபந்தகமுண்டானாலும் அதில் குறையா திருக்கை. அதாவது - எத்தனையேனும் அந்தரங்கமான மஹாராஜர்ப்ரப்ருதிகளும் (சு) "வத்யதாம்- வத்ய

---

அவனுடைய ப்ராபகத்வஞ் சொல்லுகிற விடத்திலே ப்ராப்யஞ் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இப்போதித்யாதி). அநுரூபமான ஸாதநமென்கைக்காக ப்ராபகத்தை முன்னே சொல்லுகிறதென்று மூன்றாம் பரிஹாரம், (மேற்சொல்லுகிற ஸாதநம்)-"காவல்பூண்ட" என்று சொல்லுகிற ரக்ஷகத்வம். (வினைகேடு) - செயல்மாட்சி.

---

(க) மநுஸ்ம்-கஉ-கஉஉ. (ச)
(உ) ஸஹஸ்ரநா-ச. (ரு) வி-பு.உ-எ-உஎ.
(ங) தி-வாய்-க-எ-உ. (சு) ரா-யு-கஎ-உஎ.

தாம்'' என்றுலும் (க) "ஸத்யஜேயம்-ஸத்யஜேயம்'' என்னும்படியிறே- ரக்ஷகத்வத்தில் பூட்சியிருப்பது. (உ) "அபயம்ஸர்வபூதேப்ய:-அபயம்ஸர்வபூதேப்ய:'' என்கிறபடியே † தன்கையிலும் தன்னைக் காட்டிக் கொடாதேயிறே ரக்ஷிப்பது. † இத்தால் - என்னுடைய அவித்யாகர்மவாஸநாருசிகளைப் போக்கி ரக்ஷித்தாய்நீயேயன்றோ வென்கிறார். அதவா (பூண்ட) போக்யதையேயிறே வஸ்துவுக்கு வேஷம். †உபாயமாகிறது - கதிசூந்யதையாலேயிறே. பால் பித்தஹரமானாலும் கஷாயமாகாதிறே. இத்தால் - நீயே மேல்விழுந்தன்றோ எனக்கு ப்ராபகனாயிற்றது மென்கிறார். (புகழானாய்) இப்படிரக்ஷிக்கையால் வந்த குணப்ரதையையுடையவனே!. (ங) "யஶஸ்ஸ்யைகபாஜநம்-யஶஸ்ஸைகபாஜநம்'' (ச) "உலப்பில் கீர்த்தியம்மானே'' என்னக்கடவதிறே. (ரு) † "யாநிநாமாநிகௌணாநி-யாநிநாமாநிகௌணாநி'' என்கிறபடியே - ரக்ஷணதர்மத்தால் வந்த குணசேஷ்டிதங்களுக்கு வாசகமாயிறே திருநாம மிருப்பது.

(இகழ்வாய தொண்டனேன் நான்) இத்தால் - ப்ராப்யப்ராபகங்களை ப்ராபிக்கவுரிய அதிகாரிஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. உனக்குப் புகழே வடிவா யிருக்கிறப்போலேயன்றோ எனக்கு இகழ்வே வடிவாயிருக்கிறபடியும். † ஆகிஞ்சந்யமிறே அதிகாரம்; †ஸ்வதோஷம் ஸம்பாதிக்க வேண்டுவதில்லை; க்யாபநமே யபேக்ஷிதம். (சு) "அஹமஸ்ம்யபராதாநாமாலய:-அஹமஸ்ம்யபராதாநாமாலய:'' (எ) "ராவணோநாமதுர்வ்ருத்த:-ராவணோநாமதுர்வ்ருத்த:''(அ) "அமர்யாத:க்ஷுத்ர:-அமர்யாத:க்ஷுத்ர:'' என்கிறவிடத்திலும் க்யாபநமேயிறே யுள்ளது, † ஸாத்யம் ஆகிஞ்சந்யமேயிறே. (தொண்டனேன்நான்) உன்பக்கலிலே அதிசபலனானநான். இத்தால் - ப்ராப்ய

---

• (தன்கையிலும்)-சேதநனை தன்கையிலும். இதுக்குப் பலிதமருளிச் செய்கிறார் (இத்தால்என்னுடைய வித்யாதி). கடைசியாயுற்றிருக்கையாலே, ஏறிட்டுக்கொள்ளுகையாதல்.

* காவல் பூண்டஇன்னாரென்று பேரைச்சொல்லாமல், (புகழானாய்) என்று குணத்தையிட்டுச் சொல்லுவானென்னென்ன; அருளிச் செய்கிறார் (யாநிநாமாநீத்யாதி). (இகழ்வாய) என்று - தம்முடைய ஆகிஞ்சந்யஞ் சொல்லவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஆகிஞ்சந்யமிறேயித்யாதி). ஆனால் தோஷம் பண்ணவேணுமோ என்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வதோஷமித்யாதி). ஸாத்யம் - ஸாதிக்கவேண்டினது. ஆகிஞ்சந்யமும்ருசியும் வேண்டு

---

(க) வி-யு-கஅ-ஙு. (ரு) ஸஹஸ்-உபோத்.
(உ) ரா-ப-கஅ-ஙங. (சு) பக-சா-
(ங) (எ) ரா-யு-கஎ-கO.
(ச) தி-வாய்-ங-கO-க. (அ) ஸ்தோ-ர-கஉ.

ருசியைச் சொல்லுகிறது. ப்ராபகப்ரார்த்தனைக்கு † ஆகிஞ்சந்யமும் ஸ்வதோஷ க்யாபநமும் வேண்டினவோபாதி ப்ராப்யப்ரார்த்தனைக்கும் ப்ராப்யருசிவேணுமிறே. ஆகிஞ்சந்யமும் அவனை யொழியச்செல்லாமையுமிறே - த்வயத்துக்கதிகாரம். அதவா, († இகழ்வாயதொண்டனேன் நான்) ஒருகட்டதாஸி ஸார்வபௌமனை யாசைப்பட்டால் நாட்டார் இகழுமாபோலேயும், மௌஷ்டிகன் அபிஷேகத்தை யாசைப்பட்டால் இகழுமாபோலேயுமன்றோ, நித்யஸம்ஸாரியான நான் உன்னை யாசைப்படுகிறது.

(என்னானையென்னானையென்னலல்லால்) இத்தால் - இவ்வதிகாரியுடைய காலக்ஷேபஞ் சொல்லுகிறது. காலக்ஷேபத்துக்காக உன்னுடைய குணங்களை யநுபவித்தே னித்தனை யொழிய என்னாற்றாமையை ஸாதநமாக நினைத்திருந்தேனோ ? ஆனையினுடைய ஸ்வபாவங்கள் ஈஶ்வரனுக் குண்டாகையாலே அந்தஸ்வபாவங்களைப்பற்ற (என்னானாய்) என்கிறார். ஆனையானது "ஒருநாள் கண்டோம்" என்றிருக்கவொண்ணாதபடி நித்யஸ்ப்ருஹணீயமாயிருக்கையும் பெரிய செருக்கையுடைத்தாயிருக்கையும், தான் நினைத்தபோது கைக்கு எட்டினாரை யெடுத்துக் கழுத்திலேவைத்துக் கொள்ளக்கடவதாயிருக்கையும், தாந்தாமே ஏறவேண்டியிருப்பார்க்குப் படிந்து கொடுக்கக்கடவதாயிருக்கையும், தான் உகவாதாரைக்கீண்டு பொகட்டால் ஆராய்ச்சியின்றிக்கே யிருக்கையும், தன்னைக் கட்டக்கயிறு தானேகொடுக்கக் கடவதுமாயிறே யிருப்பது; அப்படியே நித்யஸ்ப்ருஹணீயமாயிருக்கிற வடிவழகும், செருக்கால் பலித்த § ஸமாதிகரஹிதத்வமும், ராஜா பாணிச்சியைத் தனக்கு மஹிஷியாக்கி வைத்தால் நிவாரகரில்லாதாற்போலே, ஒரு நித்யஸம்ஸாரிக்கும் தன்பக்கல் ந்யஸ்தபரதையே ஹேதுவாகத் தன்னைக் கொடுத்தால் நிவாரகரின்றியிலே யிருக்கும்படியான ஸ்வாதந்த்ர்யமும், ஆனை தன் மேலே யேறப் படிந்து கொடுக்குமாபோலே ஸாதநாந்தர நிஷ்டருக்கு நேதாவாயிருக்கிற சிலமும், ஆஶ்ரித விரோதிகளை ஸம்பந்தங் கிடக்கச் செய்தே யழியச்செய்தாலும் நிவாரகரில்லாதபடியான விரோதிநிரஸநசிலமும், போகோபகரணபக்தியைத் தானே கொடுக்க

---

வானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஆகிஞ்சந்யமு மித்யாதி). (இகழ்வாய) இகழ்வென்று - தோஷமாய், தோஷமே வடிவென்றுதல்; எல்லாரும் இகழும்படி யென்றுதல்.

---

§ (பா) ஸர்வாதிகத்வமும்.

க்கடவதான ருசிஜநகத்வமுமாகிற இஸ்ஸ்வபாவங்களாயிற்று - இவர்க்குக் காலக்ஷேபத்துக்கு விஷயம். (க) "எட்டினேடிரண்டெனுங் கயிறு" என்று - பக்தியைக் கயிருகச்சொல்லக்கடவதிறே. ஈஶ்வரனைப் புறம்புபோக வொட்டாதபடி மநஸ்ஸாகிற ஸ்தம்பத்தோடே பக்தியாகிற கயிற்ருலேயிறே கட்டுவது. வீப்ஸையாலே - அவ்வவ ஸ்வபாவங்களே காலக்ஷேபத்துக்கு விஷயமாயிருக்கை. † நிவ்ருத்தி துஸ்ஸகம். † விஷயாந்தரங்களில் இழியவொண்ணுது, அவற்றுக் கஞ்சிப்புகுந்தவராகையாலே; ஸாதநாந்தரங்களி லிழியவொண்ணுது, வேருென்றை ஸாதநமாக ஸஹியாதவுபாயத்தைப் பரிக்ரஹிக்கையாலே; இனி இவ்விஷயந்தன்னை † முகாந்தரத்தாலே யநுபவிக்கையிறே யுள்ளது.

(என்னலல்லால்)இப்படி தேவரீர்படிகளை யநுஸந்தித்துக் காலக்ஷேபம்பண்ணினேனித்தனையொழிய. (என்னறிவன்) நான்†அடைவுபட ஒன்றறிவனே? அமாநித்வாத்யாத்ம குணங்களை யறிவனே? கர்மயோகத்தை யறிவனே? ஜ்ஞாநயோகத்தை யறிவனே? உபயஸாத்யமான பக்தியோகத்தை யறிவனே? நான் எத்தையறிந்தேன்? உறங்குகிறவனுக்கு விடிந்தாற்போலே விஷயாந்தரங்களை யொழிய வேருென்றறியாதே திரியச்செய்தே உன்னுடைய வைலக்ஷண்யத்தைக் காட்டக்கண்டே னித்தனைபோக்கி ஸாதநாந்தரங்களை எங்கே கண்டேனென்கை. " நாமேப்ராப்யப்ராபகங்களென்றிருந்தீராகில், உம்முடைய கையில் முதலில்லை யென்றிருந்தீராகில், நாம்செய்தபடி கண்டிருக்கையன்ருே ப்ராப்தம், 'முகங்காட்டாதொழிவதே!' என்று கூப்பிடக்கடவீரோ" என்ன; (ஏழையேன்) சாபலப்ரேரிதனுனல் நான் செய்வதென்? அத்யந்த சபலனுனேன். விஷயாந்தரங்களில் எனக்கோரடைவுண்டாகி லன்ருே இவ்விஷயத்திலும் எனக்கோரடைவுண்டாவது. ப்ராப்தாப்ராப்தவிவேகம் பண்ணவொட்டாத வென்னுடைய சாபலாதிசயத்தாலே கண்டவற்றிலே கால்தாழ்ந்து போந்தேன், இத்தனையன்ருேசெய்தது. ஆற்ருமையை ஸாதந

---

இதுவே விஷயமாகவேண்டுவா னென்னென்ன; அருளிச்செய்கிருர் (நிவ்ருத்திதுஸ்ஸகம்) என்று. குணநுபவத்தில் நின்றும் மீளப்போகாமையைப்பற்ற (துஸ்ஸகம்) என்கிறது. விடப்போகாதபடி இதிலே யிழிவானேன், வேருென்ருகாதோ வென்ன; அருளிச்செய்கிருர் (விஷயாந்தரங்களில்) இத்யாதிவாக்யத்ரயத்தாலே. (முகாந்தரம்) - ப்ராப்யாகாரம்.

(அடைவுபட) - சாஸ்த்ரக்ரமத்திலே. விஷயங்களிலே யுக்தாயுக்த விபாகமற பலமானுற்போலே இங்குமென்றபடி.

---

(க) ந-ச-வி-அந.

மென்றுபழியிட்டு விடப்பார்க்கில் நித்யஸூரிகளை முற்படவிட்டுப் பின்னையன்றோ என்னை விடுவது.

ஆனையின் ஸ்வபாவங்கள் நமக்குண்டென்றறிந்தது சாஸ்த்ர முகத்தாலேயோ, ஆசார்யமுகத்தாலேயோவென்னில்; உகந்தரு ளின நிலங்களிலே கண்டறிந்தே னென்கிறார் (உலகமித்யாதி) † திரு மங்கைமன்னன் கட்டினதிக்கஜங்க ளிருக்கிறபடி. (உலகமேத்தும் தென்னானாய்) † உபயவிபூதியும் வந்து ஆஶ்ரயிக்கும்படி தெற்குத் திருமலையிலே நின்றருளினவனே! இருந்ததேகுடியாகத் தெற்குத்திக் கிலுள்ளார் வாழ்கையன்றிக்கே, (க) "வலஞ்செய்யும்வானோர்மாலிரு ஞ்சோலை" என்கிறபடியே - நித்யஸூரிகளும் ஏற்று அஂகமுண்ண வரும்படியிறே திருமலையிலே நின்றருளிற்று. தெற்குத்திக்கிலானாய்.

(வடவானாய்) அப்படியேயிறே வடக்குத் திக்கிலும் நின்றருளி ற்று. (உ) "வானவர்வானவர்கோனொடுஞ் சிந்து பூமகிழுந் திருவே ங்கடம்" என்றும், (௩) "வானவர்வானவர்கோனொடும் நமன்றெ ழுந் திருவேங்கடம்" என்றும், (௪) "எல்லாவுலகுந்தொழுமாதிமூர் த்தி" என்றுஞ் சொல்லுகிறபடியே - நித்யஸூரிகளோடு ப்ரஹ்மா திகளோடு மநுஷ்யர்களோடு வாசியறவாழும்படியாகவிறே திருவே ங்கடமுடையான் நின்றருளிற்று.

(குடபாலானாய்) கீழ்ச்சொன்ன ஆனைகளைப்போலே நிற்கைய ன்றியே மேலைத்திக்கிலே ஒரு மதஹஸ்தி சாய்ந்தாற்போலே யாயி ற்று கோயிலிலே வந்து பெரியபெருமாள் கண்வளர்ந்தருளுகிறபடி. (ரு) "வன்பெருவானகமுய்ய வமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய" என்கிறபடியே ஸகலலோகங்களும் அநுபவித்து ஸத் தை பெறும்படியிறே கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது.

(குணபாலமதயானாய்) பெரியமுதலியார்பக்கல் தமக்குண்டான ஆதரத்தாலே மன்னனுடைய வடிவழகையும் செருக்கையும் நிலைய ழகையும் பற்ற உடையவர் (குணபாலமதயானாய்) என்று-மன்னனு டையருளிச் செய்வர். (சா) "తృతీయంకృష్ణనగరమ్ - த்ருதீயம்க்ருஷ்ண நகரம்" என்கிறபடியே பஞ்சக்ஷேத்ரத்திலே த்ருதீயக்ஷேத்ரமாகச்

---

ஆனை கட்டுகிறவன் ராஜாவாகையாலே - இங்கும் (திருமங்கைமன் னன்) என்கிறது. "உலகு" என்கிற ஸாமாந்யத்தாலே - அவ்விபூதியையும் காட்டுகிறது.

---

(க) தி-வாய்-உ-௮-அ. (உ) ,, ௩-௩-உ. (௩) ,, ௩-௩-எ. (௪) தி-வாய்-௩-௩-டு. (ரு) பெரு-திரு-க-௧௦. (சா)

சொல்லுகையாலும், (க) "கருவரைபோல் நின்றானைக் கண்ணபுரத் தம்மானைக் கண்டாள்கொலோ" என்றும், (உ) "கண்ணபுரமொன் றுடையானுக் கடியேனொருவர்க் குரியேனோ"என்றும்,(ங)"கற்றார் சேர் கண்ணபுரம்" என்றும் - இவர்தாம் அத்தேசத்திலே மிகவும் மண்டி யிருக்கையாலும் திருக்கண்ணபுரத்தை யருளிச் செய்கிறாரா கவுமாம். (உலகமேத்தும்) என்றது, எங்கும் அந்வயிக்கக்கடவது.

(இமையோரித்யாதி) இத்தால் - ப்ராப்யஸ்த்தாநத்தையும் ப்ரா பகஸ்த்தாநத்தையு மருளிச்செய்கிறார். (இமையோர்க்கென்றும் முன்னானாய்) நித்யஸூரிகளுக்கு என்று மொக்க ப்ரத்யக்ஷவிஷயமா யிருக்கிறவனே! யாவதாத்மபாவி ஸதாதர்சநத்துக்கு விஷயமாயிருக் கிறவனே!

(பின்னானாரித்யாதி) பரமபதத்தோடு க்ஷீராப்தியோடு அவதார ங்களோடு, †அர்ச்சாவதாரங்களோடு வாசியற, † பிற்பட்டார்க்கும் ஆஶ்ரயணீயனாய்க்கொண்டு திருமூழிக் களத்திலே வர்த்திக்கிறவ னாய். நாஸ்திக்யப்ரசுரரானவர்களுக்கும் ஆஶ்ரயணீயனாகைக்கிறே மேலை ஸமுத்ரக்கரையிலே நித்யவாஸம் பண்ணுகிறது. அதவா, த்ரைவர்ணிகாதிகாரமாயிருத்தல், சதுர்த்த வர்ணாதிகாரமாயிருத் தல் செய்கையன்றியே, "இனியில்லை" என்னும்படி நிஹீநஜந்மத் திலே பிறந்தவர்களுக்கும் ஆஶ்ரயணீயனா யிருக்கிறபடியைச் சொல் லிற்றாகவுமாம். தேசகாலங்களால் விப்ரக்ருஷ்டரானாரோடு ஜந்மத் தால் விப்ரக்ருஷ்டரானாரோடு வாசியற ஸர்வஸமாஶ்ரயணீயனென் கை. (சோதி) அந்தகாரத்தில் தீபம்போலே நிஹீநஜந்மாக்களும் ஆஶ்ரயிக்கும்படி நிற்கையாலே ஸர்வஸமாஶ்ரயணீயத்வத்தால்வந்த ஔஜ்ஜ்வல்யம். (ச) "திருமூழிக்களத்துறையுமொண்சுடரை" என் றும், (ரு) "என்கண் பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதி" என்றுஞ் சொல்லக்கடவதிறே.

(முதலானாயே) †இவையெல்லாவற்றுக்கு மடியான † ப்ரதம ஸுக்ருதமானவனே! (சு) "త్వత్పాదకమలాదన్యన్న మేజన్మాన్తరేష్వపి। నిమిత్తం కుశలస్యాస్తి - த்வதபாதகமலாதந்யந்நமேஜந்மாந்தரேஷ்வபி। நிமித்தம் குஶலஸ்யாஸ்தி" என்னக்கடவதிறே. அங்ஙனன்

மலையாளர், நாஸ்திகராய்க் கோயில் திருமலை வாசி யறியாமையாலே அர்ச்சாவதாரத்துக்கும் (பிற்பட்டார்க்கும்) என்கிறது. (இவை யெல்லாவற்று க்கும்) தானே ப்ராப்யப்ராபகனாக வறிகையும், திவ்யதேசங்களில் அநுபவ மாகிற விவையெல்லாவற்றுக்கும் ஹேதுவானஸுக்ருத மென்றபடி.

(க) தி-மொ-அ-க - க. (ச) தி-வாய்-கூ-எ-கக.
(உ) ,, ,, கூ - ங. (ரு) ,, -ங-ங-ச.
(ங) ,, ,, க0-ரு. (சு) ஜி-ஸ்தோ-க0.

றியே, ஜகத்காரணத்வத்தைச் சொல்லவுமாம். அதவா, (முதலானையே) அழகிதாக உத்பாதகனுனையென்று †கிலாய்ப்போடே தலைக் கட்டுகிருர் ... ... ... ... ... (கo)

மூ.—பட்டுடுக்குமயர்த்திரங்கும்பாவைபேணுள்
பனிநெடுங்கண்ணீர்ததும்பப்பள்ளிகொள்ளாள்
*எட்டுணைப்போதென்குடங்காலிருக்ககில்லாள்
எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும்
மட்டுவிக்கிமணிவண்டுமுரலுங்கூந்தல்
மடமானையிதுசெய்தார்தம்மை, மெய்யே
கட்டுவிச்சிசொல்லென்னச்சொன்னுள்நங்காய்
கடல்வண்ணரிதுசெய்தார்காப்பாராரே. (கக)

பதம்.—பட்டு, உடுக்கும், அயர்த்து, இரங்கும், பாவை, (ரு) பேணுள், பனி, நெடு, கண், நீர், (கo) ததும்ப, பள்ளிகொள்ளாள், எட்டுணைப்போது, என்குடங்கால், இருக்ககில்லாள், (கரு) எம்பெருமான், திருவரங்கம், எங்கேயென்னும், மணிவண்டு, மட்டு, (உo) விக்கி, முரலும், கூந்தல், மடம், மானை, (உரு) இதுசெய்தார்தம்மை, கட்டுவிச்சி, மெய்யேசொல்லென்ன, கடல்வண்ணர், இதுசெய்தார்சொன்னுள், (௩o) நங்காய், இதுகாப்பார், ஆர், (௩ரு).(கக)

உரை.—(என்பெண்ணுனவள்) பட்டுச்சேலைகளை, அரையில்தரியாநின்ருள்; மோஹித்து, அலமராநின்ருள்; மரப்பாச்சியை, (ரு) ஆதரியாள்; குளிர்ந்து, நீண்ட, கண்களில், சோகாச்ருக்கள், (கo) துளும்பும்படி (நின்ருள்); உறங்குகிறிலள்; க்ஷணகாலங்கூட, என்மடியிலே, உட்கார்ந்திருக்கவும் க்ஷமையாகிறிலள்; (கரு) என்னை அநந்யார்ஹையாக்கின ஸர்வேச்வரனுடைய, திருவரங்கமானது, எங்கேயென்று வாய்வெருவாநின்ருள்; அழகிய வண்டுகள், தேனைப்பாநம்பண்ணி, (உo) (விடாயின்மிகுதியாலே) விக்கி, ஆலாபனை பண்ணுநின்றுள்ள, மயிர்முடியையுடையளாய், மடப்பத்தையும், மான்போன்ற கண்களையுமுடையாளானவென்பெண்ணை, (உரு) இப்படியாக்கினவரை, கட்டுவிச்சியே!, உண்மையாகச் சொல்லென்றுசொல்ல; கடலின் நிறம்போலே ச்ரமஹரமான திருநிறத்தையுடைய ஸர்வேச்வரன், இப்படிச் செய்தாராகச்சொன்னுள்; (௩o) என்னுயிர்த்தோழியே!, இத்தைப் பரிஹரிக்கவல்லவர்கள், வேறேயாரிருக்கிருர்கள்? (௩ரு) (கக)

வ்யா.—பதினேராம்பாட்டு. (பட்டுடுக்கும்) ஆற்ருமையோடே (க)"முதலானை" என்ருர். அந்த †வெக்காயத்தோடே ஆண் பெண்ணாய், அதுதன்னிலும் தம்வாயாலே கூப்பிடுகைக்கு யோக்யதையில்லாதபடி மோஹங்கதையாய் வேற்று வாயாலே கூப்பிடும்படியாய்ச் செல்லுகிறதுமேல். அதாகிறது - இயற்கையிலேபுணர்ந்து பிரி

---

மேலுக்கநுகுணமாக (கிலாய்ப்போடே) என்றது ... ... (கo)
பதினேராம்பாட்டு. * (பட்டுடுக்கும்) ப்ரவேசே; (வெக்காயம்) பயம்.

---

(க) கo. * (பா) எட்டணைப்போது.

ந்து பிரிவாற்ருதாளொரு பிராட்டி மோஹமும் உணர்த்தியும் இவைமுதலான தசாவிசேஷங்களும் ஒருகால் பிறக்கையும், அது தான் † அக்ரமமாகப்பிறக்கையுமாய்ச் செல்லாநிற்க; பந்துவர்க்கத் திலுள்ளாரும் யுக்தாயுக்த நிரூபணம் பண்ணமாட்டாதேயிருக்க; இந்நோவுக்கு நிதாநமறியாதே † பேஷஜகுசலரும் மந்த்ரவாத குச லரும் புகுந்து ப்ரவர்த்தியாநிற்கிறவளவிலே பகவத்பரையாயிருப் பாளொரு கட்டுவிச்சி, "இவளுடையநோவுக்கு நிதாநமறிகிலி கோள், இவளுக்கு எம்பெருமானடியாகவந்தநோவு, இது அவனாலே பரிஹ்ருதமாகவேணும்" என்று அவள் சொன்னவார்த்தையைக்கே ட்ட திருத்தாயார், வினவவந்தார்க்கு, இப்பெண்பிள்ளையுடையப்ர வ்ருத்தியையும் கட்டுவிச்சிசொல்லுகிற வார்த்தையையும் சொல்லு கிற பாசுரத்தாலே தம்தசையை யருளிச்செய்கிருர்.

இவர் பிராட்டிதசையை ப்ராபிக்கையாகிறது அநுபபந்நமன் ருே வென்னில்; உபபந்நம். பிராட்டிமார்க்கும் இவர்க்கும் அநந்யா ர்ஹ சேஷத்வமாகிற ஸம்பந்த மொத்திருக்கையாலும், (க) "நமக் கும் பூவின்மிசைநங்கைக்கு மின்பனே" என்கிறபடியே போகம் ஸமாநமாயிருக்கையாலும், (உ) "ముహూర్తమపి జీవావో జలాన్మత్స్యావివోద్ధృతౌ"-முஹூர்த்தமபிஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோ த்ருதௌ" என்று - இளையபெருமாள் பிராட்டியோடே ஏகப்ரக்ருதி யாய்த் தம்மைச் சொல்லுகையாலே - வ்யதிரேகத்தில் ஆற்ருமை யொத்திருக்கையாலும், பிராட்டிதசையை ப்ராபிக்கத்தட்டில்லை.

ஆனாலும் தாம் ஸ்த்ரீயென்கிறபுத்தி பிறக்கக்கூடுமோவென் னில்; (௩) "స్వామిత్వాత్మత్వశేషిత్వపుంస్త్వాద్యాస్స్వామినో గుణాః। † స్వేభ్యో దాసత్వదేహత్వశేషత్వస్త్రీత్వదాయినః - ஸ்வாமித்வாத்ம த்வ சேஷித்வபும்ஸ்த்வாத்யாஸ்ஸ்வாமிநோகுணாः । ஸ்வேப்யோதா ஸத்வதேஹத்வசேஷத்வஸ்த்ரீத்வதாயிநः" என்கிறபடியே - புரு ஷோத்தமனுடைய பும்ஸ்த்வமானது எதிர்த்தலைக்கு ஸ்த்ரீத்வதாயி யா யிருக்கையாலே, "நான் ஸ்த்ரீ" என்று புத்திபிறக்கத்தட்டில்லை; ஸ்த்ரீயென்கிற புத்திபிறக்கையாவது தான்-ஸ்த்ரீகளோடு † ஆகார

(அக்ரமமாக) - உணர்ந்து இரங்கியயராமல் அயர்த்திரங்குகை. (பேஷ ஜகுசலர்) - ஔஷதத்திலே ஸமர்த்தர்.

(ஸ்வேப்யः) - ஸ்வங்கள் பொருட்டுக் கீழ்ச்சொன்னவை யடையப்ரதி யோகியைக் கொடுக்குமென்றபடி. (ஆகாரஸாம்யம்)- அவயவாகாரஸாம்யம்.

(க) தி-வாய்-௬-இ-அ. (உ) ரா-அ-௫௩-௩௧. (௩)

ஸாம்யத்தாலே பிறக்குதலே தியல்ல, §புருஷ விஷயத்தில், ஸ்த்ரீகளுக்குப் பிறக்கும் அநுராகவிசேஷபுத்தி பிறக்கை. ஸஜாதியவிஷயத்தில் விஜாதியபுத்திபிறக்கை எங்கே கண்டோமென்னில்; (க) “పాఞ్చాల్యాః పద్మపత్రాక్ష్యాః స్నాయన్త్యా జఘనం ఘనమ్ । యాః స్త్రియో దృష్టవత్యస్తాః పుంభావం మనసా యయుః - பாஞ்சால்யா:பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா ஜகநம் கநம் | யா: ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ்தா: பும்பாவம் மநஸாயயு:” என்வாஸ்திர்த்தலேயில் வைலக்ஷண்யத்தாலே ஸஜாதீயைகளான ஸ்த்ரீகளுக்கு, ஸ்த்ரீகளைக்கண்டால் புருஷர்க்குப்பிறக்கும் அநுராகவிசேஷம் பிறந்ததிறே. அப்படியே, புருஷோத்தமவிஷயமாக இவர்க்கு ஸ்த்ரீகளுக்குப்பிறக்கும் அநுராக விசேஷம் பிறக்கத்தட்டில்லை. எதிர்த்தலையில் வைலக்ஷண்யமேயிறே விஜாதீய புத்திக்கு உத்பாதகம். ஆகையாலே, ஒருபிராட்டி தசையை ப்ராபிக்கிறார்.

இன்னமும் இயற்கையில் புணர்ச்சி என்கிற விதிநாமத்தினவென்னென்னில்; - ஸர்வேஸ்வரனுக்குச் சேதநவிஷயத்தில் ஸம்பந்தமே ஹேதுவாகவிஷயீகரிக்கும் நிர்ஹேதுக விஷயீகாரத்தைச் சொல்லுகை. எங்ஙனேயென்னில்; பாஹ்யோபவநத்திலே பிராட்டி புறப்பட்டு புஷ்பாபசயம்பண்ணுகிற ஸமயத்திலே அங்குத்தானனகாந்தனும் † ம்ருகயாவ்யாஜத்தாலேவர, தோழிமார்களும், அங்குபரைகளாயிருக்கிற தசையிலே தர்மிப்ரயுக்தமான ஸ்த்ரீத்வபும்ஸ்த்வங்களே ஹேதுவாக, ஜ்ஞாபகருமின்றிக்கே கடகருமின்றிக்கே யிருக்க ஸம்ஶ்லேஷிக்கையிறே - இயற்கைப் புணர்ச்சியாகிறது. ஸ்த்ரீத்வமாகிறது - ஒருவிஷயத்துக்கு அநந்யார்ஹ சேஷமாயிருக்கையிறே. எதிர்த்தலையில் பும்ஸ்த்வமாவது - வகுத்த விஷயமுமாய் ஸர்வ விதரக்ஷகமுமா யிருக்கையிறே. ஆகையாலே நிர்ஹேதுக விஷயீகாரத்தைச் சொல்லுகிறது.

ஆனல், ஜ்ஞாபகராயிருப்பார்சில ஆசார்யர்களும், பொறுப்பித்துச் சேர்ப்பிக்கைக்குச் சில புருஷகாரபூதரும் வேண்டியன்றோ ஈஸ்வர விஷயீகார மிருப்பதென்னில்; † அப்போது ஆசார்யன் ஜ்ஞாபகனாகிறதும் இந்த சேஷசேஷித்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக, தேஹத்தில் ஆத்மபுத்தியையும் தத்ஸம்பந்த நிபந்தநமான ஸ்வாதந்த்ர்யத்தையும் நிவர்த்திப்பிக்கையிறே; புருஷகாரபூதை

(ம்ருகயா) - வேட்டைவ்யாஜம். (அப்போது) ஆசார்யக்ருத்யத்தையும் புருஷகாரக்ருத்யத்தையும் தானே யேறிட்டுக்கொண்டானென்றபடி.

§ (பா) புருஷோத்தம விஷயத்தில். (க) பாரதம்.

யான பிராட்டியும், பூர்வ வ்ருத்தத்தை மோஷிப்பிப்பதும், இஸ்ஸம்பந்தத்தையும் இதனடியாகவந்த ஒருத்ஸல்யாதிகளையும் முன்னிட்டிறே.

இன்னமும், பிராட்டியுபைணம்நாவுக்கு நிதாநமறியாதே மந்த்ரௌஷதாதிகளாலே வ்யாட † பேறுர்சிலரும் அத்தை நிஷேதிக்கிறு ளொருகட்டுவிச்சிவார்த்திறக்கிமாய்ச் செல்லுகிற விதுக்குக் கருத்தென்னென்னில்; விஷய இவ ப்ராவண்யமடியாகவந்த அவஸாதம், ஸாதநாந்தரநிவர்த்ய கவத்ப்ராவண்யத்தால்வந்த அவஸாதம், அதுக்கு ஹேது பருமா யிருந்துள்ள வீஸ்வரன்றனேவந்து முகங்காட்டிப்போக்கு" என்னும். † தத்ஸம்ஸ்லேஷம்யாவதாத்மபாவியாகையாலும், இவ்வினவஸ்மாதிசயம் ஸ்வரூபப்ராப்தமாகையாலும் அநிவர்த்யம். ட்டுவிச்

ஸ்வவாக்யுலே தர்பாதி திருத்தாயார்பாசுரத்தாலும் பேசுகிறுர் தாமாயிராநிற், பிராட், இது ஸங்கதமாகிறபடி யெங்ஙனே யென்னில்; ஓராறு பெ ம்போகாநின்றுல் கரையைப்பற்றிப்போமளவன்றிக்கே பெருனில் க்கிருந்தால் கைவாய்க்கால்களாய்ப் போம்போக்கும் நிரம்பிர்ஷத்வநாநிற்கத் தானும் குறையாதேசென்று கடலிலே புகுமாபோலின், இவருடைய ப்ரேமாதிசயத்தாலே திருத்தாயார்வார்த்தை நமா குறைவற்றுச் செல்லாநிற்கச்செய்தே தம்வார்த்தையுங்குறைவற்றுச் செல்லுகையாகிறவிது - ஸங்கதம்.

இன்னமும் பெண்பிள்ளை மோஹங்கதையாயிருக்க,(க)"ம்ரூர்ச்சிதஃ-ப்ருசம்பவதிதுஃகிதஃ" என்று அவளிலும் தான் அவஸந்நையாயிருக்க ப்ராப்தமாயிருக்கத், தெளிந்து வார்த்தைசொல்லுகிறவிது யுக்தமோவென்னில்; பிராட்டியைப் பிரிந்த ஸமயத்தில் சக்ரவர்த்தித்திருமகனுருக்குப்பிறந்த அவஸாதத்திற்காட்டில் இளையபெருமாளுக்கும் அவருடைய அவஸாதத்தால் வந்ததும் தம்முடைய காவற்சோர்வால் வந்த அவஸாதமுமாய்க்கொண்டு அவஸாதம் இரட்டித்திருக்க அவற்றைப் பொறுத்துத்தெளிந்து வார்த்தைசொல்லவேண்டும் ஸமயமறிந்து பெருமாளைத்தேற்றினுற்போலே, இவளும் இப்பெண்பிள்ளையுடைய உஜ்ஜீவநார்த்தமாகத் தெளிந்திருக்கையுக்தம். † ரக்ஷ்யபூதர் அவஸந்நராயிருக்க வமையும், அவ

---

பகவானடியாக வந்தவவஸாதம் விஷயாந்தர மடியாக வந்தவவஸாதம் போலே ஸாதநாந்தரநிவர்த்ய மல்லாமைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறுர் (தத்ஸம்ஸ்லேஷமித்யாதி).

பரார்த்தமாகத் தெளிந்திருக்கை தானு மருமையென்றுர், ரக்ஷ்யபூதர்க்காகத்தெளிந்திருக்கைதானும் அருமையென்கிறுர் (ரக்ஷ்யபூதரித்யாதி).

---

(க) ரா-அ-உ-சo.

ஸாதமொத்திருக்கச் ... தையும் அத்தையறிந்துபொறுத்துத் தெளிந்திருந்து வார்த்தை ... லவேண்டும் அருமையுண்டிறே - ரக்ஷகர்க்கு.

† இவளுடைய வார் ... இவளுக்குஜ்ஜீவநஹேதுவானபடியென்னென்னில் ; † கட்டுவி ... ார்த்தை, பகவத்பரமா யிருக்கையாலும், இவள் தன்னுடைய ... ாரம் விரக்திபரமா யிருக்கையாலும், "இவளழகிலே அவன்படு ... டை இவள் படுவதே!" என்று அவனைப்ரஸங்கிக்கையாலும், (... ப்பாரையாமினியில் கட்டுவிச்சிபோலன்றியே திருமடலில்கட் ... தக்கிபோலே மஹாபாகவதையாயிருப்பாளொருத்தி யாகையாலே வாஸம் ... துதீர்கையன்றிக்கே வர்த்திக்கிலும் அவள்ஸ்பர்சமமையும்" எ... படி யிருக்கிறவளை ப்ரஸங்கிக்கையாலும், ஆச்வாஸ ஹேதுவா ... டில்லை.

இன்னமும் † முதல்பத்து, இவர் த... ய வார்த்தை; இரண்டாம்பத்து திருத்தாயார் வார்த்தை; மூன்று (சாஷாத் பிராட்டியார் வார்த்தை. (உ) "மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்" - மச்சித்தா மத்கத ப்ராணா: போதயந்த: பரஸ்ப ... கிறபடியே மூன்று பத்துக்கும் மூன்றுவாக்யார்த்தம்; - [மச்சித்தா:] மதேகசித்தா: - மதேகசித்தா:. விஷயாந்தரம் கலசாதி ... ருந்பார் ஹராய் அநந்யபோக்யரா யிருக்கிறபடியைப் பேசுகை ... முதல் பத்து ஜ்ஞாநபரம்; இரண்டாம்பத்து- அந்த ஜ்ஞாநகார்ய ... ராக்ய பூர்வகமாக பகவத்ப்ராவண்யாதி சயத்தைச்சொல்லுகிறது; ‡ ப்ரேமபூர்வகமானால் ப்ராப்தியளவும் செல்ல நிலவரோமோல்லி க்ஷேபம் பண்ணும்படியைச்சொல்லுகிறது - மூன்றாம்பத்து ; இரண்டாம்பத்து [மத்கதப்ராணா: - மத்கதப்ராணா:] என்றதிறே, தன் மூச்சடங்கித் தாயார் வாயாலே வார்த்தை சொல்லுகையாலே; [போதயந்த: பரஸ்பரம்-போதயந்த:பரஸ்பரம்] என்றதிறே, தோழியோடே வ்ருத்த கீர்த்தநம் பண்ணுகையாலே.

இதில் முதல்பாட்டில் திருத்தாயார் இவளுடைய § விரக்தியையும் கட்டுவிச்சிசொன்ன வார்த்தையையும் வினவவந்தார்க்குச் சொல்லுகிறாள். அவர்களுக்குச் சொல்லுகிற வார்த்தையொன்றும் தன்னுடைய பாவவ்ருத்தி யொன்று மாயாயிற்றிருக்கிறது. "விஸ்லே

---

இவளுடையவார்த்தையாவது - கட்டுவிச்சிவார்த்தையை யநுவதிக்கையாலும், மகள் வ்யாபாரத்தைச்சொல்லுகையாலும், கட்டுவிச்சியினுடைய வைலக்ஷண்யத்தைச்சொல்லுகையாலும். தாயாருடையவார்த்தை மகளுக்குஜ் ஜீவநஹேதுவென்று உத்தரம்.

முப்பதுபாட்டையும் மூன்றுபத்தாகப்பிரித்து அருளிச்செய்கிறார்.

---

(உ) கீ-வாய்-ச-கூ.

‡ (பா) ப்ரேமபூர்ணமானால்.

(க) கீதை.

§ (பா) அசக்தியை.

ஷத்தில் இப்படி அவஸ்ந்தையாம்படி ப்ரேமத்தில் தேசிகையாவ தே!'' என்கிற உகப்பாயிற்று உள் வாழொரு தனக்குச்செல்லுகிறது.

தனக்கு அபிமதமாயிருந்தாற் றே தன்னை இவர்களுக்குச் சொல்லக்குறையென்னென்னில் புணர்ச்சியாகையா லே அவர்களுக்குச் சொல்லப் பேற்றிலள், கடகரடியாகப் பிறந்த ஸம்பந்தமாகிலிறேசொல்லலாகிறது; ஆசார்யோபதேசபூர்வகமாக பகவத்ஸம்பந்தயுக்தனாகில் இவள் நமக்குக் கொண்டாடலாவது. † அஜ்ஞாநகார்யமான கலக்கம் யதாஜ்ஞாநத்தாலே நிவர்த்யம், யதா ஜ்ஞாநகார்யமான கலக்கம் யாவதாத்மபாவி அநிவர்த்யம் என்னு மதிறே - இப்பாட்டினவதாரிகிறது.

(பட்டுடுக்கும் ...) இதுவும் மேற்சொல்லுகிற அவஸ்த்தைக ளோபாதி ஆ... யிலே ஒரு அவஸ்த்தாவிசேஷம். † அவன், ஸம்ஶ்லேஷதிசையில் அவயவசோபையைக் காட்டிலும் ஸமுதாய சோபையைக் காட்டிலும் உடையழகிலே யீடுபட்டு, "இதொரு உடையழகிருக்கும்படியே!" என்று அதிலே ஸக்தனாயிருக்கும் படியைக் கண்டு, அவன் வருகைக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணு கிறாளாக புடைவை யுடுக்கத்தொடங்கினாள். அவ்வுடையையுடுக்க, "... யிழக்கவொண்ணாதென்று அவன் வரும்'' என்று அத் ... டுக்கத்தொடங்கினாள். (உடுக்கும்) †அவன் ஆதரிக்கும் உடை அவன் வருமளவும் அழிப்பது உடுப்பதாகிறபடி. †அவனுக்கு உறுப் பாகத் தன்னுடம்பை அலங்கரிக்கையும் ப்ராப்தமிறே. † சேஷிக்கு அபிமதமானபோது நியந்த்ருத்வமு முத்தேஶ்யமாயிறேயிருப்பது.

(அயர்த்து) உடைவாய்த்தவாறே அவன் வருமென்று ஸந் துஷ்டையா யிருந்தாள், † அவ்வளவிலும் வரக்காணாமையாலே மோ ஹங்கதையானாள். அவன் வருகைக்குறுப்பாக அலங்கரித்தாள்,

---

கலக்கம் த்யாஜ்யமன்றோவென்ன அருளிச்செய்கிறார், (அஜ்ஞாநகார்ய மித்யாதி).

* மோஹித்தவள் உடுக்கக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (இது வும் மேற்சொல்லுகிறவித்யாதி). அவஸ்த்தா விசேஷத்திலேபலித்தத்தை அருளிச்செய்கிறார் (அவன்ஸம்ஶ்லேஷ தசையிலித்யாதி). வர்த்தமானத்தைப் பற்ற அருளிச்செய்கிறார் (அவனாதரிக்கும் உடை அவன் வருமளவித்யாதி). தன்னுடம்பை அலங்கரிக்கலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (அவனுக்கித் யாதி). அவனுக்கு உறுப்பானாலும் செய்யாதது செய்யலாமோவென்ன; அரு ளிச்செய்கிறார் (சேஷிக்கபிமதமித்யாதி).

ஆர்முமையாலே யென்னுதல்; ஸ்வரூபஹாநியாலேயென்னுதல்.

அதிலும் அவன் வர[illegible]நலேதன்மையாலே ஸ்வார்த்தமாய் விழுந்தது, ஸ்வரூபஹாநியாலே மோ[illegible]டைந்ததையானுள். † ஆற்றாமையால் வரும் மோஹம்போலன்றே - ஸ்[illegible] ஹாநி பிறந்தால் வரும் மோஹம். (இரங்கும்) (க) "ப்ரலாப[illegible]ஸ்ததாஸம்மோ[illegible] - ப்ரலாபஸ்ததாஸம்மோஹ:" என்று இரக்கத்துக்குப்[illegible] மோஹமாகப்ராப்தமாயிருக்க அக்ரமமாகச் சொல்லும்படியி[illegible]விஷயத்தினுடைய வைலக்ஷண்யமிருப்பதும், இவளுடைய[illegible]தக்[illegible]மையின் வைலக்ஷண்யமிருப்பதும். இரக்கமாவது - அவ[illegible]வாஸம்[illegible]பவேணுமென்னும் த்வரையாலேபடும்அலமாப்பு. † மோஹம் [illegible] தசை என்னும்படியிறே இந்தஅலமாப்பிருப்பது.

அதவா, (பட்டுடுக்கும்) நக்நமாய்த் [illegible] லஜ்ஜாவஹமாய், பட்டுடுக்கும்படியான பருவங்கடவொன்கிறுள். (சாணுடு) வஸ்த்ரஸாமாந்யத்துக்கும் பேர்; (க) "பொத்திப்புலியுக[illegible], புஜ[illegible]" என்றாற்போலே வஸ்த்ரவிசேஷத்துக்கும்பேர். (உடுக்கு[illegible]கையாக[illegible]யில்தொங்காதபடியாலே எடுப்பது உடுப்பதாகிறபடி. † (உ)நாமத்[illegible]யோமுழுமுற்றும்போந்தில மொய்பூங்குழல்குறிய கலேயோ சொல்லி[illegible]லே - இவள்பரமே!" என்றிறே ஒருதிருத்தாயார் வார்த்தை[illegible] (அவர்த்து) பருவமிதுவாயிருக்க வ்யதிரேகத்தில் மூச்சடங்கும்பபு[illegible] ப்ரணயத்தில் தேசிகையானபடி. (இரங்கும்) † அதுதான் [illegible]த்தாவத் தசையென்னும்படி, மோஹங்கதையான தசையிலே ஜ்ஞா[illegible] குடிபுகுந்து அவனை நினைத்து அரதியாய்ச் செல்லாநின்றதா[illegible]. மோஹத்தில் ஜ்ஞாநம் நடையாடாதபடியாலே து:கமில்லையிறே.

(பாவைபேணுள்) இவளுடைய தசாவிசேஷத்தைக் கண்டு "இவளைத் தரிப்பிக்கும் விரகேதோ" என்று பார்த்து, பண்டு ஊணுறக்கமில்லாதபடி பாவையோடே போதுபோக்கக் காண்கையாலே பாவையைக்கொண்டுவந்துகாட்டினுள், அது† த்ருஷ்டிவிஷம்போலே

---

ஆற்றாமையாலே யென்னவமையாதோ, ஸ்வரூபஹாநியாலு மென்னவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறூர் (ஆற்றாமையால் வருமித்யாதி). மோஹித்தவள் இரங்கக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறூர் (மோஹம் ஸ்வஸ்த்ததசையித்யாதி). மோஹத்திலேஜ்ஞாநமில்லாமையாலே து:கமட்டமாய், இரங்குகிறவவஸ்த்தையிலே ஜ்ஞாநமுண்டாகையாலே து:கமதிசயித் திருக்குமென்றபடி.

கலே அரையில் தொங்காதவவஸ்த்தையிலே ப்ரணயத்திலே விதக்த்தையென்ற விடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறூர் (முலேயோமுழுமுற்றுமித்யாதி). (இரங்கும்) என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறூர் (அதுவித்யாதி). (த்ருஷ்டிவிஷம்) - கண்ணுக்குவிஷம்போலே அஸஹ்யமாயிருக்கை.

---

(க) (உ) தி-வி-கூo.

யாயிற்று. பாவையை பொழியச்செய்மோவள்கிடீர் பாவையை அநாதரிக்கிறாள். போகோபகரணங்களொருபடி தொற்றறும்படிகிடீர் ஒருவிஷயத்திலே அவகாஹித்தபடிச்சொ இத்தால் - பகவத்விஷயத்திலே அவகாஹித்தார்க்கு விஷயாணங்கள் த்ருஷ்டிவிஷம்போலே யிருக்குமென்னு மர்த்தத்தை அருளிச்செய்கிறார். † பகவத்விஷயத்தில் ப்ராவண்யம் பகவத்ப்ரஸாதத்திற்கு ஸாமானவோபாதி விஷயாந்தரங்களில் விரக்தியும் பகவத்ப்ரஸாதபலமிறே.

(பனிநெடுங்கண்ணீர்ததும்ப) உறக்கமும் குடிபோயிற்று. (பனிநெடுங்கண்ணீர்ததும்ப) என்றது ஆநந்தாஸ்ருவுக்கிலக்கானகண் சோகாஸ்ருவுக்கிலக்காவதே! இனவகுத்ரம் * வெள்ளங்கொண்டாற்போலே ஈஸ்வரபோக்யமட்டுவிச்படும்ளவிவரவே! இது. (பனிநெடுங்கண்) (க) ,, ஆஹ்லாதசீதநேத்ராம்பு: - ஆஹ்லாதசீதநேத்ராம்பு: '' என்கிறபடியே ஸம்ஸ்லேஷதசையில் கண்ணீர் சீதளமாயிறே யிருப்பது. (நெடுங்கண்) † எனில்; அவயவங்களிற் காட்டில் கண்ணழகிலே ஈடுபடும்படியிஷேஷத்வம் கண்ணின்போக்யதையிருப்பது. (உ) † ,, ஏகைககுணாவதீப்ஸயா ஸதாஸ்திதா: - ஏகைககுணவதீப்ஸயாஸதாஸ்த்திதா: '' என்கிறபடியே - பகவத்குணங்களில் ஓரோகுணங்களே அவதிகாணவொண்ணாதாற்போலே யாயிற்று - விபுவாய் ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாயிருக்கிற ஈஸ்வரனுக்கும் இவள்கண்ணின் போக்யதையைப் பரிச்சேதிக்கவொண்ணாதபடி. அவன் ஸ்வரூபத்தாலே அபரிச்சிந்நன்; இவள் போக்யதையாலே அபரிச்சிந்நை. அதவா, (நெடுங்கண்) உபயவிபூதி யுக்தனையுங்கூட ஒருபுடையிலே யடக்கவற்றான கண்ணென்னவுமாம். இத்தால் - ஜ்ஞாநவைபவத்தைச் சொல்லுகிறது. (நீர்ததும்ப) சோகாஸ்ருவாலே தளும்புகையாலே.

(பள்ளிகொள்ளாள்) உறங்குகிறிலள். ஸம்ஸ்லேஷதசையில் ஆநந்தாஸ்ருவாலே யுறங்கப்பெறாள்; விஸ்லேஷ தசையில் சோகாஸ்

---

இப்படி அஸஹ்யமாகைக்கு அடியேதென்ன; அருளிச்செய்கிறார் (பகவத்விஷயத்திலேயித்யாதி).

தாயாருக்கும் தனக்கும் அவனுக்கும் போக்யமானவாகாரத்தைப்பற்ற தாத்பர்யத்வய மருளிச்செய்கிறார் (ஆநந்தாஸ்ருவுக்கு) இத்யாதி வாக்யத்வயத்தாலே. எல்லாமிருக்கக் கண்ணழகைச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அல்லாதவவயவங்களிலித்யாதி). நெடுமை - அழகால் வந்த மிகுதியாதல்; கண்ணின்பெருமையாதல்.

---

* (பா) ''வெள்ளங்கோத்தாற்போலே''

(க) விஷ்ணுதத்வம். (உ) ஸ்தோ-ர.

ருவாலே யுறங்கப்பெறுதலைக் ஸம்ஶ்லேஷ தசையில் அவனுறங்கவொட்டான்; விஶ்லேஷதசையில் விரஹம் உறங்கவொட்டாது. தன்வயிற்றில் பிறந்த இவள் உற... ...ன்ன ப்ராப்தமாயிருக்க, (பள்ளிகொள்ளாள்) என்பானென் ...கிறில் ...ரில்; வயிற்றிற் பிறந்தவளேயாகிலும் ராஜமஹிஷியாகப் ...ம்ஶ்லே... ...ட்டினுல் "ஆழ்வார்" என்றிறே சொல்லுவது. அப்படி ...றுக்... ...ரனேடு சிஷ்யனேடு வாசியற அவர்களுக்கு பகவத்ஸம்பந்... ...னால் உத்தேஶ்யதை தோற்ற பூஜாவாசி சப்தங்களாலே செ...வாஸம் ப...வதென்று பூர்வாசார்யர்களநுஷ்டித்துப்போந்த ... சாஸ்... ...ந்துக்கடி இதிறே. இவளுடைய ஸௌகுமார்யத்தை யது... ...தருளுகிற, "உறங்காதொழிவதே!" என்கிறாள்.

(எட்டுணைப்போதென் குடங்காலிருக்க... ...ரை வடி... இவள் உறங்கக்காணாமையாலே, முன்பு தன்மடியிலே யு... ...ட, புஜ...ரகக் கண்ட வாஸனையாலே தன்மடியைக் கொடுத்தாள்; ...கையாக ...ருப்பிலே அணைந்தாற்போலிருக்கையாலே துணுக்கென்னநாமத்தின்றாள். (எட்டுணைப்போது) ஸர்வகாலமும் என்மடியெ...சொல்லி, ...ல்லாதவளுக்குக்கிடீர் க்ஷணகாலமும் பொருந்தாதொழிகிற...யத், ...வள...ன்குடங்கால்) பெற்றதாயான வென்மடி பொருந்தாதபடி ... (க...ஷ... யைப் பண்ணின § (படியையுடைய) வனுரோ வென்கிற... ...த்தாயுத் யந்தோடு ரக்ஷகையோடு வாசியற ஸ்ம்பந்தமற்றபடி. அ... ...ால்லி யங்களோடு பூஜ்ய விஷயங்களோடு வாசியற ஸம்பந்தமற்றபடி.

(இருக்ககில்லாள்) உறங்குகை அபேக்ஷிதமல்லாமையாலே *எழுந்திருந்தாகிலு மிருக்குமோ வென்னும் நசையாலே அணைத்து மடியிலே யிருத்தப்பார்த்தாள், அதுவும் பொருந்திற்றில்லை. (கில்லாள்) சக்தையாகிறிலள். என்முகத்தில் பயிர்ப்பைக்கண்டு இருக்கத்தேடினாலும் அதுக்கு சக்தையாகிறிலள். † ஏதேனுமளவிலும் தன் மகளைக் குறைசொல்லுமவளன்றே; † நெருப்பிலே கிடக்க ஆசையுண்டானாலும் மடியிற்கிடக்கப்போகாதிறே.

---

இப்போது உறங்காளென்னுமல், கேவலம் (உறங்காள்) என்று ஸாமாந்யேந உறக்கத்தை நிஷேதிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷதசையிலித்யாதி).

ரக்ஷ்யம் மாநமாகையாலே, ரக்ஷகையானதாயோடு வாசியறவுறவற்றபடி.

தன்மடிஅஸஹ்யமா யிருக்க, (கில்லாள்) என்று இவளுக்கு அபேக்ஷை தோற்றச் சொல்லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஏதேனுமளவித்யாதி). ஆசையுண்டானல் இருக்கக்கூடாதோவென்ன; அருளிச்செய்கிறார் (நெருப்பிலே யித்யாதி).

---

§ குண்டலிகம் க்வாசிக்கம். * (பா) எழுந்திருந்தாளாகி லிருக்குமோ.

இத்தால் - ப்ரக்ருதிப்ராக்ருதங்களை அவஸ்ரக்தி ஜ்ஞாததயாவந் ததன்று, ஸத்தாப்ரயுக்தமென்கை. ப்ரேமம் ஸத்தாப்ரயுக்த மானவோபாதி இதரவிஷயத்தில் இத்தியும் ஸத்தாப்ரயுக்தமா யிறே யிருப்பது.

அவ்வளவேயோ, (எம்பெ ... மாண ... னித்யாதி) என்னை அநங்யார் ஹமாக்கினவன்கோயில் ... பல ... ன்கிருள். பாவையோடு தாய் மடியோடுவாசியறப் புற இவ ... துவக்கை யறுத்தவனூர் எங்கே யென்னு நின்ருள். இருமா ... டய கோயிலெங்கேயென்று அவன் பேரைச் சொல்லாதே என் ... பெருமான்) என்பானென்னென்னில்; இயற்கையில் புணர்ந்தவ ... கயாலே ஸ்த்ரீத்வ பும்ஸ்த்வங்களே ஹே துவாகக் கலந்துவிட்ட ... யிறே. ஜ்ஞாபகருண்டாய்க் கலக்கிலிறே பேரறியலாவதல்ல த ... னூர் கோயிலென்றறிந்தபடி யென்னென் னில்; ஸம்ராட் ... சையில் பிரிவைநினைத்து, "பிரியேன், பிரியில் தரியேன்" னில்; அ ... பிரிவைப்ரஸங்கிக்கிற வளவிலே இவள் தரித் திருக்க ... ஷத்வ ... ன்றி ... ன்று, "நம்மூர்கோயில்" என்று ஊரை ப்ரஸங்கித் தான் ... ஆவின் ... ல, ஊர்கோயில் என்கிருள். (எம்பெருமான்) என க்ஷ ... நாமா ... ; எழுதித்தந்து என்னை யெழுதிக்கொண்டவன். (திரு ... ரங்கேயென்னும்) கோயில் மேற்கேயென்றறியுமே. எங் ... ணுத ... ன்பானென்னென்னில்; ஆற்ருமையாலே கண்ணுஞ் சுழலே யிட ... திக்ப்ரமம் பிறந்தால் பின்னை திக்குத்தேடவேண்டியிறே யிருப்பது.

(மட்டுவிக்கியித்யாதி) அவனை இப்படி படுத்தக்கடவ மயிர்மு டியையுடையவள்கிடீர் அத்தலையித்தலையாய் இப்படி நோவுபடுகி ருள். † செவ்வைப்பூசலிலேயிறே அவன் நோவுபடுவது, † வஞ்சநத் தே அகப்பட்டாளா மித்தனை யென்கிருள். (மட்டுவிக்கி) பெரிய அபிநிவேசத்தோடே மதுபானம்பண்ண விழிந்து விடாயின் மிகுதி யாலே விக்கினபடியைச் சொல்லுதல்; மதுவைக்கழுத்தே கட்ட ளையாகப் பானம்பண்ணின விடத்திலும் அபிநிவேசம் மாளாதபடி யாலேதரித்து இழிய அவகாசமில்லாதபடியாலே விக்கினபடியைச் சொல்லுதல்; ஸாரஸ்யத்தாலே உள்ளிழிச்சவும்மாட்டாதே உமிழ வும்மாட்டாதே நடுவேநாக்கடியிலே வைத்திருக்கிறபடியைச் சொல்

---

அவனுக்கு நோவில்லையோ வென்ன; அருளிச்செய்கிருர் (செவ்வைப்பூ சலிலேயித்யாதி). செவ்வைப்பூசல் - இவளழகு அவன் நெஞ்சிலே படுகை. (வஞ்சநம்)-அவனழகு இவள் நெஞ்சிலே படுகை. இத்தால் - இயற்கைப் புண ர்ச்சியாகையாலே இவளழகு தன்னெஞ்சிலேபடாமல் தன்னழகு இவள்நெ ஞ்சிலேபடும்படி வஞ்சித்துக்கலந்தானென்றபடி.

னுதல். † மநுஷ்யர்க்குதலை ...ரநங்களிரண்டும் தாரகமாகையாலே, அந்நத்தாலே விக்கினல் ...டைய ஸமாதாநம்பண்ணலாம், மதுவ்ரத மாகையாலே' மதுவாலே ... ல் மதுவையிட்டு ஆஸ்வஸித்தல், தவிருதல் செய்யுமித்தனை... கிறில ...வ்யாந்தரத்தால் ஆஸ்வஸிப் பிக்க வொண்ணுதிறே. (க)" † ...ம்... - பதிம்விஸ்வஸ்ய" என் கிறபடியாலே பதிவ்ரதைக்கு வ... ...த்தைப் பதிதானே போக் குமதொழிய விஷயாந்தரங்களாலே ...தக்கத ...கவொண்ணுதிறே.

(மணிவண்டு) ரஸாயநஸேவை ...வாஸம் ...வத்த,) ...றைப்போலே நரை திரை மூப்பு அற்றிருக்கிறபடி. (உ)"அரும்... ...டு ஸம்ப... ...ர" என்கிற விஷ யத்திற்கு ஸ்மாரகமா யிருக்கிறதாயிற்று. இ... ...தருளுகிற ...ல்லை ...மயிர்முடியை க்கண்டு (ங) "தூவியம்புள்ளுடைத் தெய்வவ...) (சாணூ... ...கிறபடியே ஒரு *தெய்வவண்டு படு மலமாப்புக்கு ஸ்மாரகம... ...ரை வடி... ...தாயிற்று, இவள் குழலில் மதுவாலே வண்டுகள் படுமலமா... ...ட, புஜப... ...வகையாக... ...ரும்) மதுவைக்கழுத்தே கட்டளையாகப் பானம்பண்ணின ...நநாமத்தின ...ஷத் தாலே இருக்கிற விடத்திலே யிருக்கமாட்டாமையா... ...சொல்லி, ...வி ட்டுக் கூப்பிடமாட்டாமையாலும் ஆளத்திவைக்கிறபடி. ...யத், தவள ... (... எனக்கு பவ்யையானவள் கிடீர் இப்போது அபவ்யைய... ...த்தாது ...ருள். அங்ஙனன்றியே, மடப்பமென்று - ஸ்த்ரீத்வமாய், ... ...சொல்லி திகஸ்த்ரீத்வத்தையுடையவளென்னவுமாம். தனக்கு ஆற்று... ...மீதூர்ந்தாலும் அது பிறர்க்குத் தெரியாதபடி யடக்கி அவிக்ருதை யாயிருந்து எதிர்த்தலையை விக்ருதமாக்கக் கடவ விவள்கிடீர், "எம் பெருமான் திருவரங்கமெங்கே" என்று வாய்விட்டுக் கூப்பிடுகிருள். (இது செய்தார்தம்மை) இவளுடைய தசாவிசேஷம் பாசுரமிட் டுச் சொல்லப்போகாமையாலே கடலைக்காட்டுமாபோலே (இது) என்று கையாலேகாட்டுகிருள். (இதுசெய்தார்) † பண்டுநான் ஒப்பி த்துவிட்டால் அவ்வொப்பனைகுறியழியாதேவரும்; இப்போது இக் குழலை ஆத்தஸாரமாக்கினவனுரோ வென்கிருள். அங்ஙனன்றியே, இவள்மயிரில் பூவைச் சருகாக்கி வண்டுகளைப் பட்டினிகொண்டவ

---

விக்கினல் வேறொன்ருலே ஸமாதாநம் பண்ண வொண்ணுதோ வெ ன்ன; அருளிச்செய்கிருர் (மநுஷ்யர்க்கித்யாதி). இத்தால் பலிதத்தை இவ ளிடத்திலேயேறிடுகிருள் (பதிம்விஸ்வஸ்யேத்யாதி).

(இதுசெய்தார்) மூன்றுதாத்பர்யம்.

---

(க) புருஷஸூ. (உ) ...மா-எ-௪0-க. (ங) தி-வாய்-க-க-ச.

ணுரோ வென்னுதல். (தம்மை) இவள் தன்னுடைய அவஸாதத்தைக்கொண்டு அவனுடைய வைலக்ஷண்யத்தை ... லயிடுகிருள். இவளை இப்பாடுபடுத்தின ஸௌபாக்யத்தை இப்பவருமொருவரே! (தம்மை) இதென்னஸௌபாக்யம். அவ... ங்க நடுவிலே வளர்ந்தாரோ! (தம்மை) இவளை இப்படி ப்ரவ... த்தில் தேசிகையாக்கின பரமப்ரணயியாரோவென்கிருள்... மாற்ருமையை விளப்பித்தது அஸஹ்யமாகில் இது செய்யவ... சொல்லவேணும், அது தமக்கபிமதமென்னுமிடம் ப்ரகடமா... யிற்று - (தம்மை) என்கையாலே.

(மெய்யே என் ... அச்சொல்) யதார்த்தத்தைச்சொல். கட்டுவிச்சி, ஸத்யவ... ன்று ப்ரஸித்தை § யாயிருக்க யதார்த்தத்தைச் செ... விச் ... னென்னென்னில்; இயற்கைப் புணர்ச்சியாகையாலே த... சொல்லவொண்ணுதென்றிராதே, இது எனக்கபிமதமா... ப்படி சொல்லென்கிருள். †சிகித்ஸிக்கும்போது உள்ளபடியில்... ணுமிறே. (சொல்லென்னச்சொன்னுள்) நெடுநாள் அதவ... ரித்துக் கேட்கவேண்டும் வார்த்தையை ஏவச்சொன்... ம்பெருமானுனைப்போலேயும் கீதோபநிஷதாசார்யனைப் ... ங்காணும் இக்கட்டுவிச்சிவைபவமிருப்பது; - செவிதாழ்த்... கல்லாம் வார்த்தைசொல்லிப் போந்தார் - உடையவர்; ருசி... ப் பிறப்பித்து வார்த்தைசொல்லிப்போந்தான் - கீதோபநிஷதாசார்யன். (சொன்னுள்) தென்றலும் சிறுதுளியும்போலே இதுக்கோரர்த்தம்வேணுமோ? இப்பாசுரமே யமையாதோ வென்னும்படி காணும் வார்த்தைசொன்னசீர்மையிருந்தபடி. (சொன்னுள்) எனக்குக் கேட்கை தேட்டமானுற்போலேகாணும் இவளுக்குச் சொல்லுகை தேட்டமாய்ச் சொன்னபடி. † ஆசார்யனுக்கு பகவதநுபவ ப்ரீதிக்குப் பரீவாஹாபேக்ஷை யுண்டாகையாலே ஆள் தேட்டமா

(தம்மை) வடிவின் வைலக்ஷண்யமாதல், அவன்ஸௌபாக்யமாதல்; ப்ரணயித்வத்தால் வந்தவைலக்ஷண்யமாதல். தாய்க்கு அபிமதமென்கைக்கு ஜ்ஞாபகங்காட்டுகிருர் (இவ்வாற்ருமையித்யாதி).

உள்ளபடி சொல்லவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிருர் (சிகித்ஸிக்கும்போதித்யாதி). § (இவளைத் தன்விஷயத்திலே ப்ரவணமாக்குகை - அவன் இவளுக்குப்பண்ணின சிகித்ஸாப்ரகார மென்றபடி.) கேட்டவுடனே சொல்லவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிருர் (ஆசார்யனுக்கித்யாதி).

§ (பா) யாகில். § குண்டலிதம் ஸந்திக்தம்.

யிறே யிருப்பது. சிஷ்யனைக் கேட்டுத்தரிக்கக்கடவன், ஆசார்யன் சொல்லி தரிக்கக்கடவன். சிஷ்யனுக்குக் கேட்கை உஜ்ஜீவநஹேது; அவனுக்குச் சொல்லுகை ...

(நங்காய்) அவள் சொன்னுகிறிலளோ. சொல்லலாம்படி புறம்பு கையொழிந்திருக்கும்படியான ஸம்ஸ்லேஷமிறே. அவளுக்கு நான் தேட்டமானாற்போலே காண் எனக்கும் நேட்டமானபடி. அவள் சொன்ன வார்த்தைதானேதென்ன; அருளிச்செய்கிறார் (கடல்வண்ணரிதுசெய்தார்) † * எம்பெருமான் திருவாஸம் பண்ணுகிறவங்கே யென்றாள் அவள்; இவள் (கடல்வண்ணர்) என்று ... ஸம்ஸ்லேஷமானைச் சொல்லுகிறாள். இங்கு கடலின் ஸ்வபாவத்தைச் சொல்லுகிற, அதன்று, நிறத்தைச் சொல்லுகிறது. ...

ஸ்வரூபத்திலே புகாதே குணத்திலே புகாதே (சாணூர ...) கனையிலே யழுந்தினளென்கிறாள். ஒருகாலனைத்துவிட்டா ... வடிவைக் ..., புஜபலத்தாலும், அவ்வடிவிலே யகப்பட்டாள். † ஸ்வரூபத்திலே ...கையாகக் ...ர்க்கு குணங்களிலேயிழியவேணும், உபயத்துக்கும் ப்ரகாசநமத்தின் விக்ரஹத்திலே யிழிந்தார்க்குப் புறம்புபோகவேண்டாவிறே. சொல்லி, ஒளாயிருப்பதும் வடிவே, ஆஸ்ரயணீயமாயிருப்பதும் வடிவுத், துவளாயமாயிருப்பதும் வடிவேயிறே. ... (கரு

(இதுசெய்தார்) (க) * தீராநோய்செய்தார். (இது) நீரோத்தாதுத் மோஹித்தானை வடிவிலே தெரியுமாபோலே நோய் இவள் சொல்லிவிலே தோற்றுகிறபடி. இந்நோய் பெரும்பேறென்னுமிடந்தோற்ற (இது) என்கிறாள். (உ) * தெய்வநன்னோயிறே. தெய்வமடியாகவந்த நோயாகையாலே விலக்ஷணமான நோயிறே. † நாட்டார் புருஷார்த்தமென்று ஸாதிக்கிற வித்தை நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே பெற்றவளன்றோ இவள். (ங) "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு-ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" இத்யாதியிற் சொல்லுகிறபடியே ஸாதநாந்தர நிஷ்டர்க்கு அநேகஜந்மஸாத்யையான பக்தி இவளுக்கு நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே ஸித்தித்ததிறே. † உபாஸகனுக்கு ஸாதநத்தினு

---

நாயகிகட்டுவிச்சி, இருவர்க்கும் நினைவொன்றென்னுமத்தை அருளிச்செய்கிறார் (எம்பெருமானித்யாதி.)

ஸ்வரூபகுணங்களிருக்க விக்ரஹத்திலே யிழிவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வரூபத்திலேயித்யாதி).

நோயென்று - பக்தியாய், அதுக்கு வைலக்ஷண்யமேதென்ன: அருளிச்செய்கிறார் (நாட்டாரித்யாதி). ப்ரபந்நர்க்கு பக்திவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (உபாஸகனுக்கித்யாதி).

---

(க) சிறியதிருமடல் - ... (ங)
(உ)

டைய மேலெல்லையாய் ப்ரபந்நனுக்கு ம[illegible]பத்தினுடைய முதலடியாயிறே பரமபக்தியிருப்பது.

(கடல்வண்ணரிதுசெய்தார் [illegible] இடிவைக்காட்டி ஒருவடிவைக்கொண்டார். (க) † "நஜீவேயம் [illegible] நஜீவேயம்க்ஷணமபி" என்கிற வடிவைக்காட்டி, (உ) [illegible] - ஊர்த்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே " என்கிற [illegible] வைக்கிடீர் கொண்டது. (காப்பாராரே) ரக்ஷகனல்லன் இவ[illegible] உங்கள் வேராலும் மந்த்ரத்தாலும் பரிஹரிக்கப்படுமோ [illegible] விஷயாந்தரங்களால் வந்தநோவு பகவத்விஷயத்தைக் [illegible] என்[illegible]ாக்கலாம், பகவத்விஷயமடியாக வந்தநோவுஸ்வரூப[illegible] [illegible]கயாலேயாவதாத்மபாவிஅநிவர்த்யமிறே.

(கடல்வ[illegible] [illegible]டுவிச் [illegible]செய்தார்காப்பாராரே) கடல்கொண்ட வஸ்துவைக் க[illegible] சவேண்டாவோ? (காப்பாராரோ) இவளால் பரிஹரிக்க[illegible] † உன்னால் பரிஹரிக்கப்போமோ? பிறரால் பரிஹரி[illegible]ராட்[illegible]மா? வேலியே பயிரையழித்தால் வேலிதான் நோக்குமி[illegible]னில்; [illegible]ழியப் பயிராலே நோக்கிக்கொள்ளப்போமோ?

[illegible]ஷத்வ[illegible]னி; ஸ்வாபதேசமாயிற்றது - நிர்ஹேதுகவிஷயீகாரம், [illegible]வின்[illegible] ப்ரேமாதிசயம், தத்கார்யமானவிரக்தி, ஆசார்யோப[illegible]கமாக ஜ்ஞாநஸித்தி ஆகிறவிவை ... ... (கக)

நெஞ்சுருகிக்கண்பனிப்பநிற்கும்சோரும்
நெடிதுயிர்க்குமுண்டறியாளுறக்கம்பேணாள்
நஞ்சரவில்துயிலமர்ந்தநம்பியென்னும்
வம்பார்பூம்வயலாலிமைந்தாவென்னும்
அஞ்சிறையபுட்கொடியேயாடும்பாடும்
அணியரங்கமாடுதுமோதோழீயென்னும்
என்சிறகின்கீழடங்காப்பெண்ணைப்பெற்றேன்
இருநிலத்தோர்பழிபடைத்தேன்ஏபாவமே. (கஉ)

---

வடிவுக்கு வடிவு ஸமமானால் துःகமேதென்ன; அருளிச்செய்கிறார் (நஜீவேயமித்யாதி)."ஊர்த்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே" என்னும்படியான தன் வடிவைக்காட்டிக் கிடீர் " நஜீவேயம்க்ஷணமபி " என்று வாய்புலத்தும்படியான இவள்வடிவைக்கொண்டதுஎன்றுவாக்யத்தைஅந்வயித்து யோஜிப்பது.

விஷயாந்தரப்ராவண்யத்தோபாதி இத்தைப்போக்க வொண்ணாதோ, (ஆர்-காப்பார்) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (விஷயாந்தரங்களாலித்யாதி).

(காப்பாரார்) என்று-கட்டுவிச்சி வார்த்தையாகையாலே தாயானவுன்னால் பரிஹரிக்கப் போமோவென்றபடி. ... ... ... (கக)

---

(க) ரா-ஸு-சுசு-கO. (உ) ரா - ஸு-ங அ-சுஎ.

* (பா) கரை யேற்றவேண்டாவோ.

எய்தல் செய்யவேண்டாதே, (க) "శరవర్షంవవర్ష హ - சரவர்ஷம் வவர்ஷஹ" என்றும், (உ) "சார்ங்கமுதைத்தசரமழை" என்றும், (ங) "வாளிமழைபொழிந்தசிலை" என்றும்-வில்லுத்தானே எய்யவற்றாய், சத்ருக்கள் படுகையாலே அவர்களுக்குத்தாபகரமுமாயிருக்கை.

(எய்வண்ணவெஞ்சிலை) ஒருகாபுருஷனெடுக்கிலும் அவனைப் புருஷோத்தமனாக்கவற்றாயிருக்கையும், புருஷோத்தமனுக் கல்லது எடுக்கவொண்ணாதிருக்கையும். ஜமதக்நிக்குப் பிறந்த பரசுராமனும் முள்பட புருஷோத்தமனையெடுக்கவேண்டிற்றிறே. (ச) "மழுவாளி சிலைவாங்கி" என்று பெருமாள் அவன்கையில்வில்லைவாங்கினவளவிலே புருஷோத்தமத்வம்போய் பழையருஷிபுத்ரனாய் சோகியாயிறே போகிறபோதுபோனவெளிவரவு. இத்தால் - எடுத்தெய்யுமவனுக்கு மநஸ்ஸஹகாரமும் வேண்டாவென்கிறது.

(எய்வண்ணவெஞ்சிலையே துணையா) அன்றியே, திவ்யாயுதங்களுக்கு ஆயுதகோடியிலும் ஆபரணகோடியிலும் இருபடைமெய்க்காட்டாகையாலே திருமகரக்குழையோபாதி திருவில்லும் ஆபரணமாகத் தரித்து வந்தாராகவுமாம். (ரு) "சிலையிலங்கு பொன்னாழித்திண்படை தண்டொண்சங்கம்" என்றும், (சு) "ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை யின்னாரென்றறியேன்" என்றும் - சேர்த்தி யழகிலே ஆழங்கால்பட்டு அறிவுகலங்கி ஈடுபட்டார்களிறே. (எ) "తత స్త్వవనతంచాపమాదాయాత్మభూషణమ్ - ததஸ்த்வவநதம்சாப மாதாயாத்மவிபூஷணம்" என்னக்கடவதிறே.

(எய்வண்ணவெஞ்சிலை) அன்றிக்கே, எய்யக்கடவதாய், (அ) "తతస్తుతంసంయతిచిత్రకార్ముకమ్ - ததஸ்துதம்ஸம்யதி சித்ரகார்முகம்" என்றும், (கூ) "எவ்வரிவெஞ்சிலை" என்றுஞ் சொல்லுகிறபடியே - நாநாவர்ணங்களாலே வரிவரியாகச் சித்ரிதமாய் தர்சநீயமாயிருக்கை.

(வெஞ்சிலை) கையும் வில்லுங்கண்டபோதே எதிரிகள் குடல் குழம்பும்படியா யிருக்கை. (வண்ணவெஞ்சிலை) கையும் வில்லுமாயிருக்கிற விருப்பைக்கண்டால் அநுகூலர் வாழும்படியாயும் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியாயுமிறே யிருப்பது. கையில் பிடித்த வில்லுந் தாமுமாயிருக்கிற வாண்பிள்ளைத்தனம் நீகாணப்பெற்றதில்லையென்கிறாள். வீரபத்நி அகப்படுவது வீரத்திலேயிறே.

(கo) "తందృష్ట్వా-தம்த்ருஷ்ட்வா" இத்யாதி. [తందృష్ట్వాశత్రుహన్తారంమహర్షీణాంసుఖావహమ్ । బభూవహృష్టావైదేహీభర్తారంపరి

(க) ரா-யு-கூச-கஅ. (உ) தி-பா-ச. (ங) தி-வாய்-ரு-கo-ச.
(ச) பெரு-திரு-கூ-கூ. (ரு) தி-மொ-அ-க-க. (சு) தி-மொ-கo-கo-கூ.
(எ) (அ) ரா-ஸு- (கூ) பெரு-திரு-கo-ங. (கo) ரா-ஆர-ங-ஙகூ.

ஷஸ்வஜே - தம்த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம்ஸுகாவஹம்।
பபூவஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம்பரிஷஸ்வஜே'' ராக்ஷஸவேட்டையாடின பெருமாளுடைய யுத்தாயாஸஸ்ரம பரிக்லிந்நமான திருமேனியிலே ராக்ஷஸசரவ்ராத வ்ரணரோப திவ்யௌஷதமான காடாலிங்கநத்தைப்பண்ணி பிராட்டி ஸத்தைபெற்றாளென்கிறது. [தம் - தம்] ராக்ஷஸபூயிஷ்ட்டமான தேசத்தில் உன்னைக்கொடுபோக அஞ்சுவேனென்றவரை. (தம்-தம்) (க) ''ஸ்த்ரியம்புருஷவிக்ரஹம்-ஸ்த்ரியம்புருஷவிக்ரஹம்'' என்று - பிராட்டியாலே ஆண்கள்முன்பாக ஏவுண்டவன்று தொடங்கி திருவுள்ளத்திலே கறுவியிருந்து பதினாலாயிரம் ராக்ஷஸரையும் ஆழிமூழையாகத்தறித்து ரக்தவெள்ளத்தேமிதக்கவிட்டுப் பிராட்டியைப்பிடித்துக்கொண்டு சேவகத்தை மூதலித்துக்காட்டியருளினவரை. [தம்- தம்] (உ) ''ஆதித்ய இவ தேஜஸ்வீ'' - ஆதித்ய இவதேஜஸ்வீ'' இத்யாதியாலே வீரப்பாட்டுக்குச் சிறுவிரல் முடக்கும்படி அவதீர்ணரானவரை. [தம்-தம்] படுக்கைத் தலையிலே விடுபூவிழுந்து திருமேனி சிவக்கும்படியான ஸௌகுமார்யத்தை யுடையவரை. [தம்- தம்] உகப்பாலே அடுத்துப்பார்க்கில் ராகமானதேஜஸ்ஸு கொலையும்படியான திருமேனியையுடையவரை. [தம்- தம்] வீரஸ்ரீபரிணயமான மணக்கோலத்தோடே தர்சநீயமான ஸௌகுமார்யாதிசயத்தையுடையவரை. [தம்- தம்] ருஷிகளுக்குப்பண்ணின ப்ரதிஜ்ஞை கடலோசையாகாதபடி அதுசெய்து தலைக்கட்டுகையாலே பூர்ணமநோரதரானவரை.

[சத்ருஹந்தாரம்-சத்ருஹந்தாரம்] ரத்நகசிதமான பொன்னரிமாலைபோலே சத்ருசரவ்ராத வ்ரணாங்கிதமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையராயுள்ளவரை. [த்ருஷ்ட்வா - த்ருஷ்ட்வா] ஆதபாபிபூதருடைய சீதளதடாகப்ரவேசம்போலே ராக்ஷஸசராக்ராபிபூதமான திருமேனியைத் தன்பூர்ணகடாக்ஷமாகிற ஹிமஜலத்தாலே வழியவார்த்து. ''சத்ருஹந்தாரம்-சத்ருஹந்தாரம்'' என்றது-ப்ரதிபக்ஷநிரஸநத்தால்வந்த புகருடைமை. ஸர்வபூதஸுஹ்ருத்தான ஸர்

(க) ரா - அ - ௩௰ - ௩.  (உ) ரா - அ.

வேஶ்வரனுக்கு ப்ரதிபக்ஷமுண்டோவென்னில்; (க) "జ్ఞానీత్వాత్మైవ - ஜ்ஞாநீத்வாத்மைவ" (உ) "మమ ప్రాణాహి - மமப்ராணாஹி" (ங) "பத்தர்" இத்யாதி ப்ரக்ரியையாலே ஆஶ்ரிதவிரோதிகளே தனக்கு விரோதிகளாமித்தனையிறே. [మహర్షీణాంసుఖావహమ్ - மஹர்ஷீணாம்ஸுகாவஹம்] யுத்தப்ராரம்பம்தொடங்கி, "కింభవిష్యతి - கிம்பவிஷ்யதி" என்று வயிறுபிடித்து து:கிதராயிருந்த மஹர்ஷிகளுடைய பயம்தீர சத்ருக்களைக் கட்டடங்கக்கொன்றுவிட்டு அவர்களுக்கு ஸுகாவஹராயுள்ளவனை. [మహర్షీణాంసుఖావహమ్ - மஹர்ஷீணாம்ஸுகாவஹம்] தம்முடைய போஷ்யகுடும்பத்துக்கு ஸுகத்தைப்பண்ணி, தம்முடைய ஸத்தைக்கு ஆபாதகமானவனை.

[బభూవ - பபூவ] மாலையும்மணமும்போலே அத்யந்த ஸுகுமாரமான விக்ரஹத்தையும் ஸ்வபாவத்தையுமுடையராயிருக்கிற பெருமாள், கடிநமான காத்ரங்களையும் ஸ்வபாவங்களையுமுடைய முரட்டு ராக்ஷஸரோடே யுத்தம்ப்ராரம்பித்தபோதே தொடங்கி ப்ரேமாதிசயத்தாலே ஸத்தைமாண்டுகிடந்த பிராட்டி, திருமேனியிலே ஒரு தீங்கின்றியிலே நின்ற பெருமாளைக்கண்டு ஸத்தைபெற்றுளென்கிறது. [హృష్టా - ஹ்ருஷ்டா] தர்மியுண்டானால் தர்மம் பிறக்கக்கடவதிறே. ராமஸௌந்தர்யத்தை முழுக்கக்கண்டு திருவுள்ளத்தில் பிறந்தகளிப்புப் புறவெள்ளமிட்டபடி. [వైదేహీ - வைதேஹீ] ஐயர் வயிற்றிலே பிறந்திலேனாகில் நமக்கிந்தப்பேறில்லையிறே. [వైదేహీ - வைதேஹீ] இக்குடியில் பிறந்திலேனாகில் பெருமாள் என்னைக்கைப்பிடியாரே. [వైదేహీ - வைதேஹீ] இந்நிலத்தில்பிறந்திலேனாகில் எனக்கு இவ்வில்லோட்டை ஸௌப்ராத்ரங்கிடையாதே; அவ்வில்லோட்டை ஸௌப்ராத்ரமில்லையாகில் வீர்யசுல்கமான விவாஹாகாரங்கூடாதே. [వైదేహీ - வைதேஹீ] தநுர்ப்பங்கமாத்ரத்திலே என்னையும் தம்முடைய வம்சத்தையும் பெருமாளுக் கடிமையாக வெழுதிக்கொடுத்த ஐயர், இற்றைநாளை ஆகாரங்கண்டால் என்படுகிறுரோ? [వైదేహీ - வைதேஹீ] (ச) "పుంసాందృష్టిచిత్తాపహారిణమ్ - பும்ஸாம்த்ருஷ்டி சித்

(க) கீதை-எ-கஅ.
(உ) பார-உ-
(ங)
(ச) ரா-அ.

தாபஹாரிணம்'' என்கிறபடியே-ஸர்வலோகாகர்ஷகமான இந்நிலையை ஐயனைபொழிய நான்காண்பதே! என்று பித்ருஸ்ம்ருதிபண்ணுகிறாள். [భర్తారమ్-பர்த்தாரம்] பாணிக்ரஹணவேளை தொடங்கி, பதித்வப்ரதிபத்தி பண்ணிப்போந்தேன், இப்போதிறே தாத்வர்த்தம் ஜீவித்தது. [పరిషస్వజే-பரிஷஸ்வஜே] [సస్వజే-ஸஸ்வஜே] ஆலிங்கநம் பண்ணினாள்; [పరిషస్వజే- பரிஷஸ்வஜே] பூர்ணமாகத் தழுவினாள். [పరిషస్వజే- பரிஷஸ்வஜே] பர்யாப்தமாகத்தழுவினாள். [పరిషస్వజే-பரிஷஸ்வஜே] திருமேனியில் தழும்புமாறுமளவும் தழுவினாள். [పరిషస్వజే-பரிஷஸ்வஜே] சரவ்ரணங்களால் வந்த தழும்புமாறுமளவும் திருமுலைத்தடத்தாலே வேதுகொண்டாள். தான் கைகண்டமருந்திறே - சரவ்ரணங்களுக்கு ஆலிங்கநம். ஔஷதமாமிடத்தில் * ஐந்துடனனுற்றுடன் வாசியில்லையிறே. அந்தரங்கன் உள்ளூறவெய்த புண்ணுக்கு மருந்தானவிது தோல்புரையே எய்த புண்ணுக்கும் மருந்தாகச்சொல்லவேணுமோ வென்றிருந்தாள். ஒருகொடியாகில் ஒருகொள்கொம்பைத் தழுவி யல்லது நில்லாதிறே. [పరిషస్వజే - பரிஷஸ்வஜே] நித்யஸம்யோகஸ்த்திதி ரூபமான பர்த்ருத்வாகாரம் ஒருகொள்கொம்புக்கு உண்டானால் ததாதாரமாகப் படர்ந்து அத்தைமூடி அக்கொள்கொம்பைச்சிறப்பித்துக் கொண்டா லல்லது கொடிக்கு ஸ்வரூப மில்லையிறே. [భర్తారంపరిషస్వజే-பர்த்தாரம் பரிஷஸ்வஜே] (க) ''భర్తారమవలమ్బ్యైవ భార్యాయాఃస్థితిరిష్యతే । అవలమ్బ్యద్రుమంవల్లీ త్వేధతేనవినాద్రుమమ్-பர்த்தாரமவலம்ப்யைவபார்யாயா ஸ்த்திதிரிஷ்யதே। அவலம்ப்யத்ருமம் வல்லீத் வேததே நவினாத்ருமம்'' என்னுமாபோலே.

''తమ్-தம்'' என்கிறபதம் பெருமாளுடைய ஸர்வாதாரத்வத்தைக் காட்டுகிறது. ''దృష్ట్వా-த்ருஷ்ட்வா'' என்கிற பதத்தாலே - பெருமாளுடைய ஆகாரங்களையெல்லாம் நேராகக் காணவல்லாள் பிராட்டியென்கிறது. ''శత్రుహన్తారంమహర్షీణాంసుఖావహమ్-சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம்'' என்கிறவற்றால்-தன்னோடு

---

* இங்குள்ள அசுத்தியைக் கோசாந்தரங்களால் பரிஷ்கரித்துக்கொள்க.
(க)

குடல்துடக்குண்டான சேதநர்க்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணினபோதல்லது அவரைக்காணக் கண்ணில்லையென்கிறது. “బభూవ-பபூவ” என்கிற வித்தால்-அவரைக்கண்டு ஸத்தைபெற்றாளென்கிறது. “హృష్టా-ஹ்ருஷ்டா” என்கிறபதத்தாலே-தர்மியுண்டானவாறே தர்மம் குடி-புகுந்ததென்கிறது. “వైదేహీ-வைதேஹீ” என்ற பதத்தாலே ஹேதுபூதர் பக்கல் உபகாரஸ்ம்ருதி சொல்லுகிறது. “భర్తారమ్-பர்த்தாரம்” என்று - (க) “పితుర్దశగుణంమాతా-பிதுர்த்தசகுணம்மாதா” என்று புத்ரரக்ஷணத்திலுகப்பாலே புருஷகாரத்வஞ் சொல்லுகிறது. “పరిషస్వజే-பரிஷஸ்வஜே” என்று - ஆஸ்ரிதரக்ஷணத்தால் வந்த உகப்புக்குப் போக்குவீடு ஆலிங்கநமாய் அதுதான் பரம்ப்ரயோஜநமென்கிறது. இத்தால் - வீரபத்நி அகப்பட்ட வீரக்கோலஞ் சொல்லிற்று. இப்படியே இவளும் கையும்வில்லுமாக வந்த ஆண்பிள்ளைத்தனத்தை நீகாணப்பெற்றில்லை காணென்கிறாள்.

(சிலையேதுணையா) இவ்விடத்தில் பிரிநிலையாலே (உ) “கொங்குண்வண்டேகரியாகிவந்தான்” என்னுமாபோலே போகத்துக்கு வருகிறவர் ஊரைத்திரட்டிக் கொண்டுவாராதே வில்லேதுணையாகக் குறியுடைமையோடே வந்தார்காண். (சிலையேதுணையா) ஆயுதச்சாலைபோலே சொட்டை, சுரிகை தொடக்கமான கருவிகளெல்லாம் கட்டிச்சுமவாதே வில்லொன்றையே கொண்டுவந்தார்காண். போகத்துக்கு வருகிறவர் ஸ்ரக்சந்தந தாம்பூலாதிகளான போகோபகரணங்களோடே வருமித்தனைபோக்கி வில்லுத்தானென்னென்னில்; பூர்வஸம்ஶ்லேஷத்துக்குத் தாய்மாராகிற விடறுகட்டைகளாலே சிலவிரோதம் பிறந்து இன்னும் அடிதொடங்கி ஹ்ருதயபரீக்ஷைபண்ணவேண்டுமாகையாலே, அதுவும் ஸ்வயம்தௌத்யத்திலே யிழிந்து, அதுக்கு அவகாசம் பாஹ்யோத்யாநத்திலே நானும் தோழிமாரும் பூக்கொய்கிற விடத்திலே தாமும் வேட்டைக்கென்று ஏகாந்தமாக வரவேண்டி அதுக்கு வில்லபேக்ஷிதமாகையாலே கொடுவந்தார்காண். அன்றியிலே, (சிலையேதுணையா) என்று - (௩) “வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தாய்” என்கிறபடியே தன்னையழியமாறி எங்களைச் சேர்த்தக்ருதஜ்ஞதையாலே கைவிடமாட்டாமல் கொடு

(க) (உ) தி-மொ-௯-௩-௪. (௩) க௫.

வந்தாராகவுமாம். அன்றியிலே, (சிலையே துணையா) என்று-என்பக்கல் வரும்போது - தண்ணீர்த்துரும்பான தாடகாநிரஸந பூர்வகமாக விஸ்வாமித்ராத்வரத்ராணம் பண்ணவேணுமென்று கொடுவந்தாராகவுமாம். அன்றியிலே, என்னைக் கைப்பிடித்துமீண்டுவரும்போது வழியிலே பரசுராமாதிகள் தோற்றினுருண்டாகிலும், (க)“కణ్టకేనై వకణ్టకమ్-கண்டகேநைவகண்டகம்” என்கிறபடியே ஒருவில்லை வாங்கவேண்டுகையாலே கொடுவந்தாராகவுமாம்.

அன்றிக்கே, (சிலையே துணையா) என்று - (உ) “ హతాన్యేకేన రామేణ మానుషేణపదాతినా । చతుర్దశసహస్రాణి రక్షసాంభీమకర్మణామ్ - ஹதாந்யேகேநராமேணமாநுஷேணபதாதிநா । சதுர்த்தசஸஹஸ்ராணிரக்ஷஸாம்பீமகர்மணாம்” என்று- பதினாலாயிரம் ராக்ஷஸரைத் தாமொருவருமே கொன்று வென்றிகொள்ளுகிற விடத்தில் தம்பியாரும் பிராட்டிக்குக் காவலாய்நிற்க அத்தனிவீரத்துக்குத்துணையாய்நின்று நிறுத்தறுத்துக்கொடுத்த தனிவில்லாகையாலே அத்தைக்கொடுவந்தாராகவுமாம். அன்றிக்கே, (சிலையே துணையா) என்று - (௩) “అవష్టభ్యచతిష్ఠన్తం దదర్శ ధనురూర్జితమ్-அவஷ்டப்யசதிஷ்ட்டந்தம்ததர்பதநுரூர்ஜிதம்” என்கிறபடியே - என்னைப்பிரிந்த தளர்த்திக்குத்தமக்கு ஊன்றுகோலாகக் கொடுவந்தாராகவுமாம். அன்றிக்கே, (சிலையே துணையா) என்று (௪)*வன்துணைவானவர்க்காய் வரஞ்செற்றரங்கத்துறையுமின்துணைவனுக்கும் ஒருதுணையுண்டாயிற்றுக்காண். அன்றிக்கே, (சிலையே துணையா) என்று - இது இப்படி துணைப்படுகைக்குக் காரணம் ப்ராவண்யமும் குணவத்தையுமிறே, மற்றுள்ளவற்றிற் காட்டில் ஏற்றம் வில்லுக்கென்கிருளாகவுமாம். அன்றிக்கே, குணவிசிஷ்டவஸ்துவுக்கு குணவிசிஷ்ட வஸ்துவிறே துணையாயிருப்பதென்கிருளாகவுமாம்.

இவர்க்கு அது துணைப்பட்ட தெங்கேயென்னில்; (இங்கே) நான் நிதியெடுத்தவிட மிங்கேகாண். (இங்கே) பறிகொடுத்தவிடந் தன்னிலே காணப்பெற்றேன். (இங்கே) கலந்துபிரிந்தபின்பும்

---

(க)
(உ) ரா-ஆ-
(௩) ரா-கி-கக-உடு.
(௪) தி-மொ-௩-எ-௬.

மண்ணேமோந்துகொடு கிடக்கலாம்படி காண், (க) "ஒருகாலில் சங்கொருகாலில் சக்கரம்" என்றும், (உ) "శఙ్ఖరథాఙ్గకల్పకధ్వజారవిన్దాఙ్కుశవజ్రలాఞ్ఛనమ్ - சங்கரதாங்ககல்பகத்வஜாரவிந்தாங்குசவஜ்ர லாஞ்சநம்" என்றுஞ்சொல்லுகிறபடியே - இலச்சினைபட நடந்த வடிச்சுவடிருந்தபடி. அன்றிக்கே, (இங்கே) என்று - திருமணங்கொல்லையைக் காட்டுகிருள்.

(இங்கே) (ங) "అస్మిన్మయాసార్ధముదారశీలా-அஸ்மிந்மயாஸார்த்தமுதாரசீலா" என்று பெருமாள் தாமருளிச்செய்தாற்போலே சொல்லுகிருள். (இங்கே) (ச) "ఏతత్తదిఙ్గుదీమూలమిదమేవచతత్తృణమ్। యస్మిన్రామశ్చసీతాచరాత్రింతాంశయితావుభౌ- ஏதத்ததிங்குதீமூல மிதமேவசதத்த்ருணம் । யஸ்மிந்ராமஸ்சஸீதாச ராத்ரிம்தாம்ஸயிதாவுபௌ" என்கிறபடியே - நானு மவனுமிருந்து போது போக்கினவிடமிதுகாண். (இங்கே) ஒருபரமபதமல்ல, க்ஷீராப்தியல்ல, அயோத்யா மதுரைகளல்ல, கோயில் திருமலையல்ல, இவ்விடம் பண்ணின பாக்யங்காண். (ரு) "అస్మత్త్యక్తాని వేశ్మాని కైకేయీ ప్రతిపద్యతామ్ - அஸ்மத்த்யக்தாநி வேஸ்மாநி கைகேயீப்ரதிபத்யதாம்" என்று பிறந்து படைத்து ஆண்ட படைவீட்டையும் மாளிகையையும் கைகேயிக்கும் மகனுக்குங் கொடுத்தாற்போலே யன்றிக்கே, (சா) "సుభగశ్చిత్రకూటోసౌ గిరిరాజోపమోగిరిః - ஸுபகஸ்சித்ரகூடோஸௌ கிரிராஜோபமோகிரிஃ" என்று-பெருமாளும் பிராட்டியும் கூடியிருந்த திருச்சித்ரகூடம்போலே இவ்விடம் பண்ணின பேறுகாண்.

இவ்விடத்தில் அவர்செய்த தென்னென்ன, (வந்தார்) இவ்விடங், கைவிட்டுப்போகையன்றிக்கே உத்தேஸ்யபூமியாக வந்தார்காண். (வந்தார்) வருகிருரென்று எழுச்சிகொட்டாதிருக்க நினைவின்றியிலே வந்துகொடுநின்ருர்காண். (வந்தார்) (எ) "కుశస్థలే నివసతి స చ ప్రాతరిహేష్యతి - குசஸ்த்தலேநிவஸதி ஸசப்ராதரிஹேஷ்யதி" என்று வரக்கடவரென்றிருக்கையன்றிக்கே வந்துகொடுநின்

(க) பெரி-திரு-க-அ-கூ. (ங) ரா-ஆ-கூங-கஉ. (ரு) ரா-அ- (எ) ரா-யு-
(உ) ஸ்தோ-ர-ஙக. (ச) ரா-அ- (சா) ரா-அ-கூகக-கஉ.

ரூர்காண். (வந்தார்) (க) "வரவாறென்றில்லையால் வாழ்வினிதால்'' என்றும், (உ) "நடுவேவந்துய்யக்கொள்கின்ற நாதன்'' என்றுஞ் சொல்லுகிறபடியே இதுக்கடியாயிருப்பதொரு ப்ரவ்ருத்தி என்கையிலின்றிக்கேயிருக்க இப்படிபலித்துக்கொடு நிற்கக்கண்டேன். (வந்தார்) போக்குவரத்துக்கள் பொதுவா யிருக்கையன்றிக்கே, (ங) "இனிநான்போகலொட்டேன்'' என்றும், (ச) "திருவாணை நின்னாணைகண்டாய்'' என்றும் - தடுத்தும் வளைத்துங்கொள்ளலாம்படி கைபுகுந்தார்காண்.

இப்படி வருகிறவர் உன்னுடனே கலந்துமகிழ்ந்துபோகிறவன்றைக்கும் பிரிந்துகலங்கிவருகிறவன்றைக்கும் வாசியுண்டோவென்ன ; (இருவராய்வந்தார்) உருவிரண்டுமேனியாய் வந்தார்காண். (இருவராய்வந்தார்) முன்பு என்னுடனே கலந்துபோகிறவன்று (டு) "புனையிழைகளணிவுமாடையுடையும் புதுக்கணிப்பும் நினையும் நீர்மையதன்று'' என்றும், உருவியிருக்கிறபோது, (சு) "உண்ணாதுறங்காதொலிகடலை யூடறுத்துப் பெண்ணுக்கையாப்புண்டு'' என்றும், (எ) "ನಮಾಂಸಂರಾಘವೋ ಭುಙ್ಕ್ತೇ ನಚಾಪಿಮಧುಸೇವತೇ- நமாம்ஸம்ராகவோபுங்க்தே நசாபிமதுஸேவதே'' என்றும், (அ) "ನೈವದಂಶಾನ್ ನಮಶಕಾನ್ ನಕೀಟಾನ್ ನಸರೀಸೃಪಾನ್- நைவதம்சாந்மசகாந்நகீடாந்நஸரீஸ்ருபாந்'' என்றுஞ் சொல்லுகிறபடியே - ஆஹாரநித்ரைகளையுந்துறந்து ஊர்ந்தனவும் கடித்தனவுமறியாதே பிரிவாற்றாமல் மெலிந்திருக்கிற விருப்புப்பேசுமளவல்லகாண்.

(இருவராய்வந்தார்) என்று - சரீரம் இருதுண்டமாயாதல், இருபிளவாயாதல் வந்தாரென்கிறதல்ல, ஏகக்ஷணத்திலேஉத்பத்திவிநாசமாய் வைவித்த்யம் கூடுகிறதல்ல, (சிலையேதுணையா) என்று - போகைகாந்தமாகத் தனியேவருகிறவராகையாலே கூடச்சிலரைக்கொண்டுவந்தாரென்னக்கூடாது, ஜநககந்யாக்ரஹணம்போலே கந்நிகைகள் பலருண்டாய்த் தமயன்தம்பி வேட்கவருகிறாரல்ல; இனி இருவராய் வருகையாவது - ஒருவன்தானே இரண்டாகாரத்தை யுடையனாய் வருகை. அதாவது - சோகஹர்ஷங்களையுடையராய் வருகை. (கூ) "ಸತ್ಯಂಜ್ಞಾನಮನನ್ತಂಬ್ರಹ್ಮ-ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ர

(க) பெரியதிருவ-ரு௯.
(உ) தி-வாய்-க-எ-டு.
(ங) தி-வாய்-௧௦-௧௦-க.
(ச) தி-வாய்-௧௦-௧௦-உ.
(டு) தி-வாய்-அ-கூ-ங.
(சு) நா-தி-கக-எ.
(எ) ரா-ஸு-ருசு-சக.
(அ) ரா-ஸு-ருசு-சஉ.
(கூ) தை-ஆந-க.

ஹ்ம" என்று - விசேஷ்யமானப்ரஹ்மம் ஒன்ருயிருக்க பேதகம் விசேஷணம், பேத்யம் விசேஷ்யமென்று விசேஷணபேதாயத்த விசேஷ்யபேதத்தை அங்கீகரித்திறே - (க) "భిన్నప్రవృత్తినిమిత్తానాం శబ్దానామేకస్మిన్నర్థే వృత్తిస్సామానాధికరణ్యమ్- பிந்நப்ரவ்ருத்திநிமித்தாநாம் சப்தாநாமேகஸ்மிந்நர்த்தே வ்ருத்திஸ்ஸாமாநாதிகரண்யம்" என்று வ்யாகரணுதிகள் சொல்லிற்று. அவ்வாகாரபேதங்கள்தான்பல.

அவையாவன - (இருவராய்வந்தார்) அவயவசோபையோடும் ஆபரணசோபையோடும் வந்தார். மைவண்ண நறுங்குஞ்சி - அவயவசோபை; மகரம்சேர்குழை - ஆபரணசோபை. (இருவராய்வந்தார்) வீரஶ்ருங்காரங்களிரண்டுந் தோற்றவந்தார். சிலையேதுணையா வந்தது - வீரம். (உ) "రామే ప్రమాదం మా కార్షీః పుత్ర భ్రాతరి గచ్ఛతి- ராமேப்ரமாதம்மாகார்ஷீ: புத்ரப்ராதரிகச்சதி" என்றும், (ங) "మత్తమాతఙ్గగామినమ్- மத்தமாதங்ககாமிநம்" என்றும், என்முன்னே நடந்தாரென்றது - ஶ்ருங்காரம். (இருவராய்வந்தார்) ப்ரணயித்வ தைர்யங்களிரண்டுந் தோற்றும்படி வந்தார். (என்முன்னே) என்றது - ப்ரணயித்வம்; (நின்ருர்) என்றது - தைர்யம். (இருவராய்வந்தார்) விநயதௌத்யங்க ளிரண்டுந் தோற்றும்படிவந்தார். "கைவண்ணந்தாமரைவாய்கமலம்" என்னும்படி யிருந்தது விநயம். "கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே" என்று - தூதுசெய்கண்கள் கொண்டுபண்ணின வ்யாபாரமும் நாலடிபுகுரநின்றதும் தௌத்யம். (இருவராய்வந்தார்) இரண்டு நினைவோடேவந்தார். அதாவது - பெறில் உஜ்ஜீவிக்கையும் பெருவிடில் முடிகையும். (இருவராய்வந்தார்) பரத்வஸௌலப்யங்களிரண்டுந்தோற்றும்படி வந்தார். "அவ்வண்ணத்தவர்நிலைமை" என்றது-ஸௌலப்யம்; "அவரை நாம்தேவர்" என்றது-பரத்வம். (இருவராய்வந்தார்) (ச) "మానుషే దేవరూపిణౌ-மாநுஷௌதேவரூபிணௌ" என்கிறபடியே திவ்யமாநுஷபாவமிரண்டும்தோற்றும்படிவந்தார். "சிலையேதுணையா" என்று-மநுஷ்யர்க்குச் சேர்ந்த வில்லாலே மாநுஷபாவம். "கண்ணிணையுமரவிந்தம்" என்கையாலே-(ரு) "యథా కప్యాసం పుణ్డరీకమేవమక్షిణీ- யதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ" என்று புண்டரீகாக்ஷத்வத்தாலே திவ்யபாவம். (இருவராய்வந்தார்) தூதருமாய் நாயகருமாய்

(க) (ங) ரா-அ-ங-உஅ. (ரு) சாந்தோ-க.கூ-எ.
(உ) ரா-அ-சo-ரு. (ச)

வந்தார். ஸ்வயம்தௌத்யமாகையாலே தூதத்வம், வடிவின் போக்யதையாலே நாயகத்வம். (இருவராய்வந்தார்) (க) "யத்ருச்சயைவ ஸம்ப்ராப்தௌ சந்த்ரஸூர்யாவஸுந்தராம்- யத்ருச்சயேவ ஸம்ப்ராப்தௌ சந்த்ரஸூர்யௌவஸுந்தராம்" என்றும், (உ) "ஆதித்ய இவ தேஜஸ்வீ- ஆதித்யஇவதேஜஸ்வீ" என்றும், (ங) "லோககாந்தஸ்ஸசீயதா- லோககாந்தஸ்ஸசீயதா" என்றுஞ் சொல்லுகிறபடியே-சந்த்ரன்வந்தானோ, ஆதித்யன்வந்தானோவென்று சங்கிக்கவேண்டும்படி வந்தார். (ச) * மணிமகரகுண்டலங்கள் வில்வீசுகையாலே ஆதித்யசங்கை; (ரு) "குழலழகர்" என்று சொல்லுகையாலே சந்த்ரசங்கை. (இருவராய்வந்தார்) (சு) "காங்கதாவிவதிவஃபுநர்வஸூ- காம்கதாவிவதிவஃ புநர்வஸூ" என்கிறபடியே புநர்வஸு நக்ஷத்ரமிரண்டும் சேர பூகதமானாற்போலே வந்தார். (எ) "தீப்தேநஸ்வேந தேஜஸா- தீப்தேநஸ்வேநதேஜஸா" என்கிற சுடருடைமை காரணம்.

(இருவராய்வந்தார்) (அ) "கஜஸிம்ஹகதீவீரௌ- கஜஸிம்ஹகதீவீரௌ" என்கிறபடியே, வருகிறபோதை நடையழகிருந்தபடி, ஆனை பிசகிநடந்ததோ, ஸிம்ஹம் மதியாமே நடந்ததோ வென்னும்படி வந்தார். அன்றியிலே, (அ) "சார்தூலவ்ருஷபோபமௌ-சார்தூலவ்ருஷபோபமௌ" என்கிறபடியே புலி அரட்டோடே நடந்ததோ, வ்ருஷபம் செருக்கோடே நடந்ததோவென்னும்படி வந்தாரென்றுமாம். (இருவராய்வந்தார்) உபாயம் தாமாயும் உபேயம் தாமாயும் வந்தார். ம்ருகயாவ்யாஜத்தாலே வந்தது - உபாயம். "அவ்வண்ணத் தவர்நிலைமை" என்னும்படியான போக்யத்வம் - உபேயம்.

(இருவராய்வந்தார்) ஸ்வரூபத்தாலே ஸ்வதந்த்ரராயும் குணத்தாலே பரதந்த்ரராயும் வந்தார். (கூ) "ஆநீதவாதம்ஸ்வதயாததேகம்-ஆநீதவாதம் ஸ்வதயாததேகம்" என்றும், (கo) "ஶ்ரத்தயா தேவோ தேவத்வமஶ்நுதே-ஶ்ரத்தயாதேவோ தேவத்வமஶ்நுதே" என்றும்,

---

(க)
(உ) ரா-ஸு-ரு௪-உஅ.
(ங) ரா-ஸு-ரு௪-உஅ.
(ச) பெரியதிருமடல்-க-
(ரு) நா-தி-கக-உ.
(சு)
(எ) ரா-
(அ) ரா-
(கூ) யஜு-
(கo) யஜு-கா-ரு-கo.

(க) "నత్వహంత్వాంవినాసీతేజీవేయంహికథఞ్చన - நத்வஹம்த்வாம் விநாஸீதே ஜீவேயம்ஹிகதம்சந" என்றும், (உ) "நாரணனே நீயெ ன்னையன்றியிலை" என்றும், (ங) "అస్యాదేవ్యామనస్తస్మిం తస్యచాస్యాంప్రతిష్ఠితమ్। తేనేయంసచధర్మాత్మాముహూర్తమపిజీవతి-அஸ்யாதே வ்யாமநஸ்தஸ்மிந்தஸ்யசா ஸ்யாம்ப்ரதிஷ்ட்டிதம் । தேநேயம்ஸசதர் மாத்மாமுஹூர்த்தமபிஜீவதி" என்றும், (ச) "నచసీతాత్వయాహీనా- நசஸீதாத்வயாஹீநா" என்றும்,(உ) "நானுன்னையன்றியிலேன் கண் டாய் நாரணனே" என்றுஞ் சொல்லுகிறபடியே - நானுண்டாகில் தாமுண்டாய், நான் இல்லையாகில் தாமில்லையாம்படியும், தாமுண் டாகில் நானுண்டாய் தாமில்லையாகில் நானில்லையாம்படியுமான வாகாரத்வயத்தோடும் வந்தார்.

அன்றிக்கே, (இருவராய்வந்தார்) என்று - இளையபெருமாளும் தாமுமாகவந்தாரென்றுமாம். "சிலையே துணையா" என்றுவைத்து இளையபெருமாளோடே வந்தாரென்கை சேருமோவென்னில்; கை யில்வில்லோபாதி இளையபெருமாளும் நிரூபகபூதரா யிருக்கிறது. (ரு) "రామస్యదక్షిణోబాహుః- ராமஸ்யதக்ஷிணோபாஹு:" என்ன க்கடவதிறே. ஆனால் (இருவராய்) என்று பிரியச்சொல்லுவானெ ன்னென்னில்; அணைக்குந்தோளோடே வந்தானென்னுங் காட்டில் பிரியச்சொல்லிற்றாகாதிறே. ஸம்ஶ்லேஷிக்க வருமவன் படுக்கை யுடனே வருகை மிகையல்லவிறே.

(இருவராய்வந்தார்) சேஷியாய்வந்தாரல்லர், சேஷபூதராய்வந் தாரல்லர், உபயாகாரத்தோடே வந்தாரென்னவுமாம். தம்முடைய காலை என்தலையிலேவைக்கிறேனென்றுவந்து என்னுடையகாலைத் தம்முடையதலையிலே வைத்துக்கொண்டா ரென்கிறாள். பாணிக்ர ஹணம்பண்ணும்போது சேஷியாயிருக்கையும் படுக்கைத்தலையிலே வந்தவாறே முறைகெடப் பரிமாறுகையுமாயிறேயிருப்பது. வகுத்த ஸ்வாமியாகவும்வேணும், (சு) *నశాస్త్రంనైవచక్రమః- நஶாஸ்த்ரம் நைவசக்ரம: ஆகவும் வேணுமிறே. அன்றிக்கே, நரநாராயணர்கள்

---

(க)
(உ) ச-திரு-எ.
(ங) ரா-ஸு-கரு-ருஉ.
(ச) ரா-அ-ருங-ஙக.
(ரு) ரா-யு-உஅ-உரு.
(சு)

போலே வந்தாரொன்னவுமாம். அதவா, சப்தத்தை நியமித்து, இருவராம்படி வந்தாரொன்னவுமாம். இத்தால் - நானும் தாமுமே யாம்படி வருகையென்கை. (வந்தார்) தாமிருந்தவிடத்தே நான்மடலெடுத்துச் சென்று கிட்டவேண்டியிருக்க, நானிருந்தவிடத்தே காண் தாம்வந்தாரொன்கிறுள். அன்றியே, நாலடியிலும்வர நடந்த நடையை நீ காணப்பெற்றில்லையென்கிறுளாகவுமாம். நடைச்சக்ரவத்துப் பிடிக்கவேண்டும்படிகாண் அவர்நடந்த நடையழகிருந்தபடி.

இப்படி இவர்வந்து செய்த தென்னென்ன; (என்முன்னே நின்ருர்) பெரியத்வரையோடே வந்தவர், கடல்கண்டு தேங்கின திருவடியைப்போலே என்னைக்கண்டு மேலிடமாட்டாதே தேங்கியென் முன்னேநின்ருர். அன்றியே, "தாம் முகம்பார்ப்பதெப்போதோ" என்று நான் நிற்கப்ராப்தமாயிருக்க "இவள் நம்மை நேரோ முகம்பார்க்கவல்லளோ"என்று பாரித்துக்கொண்டு நின்ருர்காணென்கிறுள். (என்முன்னேநின்ருர்) மாஸோபவாஸிகளுக்குப் பால்குழம்பு கொடுப்பாரைப்போலே காணவேணுமென்கிற வென்னுடைய ஆசாநுரூபமாக அநுபவிக்கும்படி முன்னே வந்துநின்ருர்காண்.

(என்முன்னேநின்ருர்) (க) "తస్మిన్ దృష్టే పరావరే। భిద్యతే హృదయగ్రంథిః - தஸ்மிந்த்ருஷ்டேபராவரே - பித்யதேஹ்ருதயக்ரந்தி:" என்றும்,(உ)"దృష్ట ఏవ హి నశ్శోకం అపనేష్యతి రాఘవః-த்ருஷ்டஏவஹி நஶ்ஶோக மபநேஷ்யதிராகவ:" என்றும், (ங) "அழைப்பன் திருவேங்கடத்தானைக்காண" என்றும் ஆசைப்பட்ட வென்னபிநிவேசம் தீருமளவும் என்முன்னேநின்ருர்காண். (என்முன்னேநின்ருர்) தேக்கிட்டார்க்குச் சோறிடுகையன்றிக்கே பசித்தார்க்கிடுமாபோலே தர்சநமாத்ரத்தை யுகந்தவென்னுடைய அபிநிவேசம் தீரும்படி என்முன்னே நின்ருர்காண். (என்முன்னே நின்ருர்) ஆருடையமுன்னே நிற்கத்தக்கவர் என்முன்னேநின்ருர். (ச) "సదా పశ్యన్తి సూరయః-ஸதாபஶ்யந்திஸூரய:" என்று த்ரிபாத்விபூதியாக வநுபவிக்கிறவநுபவத்தை நானொருத்தியுமேயநுபவிக்கும்படி ஸர்வஸ்வதாநம்பண்ணிஞர். (என்முன்னே நின்ருர்) (ரு) "న సన్దృశే తిష్ఠతి రూపమస్య న చక్షుషా పశ్యతి కశ్చనైనమ్ - நஸந்த்ருசேதிஷ்ட்டதிரூபமஸ்ய

---

(க) முண்ட-உ-உ.. (ங) ச - திரு - ௩௧.
(உ) ரா - ஸு -  (ச) ருக்வே - (ரு) நாரா-௧.

நசக்ஷுஷா பஶ்யதிகஶ்சநைநம்" என்றுதொடங்கி, § (நீவி) என்று மாம்ஸசக்ஷுஸ்ஸுக்களுக்கு விஷயமல்லாததம்மைக்கிடீர் என்கண்ணுக்கிலக்காக்கிற்று. (என்முன்னேநின்றார்) (௧) "శ్రుతి స్మృతీమను ష్యాణాంచక్షుషీ తేననిర్మితే । ఏకేనహీనఃకాణస్స్యాత్ ద్వాభ్యామన్ధః ప్రకీర్తితః - ஶ்ருதிஸ்ம்ருதீமநுஷ்யாணாம் சக்ஷுஷீதேநநிர்மிதே। ஏகேநஹீநஃகாணஸ்ஸ்யாத் த்வாப்யாமந்தஃப்ரகீர்த்திதஃ" என்று இரண்டுகண்ணுமில்லாதவெனக்குக் கிடீர், (௨) "దివ్యందదామితేచక్షుః పశ్యమేయోగమైశ్వరమ్-திவ்யம்ததாமிதேசக்ஷுஃபஶ்யமேயோகமைஶ்வரம்" என்று - கண்ணையும் காட்சியையுந் தருகிறது. (என்முன்னேநின்றார்) மந்தாக்நிகளுக்குச் சோறிடுவாரைப்போலே தம்முடைய தரமறியாதவென்முன்னேகிடீர் கால்வாங்கமாட்டாதே நின்றது. (என்முன்னேநின்றார்) என்னுடைய ஸ்வரூபத்தைப் பார்த்தால் தம்முடையமுன்னே நான்கைக்கட்டிக்கொண்டுநிற்க ப்ராப்தமாயிருக்க ப்ரணயித்வத்தாலே தாம் என்முன்னே கைக்கட்டிக்கொண்டுநின்றார்.

(என்முன்னே நின்றார்) தாம் என்னை இத்தனைபோது படுத்தின சிறுமையாலே வெட்டித்து உபேக்ஷித்திருக்கிறேனே, அன்றிக்கே, இவ்வளவிலே நான்வந்து உதவினத்திலே யுகந்தணைக்கிறேனேவென்று அளவிடமாட்டாதே அவர் நின்ற நிலைகாண். (என்முன்னேநின்றார்) (௩) "அவனை நான்செய்வனகாணே" என்றும், (௪) "இன்னமென் கையகத்தீங்கொருநாள் வருதியேலென்சினந்தீர்வன் நானே" என்றும் - நான் அவர்பக்கல் கோலிவைத்த பாரிப்பெல்லாமதிர்ந்துவைத்து அவர் என்முன்னேநின்ற ஸாஹஸங்காண். அன்றியிலே, (என்முன்னே நின்றார்) நான்தானே கண்டிரங்கும்படி என்முன்னே நின்ற தைந்யங் காண் என்றுமாம். (நின்றார்) ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டையாக நின்றானென்னுதல், கந்தவ்யபூமிவேறில்லாமையாலே நின்றானென்னுதல்.

இப்படி இரங்கும்படி அவர் அங்குவர்த்தித்தவளவில் மேல் செய்ததென்னென்னில்; என்ஹ்ருதயத்தைக் கூட்டிக்கொள்ளுகையாலே ஸ்வயம்தௌத்யத்திலேயிழிந்திருந்து "போகபிக்ஷயிட

(௧)	(௨) கீதை-௧௧-அ.
(௩) நா-தி-டு-அ.	(௪) பெரு-திரு-௬-அ.
§ இப்பிழையைக் கோசாந்தரங்களினால் திருத்திக்கொள்க.

வேணும்'' என்று கையேற்றார், அப்போது கையிருந்தபடி. (கைவண்ணந்தாமரை) மேலிருந்தகிறந்தே அகப்பட்டேனித்தனையோக்கி அகவாயிலிழிய வேண்டிற்றில்லை, அவர்கையிலே யகப்பட்டேன் காண். (கைவண்ணந் தாமரை) (க) "రక్తాస్యనేత్రపాణిపాదః-ரக்தாஸ்யநேத்ரபாணிபாதஃ'' என்றும், (உ) "செய்யகை'' என்றுஞ் சொல்லுகிறபடியே - ஸாமுத்ரிகலக்ஷணத்தையுடைத்தான கையில் சிவப்பிலே அநுரக்தையானேன். (கைவண்ணந்தாமரை) வண்ணமென்று - நிறம். அன்றியே, ப்ரகாரமாய் ஆகாரஸாம்யத்தைச் சொல்லிற்றாகவுமாம். அல்லிபோலே உள்ளங்கையும், இதழ்கள்போலே விரல்களும் தாதுபோலே ரேகைகளும் விலக்ஷணமான கந்தமும் ம்ருதுவான ஸ்பர்சமும் புறவிதழ்போலே ஶ்யாமமான புறங்கையில் பசுமையும் ஏவமாதியானலக்ஷணங்களை யுடைத்தாயிருக்கை. (கைவண்ணந்தாமரை) (ங) "సకలఫలప్రదో హి విష్ణుః-ஸகலபலப்ரதோஹிவிஷ்ணுஃ'' என்றும், (ச) "அலம்புரிந்தநெடுந்தடக்கை'' என்றும் திருக்கை ஸகலபலங்களையுங்கொடுக்கும்படிபோலே யிருக்கும்.

பின்பு செய்த தென்னென்னில்; "போகபிக்ஷை'' என்று கையைக் குவித்தார், ததநந்தரம் நான் விரோதவசநம் பண்ணாதே யிருந்ததுகொண்டு, (ரு) "అప్రతిషిద్ధమనుమతం భవతి-அப்ரதிஷித்தமநுமதம்பவதி'' என்றுபேசாதே யிருந்தது பாதியிசைவாகக்கொண்டு, (சூ) "అయం స తే తిష్ఠతి సఙ్గమోత్సుకః-அயம்ஸதேதிஷ்ட்டதிஸங்கமோத்ஸுகஃ'' என்றும் (எ) "స్వపసిమయాసుతను-ஸ்வபஸிமயாஸுதநு'' என்றும் சிலவபேக்ஷோக்திகளைப்பண்ணினார். (வாய்கமலம்போலும்) அப்போது செவ்விபெற மலர்ந்தாற்போலே அவ்வதரஸ்ப்புரணமிருந்தபடிகாண்.

அதுக்கு நானொரு ப்ரத்யாக்யாநம்பண்ணாமையாலே அதுக்கு மேலேயொரு அபூர்வமாக (அ)* தூதுசெய் கண்களாலே சிலசேஷ்டைகளைப் பண்ணினார். (கண்ணிணையுமரவிந்தம்) அந்தக்கண்கள் தானும் அவையாயிருந்தது. (கைவண்ணம்) என்று ஒருகையைச் சொ

(க)
(உ) தி-வாய்-சூ-க-எ.
(ங)
(ச) சு -
(ரு)
(சூ)
(எ)
(அ) தி-வாய்-கூ-கூ-கூ.

ன்னுர், (வாய்கமலம்) என்று ஒருவாயைச்சொன்னுர், (கண்ணிணை) என்று இரண்டுகண்களையுஞ் சொல்லுவானென்னென்னில்; கைகள் தனித்தனியே ஸ்வதந்த்ரகரணம், கண்ணிரண்டுங் கூட ஏகஸாமக்ரியா யாயிற்றிருப்பது, ஆகையாலே சொல்லுகிறது.

அபாங்கங்களாலே சிலஸங்கேதங்களைப் பண்ணினவிடத்தில் நான் இசைந்திருந்தபடியாலே நாலடிபுகுரகின்ருர்; (அடியுமஃதே) நிலத்தாமரை மலர்ந்தாற்போலே அத்திருவடியிருந்தபடி காண்.

அன்றியிலே, விவாஹஸமாதியாலே சிலஶ்ருங்காரசேஷ்டைகளைப்பண்ணி, (க) "గృహీత్వాకరపద్మాభ్యాం సీతాయాఃపాదపఙ్కజమ్ । అశ్మన్యారోపయామాస-க்ருஹீத்வாகரபத்மாப்யாம் ஸீதாயாः பாதபங்கஜம் । அஶ்மந்யாரோபயாமாஸ" என்றும், (உ) "செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி யம்மிமிதிக்க" என்றும் சொல்லுகிறபடியே - என்காலைப்பிடிப்பதாகச் சில அபிநயங்களைப் பண்ணினுர். (கைவண்ணந்தாமரை) அப்போது கடினமானகல்லை மிதியாமே ம்ருதுவான கைத்தாமரை யிருந்தபடிகாண். அநந்தரம், (ங) "ఆతిష్ఠేమమశ్మానమ్-ஆதிஷ்ட்டேமமஶ்மாநம்" என்று அவ்வநுஷ்ட்டாநப்ரகாசகமான மந்த்ரத்தை உச்சரித்தபோது, (வாய்கமலம்போலும்) (ச) "இவர்வாயில் நல்வேதமோதும் வேதியர்" என்னும்படி மதுகரஜ(ঝ)ங்கார முகரிதமான தாமரை மலர்ந்தாற்போலேயிருந்தது காண். அநந்தரமாக, (ரு) "ఇమాంసమేతపశ్యత-இமாம் ஸமேதபஶ்யத" என்கிற மந்த்ரத்தாலே என்னைக்காலேதொடங்கி சரியகுழலளவும் பார்த்தார்; அப்போது, (கண்ணிணையுமரவிந்தம்) திருக்கண்களும் தாமரைபோலே யிருந்தது காண். ததநந்தரமாக, (சு) "సఖాసప్తపదాభవ - ஸகாஸப்தபதாபவ" என்றும், (எ) "తుభ్యమగ్నేపర్యవహన్ కుర్యాంవహతునాసహ - துப்யமக்நேபர்யவஹந்குர்யாம்வஹதுநாஸஹ" என்றும், (அ) "தீவலஞ்செய்ய" என்றுஞ் சொல்லுகிறபடியே அக்நியை ப்ரதக்ஷிணமாக வருவதாக நடந்தார், என்கையைப்பிடித்துக்கொண்டு முன்னே நடக்கிறபோது மாறி மாறியிட்ட திருவடிகளும் அத்தாமரைப்பூத்தாணுயிருந்தது காண்.

(க) ரா - பா -
(உ) நா - தி - சக - அ.
(ங)
(ச) தி - மொ - கூ - உ - க.
(ரு) யஜு -
(சு)
(எ)
(அ) நா - தி - கூ - எ.

அன்றிக்கே, (க) "త్వామయమా బద్ధాఞ్జలిర్దాసజనః - த்வாமய மாபத்தாஞ்சலிர் தாஸஜநः" என்று அஞ்சலியைப் பண்ணுவது, (உ) "అఙ్కే నిధాయ కరభోరు యథాసుఖం తే సంవాహయామి చరణౌ - அங்கேநிதாயகரபோருயதாஸுகம்தேஸம்வாஹயாமிசரணௌ" என்றும் இத்யாதியில் படியே என் காலைப்பிடிப்பதாகக் கையைநீட்டுவதாய் சிலபாவங்களைப் பண்ணினர்; (கைவண்ணந் தாமரை) இப்பூவிலேயோ நான் காலைவைக்கப்போகிறதென்று கூசும்படி யிருந்ததுகாண். அநந்தரமாக, (ங) "కులే మహతి సమ్భూతే ధర్మజ్ఞే ధర్మచారిణి। శృణు జానకి - குலேமஹதிஸம்பூதேதர்மஜ்ஞேதர்மசாரிணி।ஶ்ருணுஜாநகி" என்றும், (ச) "సీతే మహాకులీనాసి ధర్మే చ నిరతా సదా - ஸீதேமஹாகுலீநாஸிதர்மேசநிரதாஸதா" என்றுஞ் சொல்லுகிறபடியே - என்னைநோக்கிச் சில கைவாரங் கொள்ளத்துடங்கினர்; (வாய்கமலம்போலும்) அப்போது வாய்மணமிருந்தபடி - தாமரைமணத்தாற் போலே மணத்ததுகாண். (ரு) "పశ్చాదేత్య శనైః కరామ్బుజవృతే కుర్వీత సాలోచనే - பஶ்சாதேத்யசநை:கராம்புஜவ்ருதேகுர்வீதஸாலோசநே" என்று - ஓசைப்படாதபடி பிறகிட்டுவந்து கண்ணைப் புதைக்கிருளோவென்று ஸாசங்கராய்ப்புரிந்து பார்த்தார்; (கண்ணிணையுமரவிந்தம்) அப்போது இக்கண்களையோ நாம் நெருங்கப் புதைக்கப் புக்கதென்று தவிரும்படியான கண்களில் சிவப்பிருந்தபடிகாண். இங்கே சற்று ஆஸ்பதம் பெற்றபடியாலே மடியிலே யிருப்பதாகக் கோலி வேட்டைக்குப் போவதாகக்கோத்தமரவடியைக் கழற்றினர்; (அடியுமஃதே) இம்மெல்லடியைக்கொண்டோ காடுமேடையுமான பரப்பெல்லா முலாவப் புக்கதென்று வயிறுபிடிக்கும்படியான அடியும் அவைதானுயிருந்தது.

அன்றியே, (சு) "అభయం సర్వభూతేభ్యో దదామ్యేతద్వ్రతం మమ - அபயம்ஸர்வபூதேப்யோததாம்யேதத்வ்ரதம்மம" என்றும், (எ) "ఆపన్నాభయసత్రేషు దీక్షితాః ఖలు - ஆபந்நாபயஸத்ரேஷு தீக்ஷிதா:

(க)   (ச)
(உ)   (ரு)
(ங)   (சு) ரா-யு-கஅ-ஙங-
(எ)

கலு" என்றும் சொல்லுகிறபடியே எனக்கு உகப்பென்று ரக்ஷண த்துக்குக் கட்டின காப்பையுங் கையையு மென்முன்னேகாட்டினார். இப்படி விரோதி நிவ்ருத்தி பண்ணுகிற அக்லகதனக்கு மார்த்தவ மே ஸ்வபாவமாயிருந்தது, (கைவண்ணந்தாமரை). கட்டின காப்பு க்கீடாக, (௧) "ஸர்வபாபேப்⁴யோமோக்ஷயிஷ்யாமி - ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்பது, (௨) "நயாமிபரமாங்க³திம்-நயாமிபரமாம்கதிம்" என்பது, (௩) "அஹம் ஸ்மராமிமத்³ப⁴க்தம் - அஹம்ஸ்மராமிமத்பக்தம்" என்பதாய்க்கொண்டு சிலவார்த்தைகளைச் சொன்னார்; (வாய்கமலம்போலும்) அவ்வார்த்தைக்குள்ள சுவடுகாண். (௩) "மைத்ரேணேக்ஷஸ்வ-மைத்ரேணேக்ஷஸ்வ" (௪) "சக்ஷுஷாதவஸௌம்யேந பூதாஸ்மிரகு⁴நந்த³ந- சக்ஷுஷாதவஸௌம்யேநபூதாஸ்மிரகுநந்தந" என்றும், (௫) "அவலோகநதா³நேந-அவலோகநதாநேந" என்றுஞ் சொல்லுகிறபடியே கூசாமல் அபேக்ஷிக்கலாம்படியும் க்ருதஜ்ஞராம்படியும் குளிரப்பார்த்தார், அப்பார்வைக்கு ஸௌமநஸ்ய முண்டாயிருந்தது;(கண்ணிணையு மரவிந்தம்) (௬) "ஶ்ருதிஶிரஸிவிதீ³ப்தே- ஶ்ருதிசிரஸிவிதீப்தே" என்றும், (௭) "யந்மூர்த்⁴நிமேஶ்ருதிஶிரஸ்ஸுசபா⁴தி - யந்மூர்த்நிமேஶ்ருதிசிரஸ்ஸுசபாதி" என்றும்,((௮) "பாதே³நகமலாபே⁴ந-பாதேநகமலாபேந" என்றும், (௯) "திருப்பொலிந்த சேவடியென்சென்னியின்மேல் பொறித்தாய்" என்றும், (௧௦) "தளிர்புரையுந்திருவடியென்தலைமேலவே" என்றும், நின்றார் நின்றபடிகளிலே சொல்லலாம்படி தலையிலே புழுகுற விட்டாற்போலே, (௧௧) "விஷ்ணோ:பதே³பரமேமத்⁴வஉத்ஸ: - விஷ்ணோ:பதேபரமேமத்வஉத்ஸ:" (௧௨) "தேனேமலருந் திருப்பாதம்" என்கிற திருவடியைக் கொண்டு வைத்தார்; (அடியுமஃதே) அத்திருவடிகளுக்குப் பூவுஞ்செருந்தியாயிருந்தது.

---

(௧) கீதை - ௧௮ - ௬௬ -
(௨) வராஹசர -
(௩)
(௪)
(௫) வி-பு-௧-௨௦-௬௬.
(௬) ஸ்ரீபாஷ்யம் - ௧.
(௭) ஸ்தோ - ௩ - ௬.
(௮)
(௯) பெரி - திரு - ௫ - ௪ -௭.
(௧௦) ௧ -
(௧௧) வி - ஸூ.
(௧௨) தி - வாய் - ௧-௫-௫.

(க) "ప్రాయఃప్రపదనేపుంసాంపౌనఃపున్యంనివారయేత్ - ப்ராயஃப்ரபதநேபும்ஸாம்பௌநஃபுந்யம்நிவாரயேத்" என்றும், (உ) "செய்யேல்தீவினை" என்றும் ப்ரபத்தியில் ஸக்ருத்தொழிய த்விதீயபர்யாயம் தொடங்கியுள்ள ப்ரவ்ருத்தியையும், பாபங்களில் ப்ரதமமே துடங்கியுண்டான ப்ரவ்ருத்தியையும், ப்ரபத்திக்கு முன்பு கழிந்த அக்ருத்யாநுஷ்ட்டாநநிபந்தநமான சோகத்தையும் தடுப்பதாயிருக்கிற அக்கையைக்காட்டினர்; (கைவண்ணந்தாமரை) அப்போது ஆஶ்ரிதருடைய முகோல்லாஸத்தைக் கண்டு கரபத்மம் மலர்ந்தாற்போலேயிருந்தது. (ந) "செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை" என்றும், (ந) "தம்மையுகப்பாரைத்தாமுகப்பர்" என்றும் அம்ருதம்போலே சிலவார்த்தைகளை அருளிச்செய்தார்; (வாய்கமலம்போலும்) வாய்அவ்வம்ருதத்துக்குப் பூண்கட்டினாற்போலேயிருந்தது. (ச) "என்னையும்நோக்கி யென்னல்குலும்நோக்கி யேந்திளங்கொங்கையும் நோக்குகின்றார்" என்று - அவயவியுடன் என்னவயவங்களுடன் வாசியறப் பூர்ண கடாக்ஷம் பண்ணியருளினர்; (கண்ணிணையுமரவிந்தம்) அப்போது ஆகாசத்திலே இரண்டுதாமரைபூத்தாற்போலே யிருந்தது. (ரு) "பட்டுடுக்கு மயர்த்திரங்கும் பாவைபேணாள் பனிநெடுங்கண்ணீர்ததும்பப்பள்ளிகொள்ளாள்" என்றும், (சூ) "துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாள்" என்றும் நான் அரதியாய் அவனிருந்தவூரைநோக்கிப் போகத்தேடுவது, அவசையாய் அதுதானும் மாட்டாதே க்லேசிப்பதாகிற வளவிலே, "இருவராய்வந்தாரென்முன்னே நின்றார்" என்று கமர்பிளந்த நிலத்திலே ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலே என்முன்னேநின்றார். (அடியுமஃதே) இந்தளத்தில் தாமரை பூத்தாற்போலே விரஹஸந்தப்தமான வித்தசையிலே திருவடித்தாமரைகளுண்டானபடிகாண்.

அன்றிக்கே, ப்ரதமத்திலே தன்னைப்பாணிக்ரஹணம் பண்ணின கையைச் சொல்லுகிறாள், (கைவண்ணந்தாமரை) என்று. (வாய்கமலம்போலும்) என்று - தன் கையைப்பிடித்துத் தன்செல்லாமை தோற்ற "இதொருவடிவழகிருந்தபடியென்! இதொரு

---

(க)
(உ) தி - வாய் - உ - கூ - ரு.
(ந) நா - தி - கக - கo.
(ச) தி - மொ - க - உ - க.
(ரு) கக -
(சூ) ககூ -

முலையழகிருந்தபடியென்! இதொரு கண்ணழகிருந்தபடி யென்! இன்சொல்லுச் சொன்ன திருவதர மிருந்தபடியென்! என்கை. (கண்ணிணையுமரவிந்தம்) இன்சொல்லுச் சொல்லத்தொடங்கி அது தன்னைத் தலைக்கட்டமாட்டாதே இடையிலே விக்கிக் குறையுங் கண்ணாலே சொல்லித் தலைக்கட்டினபடி. ஆதரஸூசகமாயிறே இன்சொல்லிருப்பது, அவ்வாதர மித்தனையும் கண்ணிலே ப்ரகாசிக்கும்படி நின்றொன்கை. (அடியுமஃதே) (க) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ-ஜிதந்தேபுண்டரீகாக்ஷ" என்று அந்நோக்குக்குத் தோற்றுவிழும் திருவடிகளைச் சொல்லுகிறாள்.

(உ) "கண்ணும் வாயும் கைத்தலமும் அடியிணையும் கமலவண்ணம்" என்று-கீழேசொன்னாற்போலே இங்குஞ் சொல்ல வமைந்திருக்க, போக்யதாதிசயத்தாலே அவயவங்கள்தோறும் தாமரையை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகிறாள். அடியுந் தாமரை என்னாதே, (அடியுமஃதே) என்கிற உபேக்ஷாவசநத்தாலே கீழ்ச்சொன்னவையும் விஸத்ருசத்ருஷ்டாந்த மென்னுமிடத்துக்கு ஸூசகம்.

அவர்வந்தவரவை நீசொன்னவழகிருந்தபடி கேட்டதாயிராதே ஸாக்ஷாத்கரித்தாற்போலே யிருந்ததீ! என்று தோழிசொல்ல; தோழீ! இதெல்லாம் என்னன்புது, (அவ்வண்ணத்தவர்) என்னுமித்தனையென்கிறாள். பிசைந்துமோந்தோ மித்தனையொழிய வந்த ப்ரகாரத்தையும் அவரையும் நம்மால் பேசப்போமோ? நீகேட்கையாலே உனக்கொரு த்ருஷ்டாந்தத்தையிட்டுச் சொன்னே னித்தனையொழிய ஒரு த்ருஷ்டாந்தத்தை யிட்டுச் சொல்லும்படியன்றுகாண் வடிவிருந்தபடி.

(அவ்வண்ணத்தவர்) அந்தப்ரகாரத்தை யுடையவரென்னுமித்தனைபோக்கி வேறுபாசுரமிட வொண்ணாதுகாண். வேதங்களும், (௩) "வேதாஹமேதம் - வேதாஹமேதம்" என்று உள்ளபடி யறியக்கடவோ மென்றிழிந்து, (௪) "பராத்பரம்யந்மஹதோமஹாந்தம் - பராத்பரம்யந்மஹதோமஹாந்தம்" என்றும், (௫) "த்ரயீ வேத-கஜீத்தாவேத" என்றும், (௬) "நேதி நேதி - நேதிநேதி" என்றும்,

(க) ஜி - ஸ்தோ - க.
(உ) கஅ -
(௩) பு - ஸூ -
(௪) மு - உ -
(௫) மு - உ -
(௬) ப்ரு - ௪ - ௩ -

(க) "యస్యామతంతస్యమతమ్-யஸ்யாமதம்தஸ்யமதம்" என்றும்,(உ) "యతోవాచోనివర్తన్తే। అప్రాప్యమనసాసహ-யதோவாசோநிவர்த்தந்தே । அப்ராப்யமநஸாஸஹ" என்றும், (ந) "యతోవేదామనసాసహైనమనుప్రవిశన్తిత మోదమేనమ్- யதோவேதாமநஸாஸஹைநமநுப்ரவிசந்திதமோதமேநம்"என்றும், (ச) "அறிந்தனவேதவரும்பொருள் நூல்க ளறிந்தனகொள்க வரும் பொருளாதல்" என்றும் இப்படிசொல்லிவிட்ட வித்தனையிறே. (அவ்வண்ணத் தவர்நிலைமை) என்று, இவ்விடத்தில் (அவ்வண்ணம்) என்கிறவிசேஷணம் அவருக்கு விசேஷணமாகவுமாம், அவர்நிலைமைக்கு விசேஷணமாகவுமாம். (அவ்வண்ணத்தவர்) என்றபோது வேதங்களிலே ப்ரதிபாதிக்கிற ப்ரகாரமான ஸ்வரூபரூபகுண விபூதிகளை யுடையவனென்று பகவத்பரமாகவுமாம்; அன்றியிலே, அவருடைய அவ்வண்ணத்து நிலைமையென்று நிலைமைக்கு விசேஷணமாகவுமாம். ஒன்று வ்யவஹிதாந்வய ப்ராப்தம்; மற்றையது ஸ்வதஸ்ப்ராப்தம். நிலைமையாவது - மர்யாதைகள். அதாவது - வ்யவஸிதஸ்வபாவங்கள். (அவ்வணத்தவர்நிலைமை) என்று - அந்தப்ரகாரத்தை யுடையவருடையவ்யவஸிதங்கள்.

(அவ்வண்ணத்து) என்றும், (அவர்) என்றும் பிரிக்கவுமாம்; (அவ்வண்ணத்தவர்) என்று முழுச்சொல்லாகவுமாம். (அவ்வண்ணம்) என்று - ஸௌலப்யஸ்வபாவம். அதாவது (ரு) "ఆలోలకున్తళమనోహరణాభిరామ మాజానుదీర్ఘభుజ మాయతలోచనంత్వామ్। లక్ష్మీసహాయ మనిమేష మపేతవిఘ్నం పశ్యేమదేవశరదశ్శతమేవమేవ- ஆலோலகுந்தளமநோஹரணாபிராமமாஜாநு தீர்க்கபுஜமாயதலோசநம்த்வாம் । லக்ஷ்மீஸஹாயமநிமேஷமபேதவிக்நம்பஶ்யேமதேவசரதஶ்ஶதமேவமேவ" என்று - ஸௌலப்யாதிகளைக்காலதத்வமுள்ளளவும் அநுபவிக்கலாயிருக்கை. (சா) "ప్రసాదపరమౌనాథౌ - ப்ரஸாதபரமௌநாதௌ" என்று பரத்வம் வஸ்துஸ்வபாவத்தாலே கழற்றவொண்ணுமே கிடந்தவித்தனை. (நிலைமை) என்று - அதின்

(க) கேநோப - ந -
(உ) தை - ஆந -
(ந)
(ச) தி - வாய் - க - ந - ந.
(ரு)
(சா) வி - பு - ரு - கக - உக.

வகுப்பு. ஸௌசீல்யவாத்ஸல்ய காருண்ய ஸௌந்தர்யாதிகள். அவையாவன - வந்து, இங்கேவந்து, என்முன்னேவந்து நின்றுரென்கிறவை. (கண்டும்) குணம்கண்ணுக்கு விஷயமன்றிக்கே யிருக்கச் செய்தே (கண்டும்) என்கிறபடி யென்னென்னில்; கண்ணென்று உட்கண்ணாய், ஜ்ஞாநஸாக்ஷாத்காரத்தைச் சொல்லுகிறது. அவன் பண்ணின தாழ்ச்சிகளை அநுபவித்திருக்கச்செய்தேயு மென்றபடி.

அன்றிக்கே, (அவ்வண்ணத்தவர்நிலைமை) என்று (க) "రామ స్తుసీతయాసార్ధం విజహార-ராமஸ்துஸீதயாஸார்த்தம்விஜஹார" என்று பிராட்டியுங் கூட அப்ரதாநையாய்ப்பிறகிடும்படி போகஸ்ரோதஸ்ஸுக்கு முன்னேட்டுக்கொடுத்த அவ்வவ வைவித்யங்களைஸ்மரிக்கிறது. (அவ்வண்ணத்தவர்நிலைமை) ஒருஸ்ரோதஸ்ஸுக்குநிலவராய் மற்றைஸ்ரோதஸ்ஸுக்கு நிலவரன்றியிலே யிருக்கையன்றிக்கே, ஸ்ரோதஸ்ஸுதோறும் இதுவேநிலையென்னும்படி ஸார்வத்ரிகமான தேசிகத்வம் சொல்லுகிறது. (உ) "விதியினால் பெடைமணக்கும்" என்னுமாபோலே.

அன்றியிலே, (அவ்வண்ணத்தவர்நிலைமை) என்று (ங) "వైయాత్యంసురతేష్వివ- வையாத்யம்ஸுரதேஷ்விவ" என்கிறபடியே பஹுமுகமான ஸ்ரோதஸ்ஸுக்கு நிலவரா யிருக்கச்செய்தேயும் (ச) "శిరీషమృద్వీమ్-சிரீஷம்ருத்வீம்" என்று - என்னுடைய மார்த்தவத்தைக்கண்டு குசைதாங்கிநின்ற நிலைமைகாண். அன்றியிலே, (நிலைமைகண்டும்) என்று,(ரு) "నత్యజేయమ్-நத்யஜேயம்" என்கிறபடியே என்னைப்பெற்றுத் தரித்தல் பெறுவிடில் முடிதல்செய்யும்படியான ஸ்வபாவத்தைக்கண்டு வைத்தும். (அவர்நிலைமை) அவர் வடிவழகிருந்தபடியது, சீலமிருந்தபடியது, வ்யவஸாயமிருந்தபடியது, இத்தனையுங்கண்டுவைத்தும், (கண்டும்) முன்பு உன்பக்கலிலே கேட்டுப் போந்தே னித்தனையிறே, கேட்டாற்போலே கண்டுவைத்தும். (கண்டும்) நெடுநாள் ஸாதநாநுஷ்ட்டாநம்பண்ணிக் காணவேண்டும் விஷயம் அநாயாஸமாகக் கண்ணுக்கு விஷயமாயிருக்கச்செய்தே கிடாய் நழுவவிட்டது. காணாதபோது வெருவ ப்ராப்தமாயிருக்கக்

(க) ரா - பா - எஎ - (ச)
(உ) தி - வாய் - க - ச - ங. (ரு) ரா - யு - கஅ - ரூ -
(ங)

கண்டுவைத்துங் கலங்கினேன். (க) "கண்டுந்தெளியகில்லீர்" என்னக்கடவதிறே.

அதுக்கடி யென்னென்னில்; (அவளை) அதாவது - (உ) "సంబాహుభ్యాంనమతిసంపతత్రైర్ద్యావాపృథివీజనయన్దేవఏకః- ஸம்பாஹூப்யாம்நமதி ஸம்பதத்ரைர்த்யாவாப்ருதி வீஜநயந்தேவஏகः" என்றும், (ங) "பத்துடையடியவர்க் கெளியவன்பிறர்களுக் கரியவித்தகன்" என்றும் - ஸௌலப்யம் ஸ்வபாவமான வோபாதி பரத்வமும் ஸ்வபாவமாய் நின்று நிலைத்ததாகையாலே.

(தோழீ) அஞ்சினார் புகலிடமாக உன்னையாகிலும் பெற்றோமிறே. (தோழீ) பால்யத்திலே பாம்ஸூக்ரீடைக்குத் துணையானாய், நாயகன்பக்கலிலே அபிலாஷைசென்றவளவிலே நெஞ்சில்கிடைப் பாடுஞ் சொல்லுகைக்கும் அவனைக்கிட்டுவிக்கைக்கும் துணையானாய், விஶ்லேஷதசையிலே வ்ருத்தகீர்த்தநம்பண்ணி அநுமோதிக்கைக்குந் துணையானாய், ஸர்வவிதஸஹாயமும் நீயேயன்றோ. (தோழீ) (ச) * இவர் வாயில் நல்வேதமோதும் வேதியர் வானவராகையாலே, "அவர்" என்று - போக்யதையைச் சொல்லுவது; (ச) "என்னையும் நோக்கி என்னல்குலும் நோக்கி ஏந்திளங்கொங்கையும் நோக்குகின்றார்" என்று-நாயகாதுராகம்சொல்லுவது; (ச) "அன்னையென்நோக்குமென் றஞ்சுகிறேன்" என்று - பயஸ்தாநஞ்சொல்லுவது; (ச) "அச்சோ வொருவரழகியவா" என்று பின்னையும் விடவொண்ணாதபடியான ஆகர்ஷகம் சொல்லுகைக்கு உன்னையொழிய வேறுண்டோ? (தோழீ) அவர்வடிவழகிருந்தபடியும் வந்தவரவிருந்தபடியும் நின்ற நிலை யிருந்தபடியும் நீகாணப்பெற்றதில்லை காணென்கிறாள்.

(அவளைநாம்) நம்மையொழியச் செல்லாதபடி நின்றவளை, அவளையொழிந்தபோது, (ரு) "அஸந்நேவ-அஸந்நேவ" என்னும்படி யிருக்கிற நாம். அன்றிக்கே, அவளை யொழியச்செல்லாமையால் வந்த வாற்றாமையையுடைய நாமென்னுதல், ஏகாதிரிக்தமநேகமாகையாலே தோழியையுங்கூட்டி (நாம்) என்கிறாள். (அவளைநாம்) (சூ) "செல்வர் பெரியர்" என்றும், (எ) "அவனெவ்விடத்தான்"

(க) தி - வாய் - ச - கூ - ந.
(உ) யஜு - கா -
(ங) தி - வாய் - க - ங - க.
(ச) தி - மொ - கூ - உ - க.
(ரு) தை - ஆந -.
(சூ) நா - தி - கO - கO.
(எ) தி - வாய் - ரு - க - எ.

என்றும் எட்டாதபடியாயிருக்கிறவனை, (க) "சிறுமானிடவர்" என்று எண்ணுகைக்குங் கூடப்பாற்றம் போராதபடியான நாம்.

இப்படி பர்வதபரமாணுக்களானவிடத்தில் நாம்செய்ததென்னென்ன; (தேவரென்றஞ்சினோமே) நங்காலிலேவிழுவா ரொருவரல்லர், நாம் அவர்காலிலே விழத்தக்காரொருத்தரென்று கூசினோம். (அவனை நாம்தேவரென்றஞ்சினோம்) ஸ்ரீவராஹ நாரஸிம்ஹங்களான திர்யகவதாரங்களாக நினைத்திலோம், மாநுஷரான ராமக்ருஷ்ணர்களென்றுநினைத்திலோம், (உ) "అశ్వత్థస్సర్వవృక్షాణామ్-அஶ்வத்தஸ்ஸர்வவ்ருக்ஷாணும்" என்றும், (ங) "మేరుశ్శిఖరిణామ్-" என்றும் ஸ்த்தாவராவதாரமான அஶ்வத்தமேருக்களாக நினைத்திலோம், (ச) "மனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்குந்தேவா" என்றும், "அயர்வறுமமரர்களதிபதி" என்றும் ஸூரிகளுக்கு மெட்டாத பரதேவதையென்று நினைத்தோம். ஶ்ருங்காரகர்மஸமாராத்யரானவனை கர்மஸமாராத்யராக நினைத்தோம்.

அதவா, (அவனைநாம்தேவனென்றஞ்சினோம்) (ரு) "దివ్యక్రీడావిజిగీషావ్యవహారద్యుతిస్తుతిమోదమదస్వప్నకాన్తిగతిషు-திவுக்ரீடாவிஜிகீஷாவ்யவஹாரத்யுதிஸ்துதிமோதமதஸ்வப்நகாந்திகதிஷு" † (சு) "క్రీడాహరేరిదంసర్వంక్షరమిత్యవధార్యతామ్ - க்ரீடாஹரேரிதம்ஸர்வம்க்ஷரமித்யவதார்யதாம்"என்றும், (எ) "క్రీడతో బాలకస్యేవ చేష్టాం తస్య నిశామయ - க்ரீடதோபாலகஸ்யேவசேஷ்டாம்தஸ்யநிசாமய" என்றும், (அ) "అఖిలభువనజన్మస్థేమభఙ్గాదిలీలే - அகிலபுவநஜந்மஸ்த்தேமபங்காதிலீலே" என்றும் (கூ) "మోదతే భగవాన్ భూతైః బాలః క్రీడనకైరివ-மோததேபகவாந்பூதைஃபாலஃக்ரீடநகைரிவ" என்றும், (க0) "இன்புறுமிவ்விளையாட்டுடையான்" என்றும், (கக) "வீட்டைப்பண்ணிவிளையாடும்" என்றும் - விபூதியைக்கொண்டு லீலைபண்ணுவாரொருவனென்றும்.

---

(க) நா-தி-கஉ-ச.
(உ) கீதை-க0-உசு.
(ங) கீதை-க0-உங.
(ச) தி - வாய்-அ-க-ரு.
(ரு)
(சு)
(எ) வி-பு-க-உ-கஅ.
(அ) ஸ்ரீபாஷ்யம்-க.
(கூ)
(க0) தி-வாய்-ங-க0-எ.
(கக) நா-தி-கச-கூ.

† இங்கு "தேவரென்று க்ரீடையாய்" என்றிருக்கவேணும்.

(தேவனொன்று) விஜிகீஷையாய், (க) "జితంతే పుణ్డరీకాక్ష-ஜிதம் தேபுண்டரீகாக்ஷ" என்றும், (உ) "జితంభగవతాజగత్ - ஜிதம்பகவதாஜகத்" என்றும், (ங) "సత్యేనలోకాన్ జయతి-ஸத்யேநலோகாந் ஜயதி" என்றும், (ச) "నావిజిత్యనివర్తతే - நாவிஜித்யநிவர்த்ததே" என்றும், (ரு) "தோற்றேரும் மடநெஞ்சம்" என்றும் - ஸ்வேதரவஸ்துக்களை நின்றநின்ற நிலைகளிலே தோற்பித்துவெற்றிகொள்வாரொருவனொன்றும்.

(தேவர்) என்று வ்யவஹாரமாய், (கூ) "యోవై వేదాంశ్చప్రహిణోతి - யோவைவேதாம்ஸ்சப்ரஹிணோதி" (எ) "పఞ్చరాత్రస్యకృత్స్నస్యవక్తానారాయణస్స్వయమ్- பஞ்சராத்ரஸ்யக்ருத்ஸ்நஸ்யவக்தா நாராயணஸ்ஸ்வயம்" (அ) "பீதகவாடைப் பிரானார்பிரமகுருவாகி" என்றும், (கூ) " திருவரங்கர்தாம்பணித்தமெய்ம்மைப்பெருவார்த்தை" என்றும், (க௦) "மறையுரைத்த திருமால்" என்றும், (கக) "அன்னமாயன்றங்கருமறைபயந்தான்" என்றும் - ப்ரபுத்வம்கொண்டாடி வாய்திறவாதிருக்கை யன்றிக்கே - ஸகலஜகத்திதமாக வேதவைதிக ப்ரவசநம்பண்ணுவாரொருத்தர்.

அன்றிக்கே, வ்யவஹாரமென்று-வழக்காய், (கஉ) "ఈశ్వరోహమహంభోగీ - ஈஸ்வரோஹமஹம்போகீ" என்றும், (கஉ) "ఆఢ్యోభిజనవానస్మికోన్యోస్తిసదృశోమమ-ஆட்யோபிஜநவாநஸ்மிகோந்யோஸ்திஸத்ருஶோமம" என்றும்-ஸம்ஸாரியானவன்நான் கடவேனென்ன; (கங) "పతింవిశ్వస్య-பதிம்விஸ்வஸ்ய"என்றும், (கச) "సఈశోస్యజగతోనిత్యమేవ -ஸஈஶோஸ்யஜகதோநித்யஏவ"என்றும்,(கரு)"ఈశ్వతేభగవానేకః-ஈஶதேபகவாநேக:"(கசு)"శాస్తావిష్ణురశేషస్యజగతః-சாஸ்

(க) ஜி-ஸ்தோ-க.
(உ)
(ங) ரா-அ-
(ச) ரா-அ-
(ரு) தி-வாய்-உ-க-எ.
(கூ) ஶ்வேதா-கூ-
(எ)
(அ) பெரி-திரு-ரு-உ-அ.
(கூ) நா-தி-கக-க௦.
(க௦)
(கக) தி-மொ-ரு-எ-ங.
(கஉ) கீ-கசு-மச-
(கங)
(கச)
(கரு)
(கசு)

தாவிஷ்ணுரசேஷஸ்யஜகத:" (க) "ప్రశాసితారంసర్వేషామ్ - ப்ரசாஸிதாரம்ஸர்வேஷாம்" என்றும், (உ) "అహంకృత్స్నస్యజగతః ప్రభవఃప్రళయ స్తథా - அஹம்க்ருத்ஸ்நஸ்யஜகத:ப்ரபவ:ப்ரளயஸ்ததா" என்றும், (ங) "తేనచేదవివాద స్తేమాగఙ్గాంమాకురూఁగమః- தேநசேதவிவாதஸ்தேமாகங்காம்மாகுரூந்கம:" என்றும் - ப்ரமாணமான ஶ்ருதிஸ்ம்ருதிகளைக் கையிலேகொண்டு ஸம்ஸாரிகளோடே வழக்குச்சொல்லித் தம்மதாக்குவனென்றும்.

(தேவனென்று) த்யுதியாய், (ச) "తమేవభా న్తమనుభాతిసర్వమ్- தமேவபாந்தமநுபாதிஸர்வம்"(ச) "తస్యభాసాసర్వమిదంవిభాతి-தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி" (ரு) "అథయదతఃపరోదివోజ్యోతిర్దీప్యతే- அதயதத:பரோதிவோஜ்யோதிர்தீப்யதே" என்றும், (சா) "నారాయణపరోజ్యోతిః-நாராயணபரோஜ்யோதி:" (எ) "நிறைந்த சோதிவெள்ளஞ்சூழ்ந்த" (அ) "சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு" என்றுஞ் சொல்லுகிறபடியே - நிரவதிகதேஜோரூபராயிருப்பாரென்றும்.

(தேவர்) என்று ஸ்துதியாய், (கூ) "తతోదేవాఊర్ధ్వబాహవః స్తువన్తి - ததோதேவாஊர்த்வபாஹவஸ்துவந்தி" என்றும், (க0) "తస్యఋక్సామచగేష్ణౌ - தஸ்யருக்ஸாமசகேஷ்ணௌ" என்றும், (கக) "స్తవ్యస్తవప్రియః-ஸ்தவ்யஸ்தவப்ரிய" என்றும், (கஉ) "సమభిష్టూయసన్నతాః-ஸமபிஷ்டூயேஸந்நதா:" என்றும், (கங) "సఙ్ఘైస్సురాణాం దివిభూతలస్థైః తథామనుష్యైర్గగనేచఖేచరైః- స్తుతః-ஸங்கைஸ்ஸுராணாம்திவிபூதலஸ்த்தைஸ்ததாமநுஷ்யைர்ககநேசகேசரை:-ஸ்துத:" (கச) "ஏத்தவேழுலகம்" (கரு) "ஏத்தவேத்தவெங்கெய்தும்"

---

(க) (சா) பு-ஸூ- (கக) ஸஹஸ்ர-
(உ) கீ-க0-அ. (எ) தி-வாய்-ரு-ரு-எ. (கஉ)
(ங) மநு-அ-கஉ. (அ) ,, ரு-ரு-க0 (கங)
(ச) கடோ-உ-ரு-கரு. (கூ) (கச) தி-வாய்-உ-உ-கக.
(ரு) சாந்தோ- (க0) சாந்தோ- (கரு) ,, ச-ங-க0.

என்று திவ்யரோடு பௌமரோடுவாசியற ஸர்வைஸ்ஸ்தூத்யனு யிருக்குமென்றும், (தேவர்) என்று-காந்திகதிகளுக்குப் பேராய், (க) "బ్రహ్మవిదాప్నోతిపరమ్ - ப்ரஹ்மவிதாப்னோதிபரம்" என்றும், (உ) "మాం వ్రజ - மாம்வ்ரஜ" (ங) "మామేవైష్యసి - மாமேவைஷ்யஸி" என்றும், (ச) "గతిర్గమ్యశ్చాసౌహరిః - கதிர்கம்யஶ்சாஸௌஹரிஃ" என்றும், (ரு) "நாராயணனே நமக்கேபறைதருவான்" என்றும், (சு) "இறைவா நீதாராய்பறை" என்றும், (எ) "உனக்கே நாமாட்செய்வோம்" என்றுஞ் சொல்லுகிறபடியே உபாயோபேயங்களிரண்டும் அவனே யென்றும், திவுதாதுவுக்கு ப்ரதிபாத்யமான வர்த்தங்களேழும் பதார்த்தாந்தரங்களில் ப்ரத்யேகமேகதேசம் வர்த்திக்குமித்தனை; அப்படியேயன்றிக்கே உக்தப்ரகாரத்திலே இங்கேயெல்லாம் பூர்ணமாகவர்த்திக்கையாலே, (எ) "నతత్సమశ్చాభ్యధికశ్చ- நதத்ஸமஶ்சாப்யதிகஶ்ச" என்றும், (அ) "నత్వత్సమోస్త్యభ్యధికః కుతోన్యోలోకత్రయేపి-நத்வத்ஸமோஸ்த்யப்யதிகஃகுதோந்யஃலோகத்ரயேபி" என்றும் - வேதவைதிகர் சொல்லுகிற மேன்மையை புத்தி பண்ணினோமித்தனைகாண்.

அன்றியே, (தேவரென்று) அதஸ்மிந் தத்புத்திபண்ணினோம். பரதேவதையென்று ப்ரமித்தோமித்தனை யொழிய (கூ "ఆత్మానం మానుషం మన్యే-ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்றும், (க0) "తత్ర త్వం మానుషో భూత్వా-தத்ரத்வம்மாநுஷோபூத்வா" என்றும், மண்ணிலேமயங்கி மனிசராயிருக்கிறவரை நாம்தேவரென்று பழியிட்டோம். ஆலோகாலாபாலிங்கநவிநயாதிகளைப் பண்ணித்தம்மைத்தாழவிட்டுநின்ற ஸஜாதீயவிஷயத்தை விஜாதீயபுத்தி பண்ணினோமித்தனைகாண். (கூ) "ఆత్మానం మానుషం మన్యే- ஆத்மாநம்மாநுஷம் மந்யே" என்னும் அவர்நினைவைவிட்டு, (கக) "భవాన్నారాయణో దేవః-பவாந்நாராயணோதேவஃ" என்கிற வழிப்போக்கர்வார்த்தையைப்பற்றினோமித்தனைகாண்; (கஉ) "అహం వో బాంధవో జాతః-அஹம்வோ பாந்தவோஜாதஃ" என்னுமவனை, (கங) "దేవో వా దానవో వా త్వమ్-

(க) தை-ஆந-க.
(உ) கீதை-கஅ-சுசு-
(ங.) கீதை-கூ-ஙச.
(ச)
(ரு) தி-பா-க-
(சு) தி-பா-உக.
(எ) ஶ்வேதா-சு.
(அ) சத்யத்-க.
(கூ) ரா-யு-கஉ0-கஉ.
(க0)
(கக) ரா-யு-கஉ0-கச.
(கஉ) வி-பு-ரு-கங-கஉ.
(கங) வி-பு-ரு-கங-எ.

தேவோவாதாநவோவாத்வம்" என்றுப்ரமித்தாற்போலே யென்கிருள்.

இப்படி அவர்கள்வார்த்தையைப் பற்றிச்செய்ததென்னென்னில்; (அஞ்சினேம்) (க) "అథసో౽భయంగతో భవతి-அதஸோபயம்கதோபவதி" என்றும் (உ) "భయంభయానామపహారిణి-பயம்பயாநாமபஹாரிணி" என்றும், அபயஸ்த்தாநத்திலே பயபுத்தி பண்ணிற்று. * "(நாமஞ்சினேம்) என்று-ஸ்ரீஜநகராஜன் திருமகள் வார்த்தையாயிருந்தபடி கண்டாயே"! என்று ஜீயரருளிச் செய்வர். இழவில்வந்தாலும் வாஸனை விடாதிறே. (நாமஞ்சினேம்) (ங) "భీషాస్మాద్వాతః పవతే। భీషోదేతిసూర్యః। భీషాస్మాదగ్నిశ్చేన్ద్రశ్చ- பீஷாஸ்மாத்வாதஃ பவதே।பீஷோதேதிஸூர்யஃ। பீஷாஸ்மாதக்நிஶ்சேந்த்ரஶ்ச" என்று துர்மாநிகள் அஞ்சுமிடத்திலேயோ பக்நாபிமாநிகளானநாமஞ்சுவது? (நாமஞ்சினேம்) (ச) "బాహూరామస్యసంశ్రితా। నాహారయతిసంత్రాసమ్-பாஹூராமஸ்யஸம்ஶ்ரிதா।நாஹாரயதிஸந்த்ராஸம்"என்று கணயத்துக்குள்ளேயிருக்கிறநாமோ அஞ்சுவோம்? (நாமஞ்சினேம்) என்று - (ரு) "బాహుచ్ఛాయామవష్టబ్ధో యస్యలోకోమహాత్మనః-பாஹுச்சாயாமவஷ்டப் தோயஸ்யலோகோமஹாத்மநஃ" என்று உபய விபூதிக்கும் அஞ்சினுன் புகலிடமானதோள் எனக்கொருத்திக்கும் பயஸ்த்தாநமாவதே!. (அவரை நாம் தேவரென்றஞ்சினேம்) (சு) "దదామిబుద్ధియోగంతమ్ - ததாமிபுத்தியோகம்தம்" என்று உணர்த்தியைத் தந்தவரை, (எ) "త్వత్తఏవమయాశ్రుతః- த்வத்தஏவமயாஶ்ருதஃ" என்றும், (அ) "அறியாதனவறிவித்த" என்றும் - அவன்பக்கலிலே அறிவுபெற்ற நாம் பரத்வஜ்ஞாநம் பிறந்து ஸ்வரூபாநுகுணமாக வொதுங்கினேம். (நாமஞ்சினேம்) தோழீ! உன் ஸந்நிதியில்லாமையிறே நானிழந்தது, அவன்படியையும் என்படியையும் அறிந்த நீ கூடநின்ருயாகில் என் ப்ராந்தியைப் போக்கலாயிற்றேயென்கிருள்.

மைவண்ணநறுங்குஞ்சி வ்யாக்யாநம் முற்றிற்று.

---

* இது பட்டர் வ்யாக்யாநமாகில் இவ்வாக்யம் அந்வயியாது. இது பட்டர் வ்யாக்யாநமன்றென்றே ஸம்ப்ரதாயஜ்ஞர் சொல்லுகிருர்கள்.

(க) தை-ஆ-ந-எ.  (ரு) ரா-ஸு-ருச-கக.
(உ) வி-பு-க-சஎ-ருசு.  (சு) கீதை-க0-க0.
(ங) தை-ஆந-அ.  (எ) ரா-ஸு-ரு அ-ச0.
(ச) ரா-அ-சு0-உ0.  (அ) தி-வாய்-உ-ரு-உ.

மூ.—நைவளமொன்றாராயாநம்மைநோக்கா
நாணினார்போலிறையேநயங்கள்பின்னும்
செய்வளவிலென்மனமுங்கண்ணுமோடி
எம்பெருமான்திருவடிக்கீழணைய, இப்பால்
கைவளையும்மேகலையுங்காணேன்கண்டேன்
கனமகரக்குழையிரண்டும்நான்குதோளும்
எவ்வளவுண்டெம்பெருமான்கோயிலென்றேற்கு
இதுவன்றேயெழிலாலியென்றார்தாமே. (௨௨)

பதம். ஒன்று, நைவளம், ஆராயா, நம்மைநோக்கா, இறைநாணினார் போல், (௫) பின்னும்நயங்கள்செய்வளவில், என்மனமும், என்கண்ணும், ஓடி, எம்பெருமான்திருவடிக்கீழ்அணைய, (௧0) இப்பால், கைவளையும், மேகலையும், காணேன், கனம், (௧௫) மகரக்குழையிரண்டும், நான்குதோளும், கண்டேன், எம்பெருமான், கோயில், (௨0) எவ்வளவுண்டென்றேற்கு, எழில் ஆலி, இதுவன்றேயென்றார்தாமே. (௨௫) (௨௨)

உரை. அத்விதீயமாக, நைவிக்கும் அழகையுடைய பண்ணை, ஆராய்ந்து (பாடி), நம்மைப்பார்த்து, கொஞ்சம் லஜ்ஜைப்பட்டவர்போலே, (நின்று) (௫)பின்னும் நீசபாஷணங்களைச் செய்யும்போது,என்மநஸ்ஸும்,என்னுடைய கண்ணும், ஓடி, எமக்கு ஸ்வாமியான ஸர்வேஶ்வரன் திருவடிகளிலேகிட்ட, (௧0) அதன்பின், கையில்தரித்த வளையையும், அரைநூல்மாலையையும், போனவிட மறிந்திலேன்; ஸ்த்திரமான, (௧௫) இரண்டுமகரகுண்டலங்களையும், நான்கு திருத்தோள்களையும், பார்த்தேன்; எமக்கு ஸ்வாமியே! (தேவரீரெழுந்தருளியிருக்கும்) ஸ்ரீரங்கம், (௨0) எவ்வளவு தூரமுண்டென்றுகேட்டஎனக்கு, அழகியதிருவாலி, இது வன்றேயென்று தாமேசுட்டிக்காட்டியருளினார். (௨௨) (௨௨)

வ்யா.—இருபத்திரண்டாம்பாட்டு.—(நைவளம்) கீழ்ப்பாட்டில் "அவரை நாம்தேவரென்றஞ்சினோம்" என்று - அதஸ்மிந்தத்புத்திபண்ணினேன் கண்டாயேதோழீயென்றாள்; "நீ அகன்றாயாகில் அவன் உன்னோடு ஸம்ஶ்லேஷித்தபடியென்" என்ன; அவன் வசீகரித்தபடியும் ஸம்ஶ்லேஷித்தபடியுமிதுகாணென்கிறாள். தன்னுடைய ஸௌந்தர்யத்தையும் சீலத்தையுங் காட்டினவிடத்திலும் கார்யகரமல்லாமையாலே "போமித்தனையோ" என்று நினைத்தான், ஸ்ரீபாதம் பேர்ந்ததில்லை, நித்யஸாபேக்ஷமான விஷயத்தைக்குறித்து நித்யநிரபேக்ஷனானவன் கால்வாங்கமாட்டாதே நிற்கையாவதென்னென்னில்; சேஷியாகையாலே, சேஷவஸ்துவகன்றால் இழவுதன்னதாய், லபித்தால் பெறும் பேறும் தன்னதாயிருக்கையாலும், இவளை யொழியச்செல்லாத காமுகத்வத்தாலும், "நம்மழகு இங்கு

ஜீவிக்கையாயிற்றில்லையென்று மீளுவோமாகில் புறம்பு நமக்கு ஸர்வஸ்வம்மாயிருந்துள்ள வழகையாதரிப்பாரில்லை" என்கிற வபிமாநத்தாலும் கால்வாங்கமாட்டிற்றிலன். † உத்தமராஜகந்யைபக்கலிலே உத்தமராஜபுத்ரன் சென்று அழகு ஜீவிக்கையாகாதே மீண்டானென்றால் புறம்பு ஜீவிக்கையாகாதிறே. † ருசியேதுடங்கிப் பிறரைவசீகரிக்கும் பரிகரமாகத்தான் நினைத்திருப்பது அழகையிறே, அது நிஷ்ப்ரயோஜநமானால் அபிமாநம் கால் கட்டுமிறே; சக்திகொண்டுகார்யங்கொள்ளிலும் விஷயமில்லாமையாலே மேல்விழுந்தணைக்க மாட்டிற்றிலன்; எதிர்த்தலையில் இசைவின்றிக்கே மேல்விழுந்தால் ரஸமில்லையிறே. "அழகும் சீலமும் கார்யகரமாயிற்றில்லை, சக்திகொண்டு கார்யங்கொள்ளும் நிலமன்றியிலேயிருந்தது, இனி இவளை வசீகரிக்கும்படி யென்?" என்றுபார்த்தான், முன்பு திருவாய்ப்பாடியில் பெண்கள் தன்குழலோசையிலே வசீக்ருதரானபடியைக்கண்டபடியாலே "நம்முடைய மிடற்றோசையாலே வசீகரிப்போம்" என்றுபார்த்து ஒருபண்ணை நுணுங்கினான். இவனுடைய (க) *ఏవంబహువిధాంచిన్తామ్-ஏவம்பஹுவிதாம்சிந்தாமிருக்கிறபடி. "ம்ருகயார்த்தமாகவந்தோ மாகையாலே 'பாடுகிறவனர்' என்றுகேட்பாரில்லை, இவளை வசீகரிக்கும் பரிகரமிது" என்று ஒருபண்ணை நுணுங்கினான், அதிலே யீடுபட்டு மேல்விழுந்து கலந்தேன், இதுகாண்செய்தபடியென்கிறாள். ம்ருகயையைக்குறித்துவந்தவர்கள் ஶ்ரமந்த்ரஒருமரத்தின்கிழலிலே ஒதுங்குகையும் முகத்திலே நீரையேறிட்டுக் கொள்ளுகையும், கர்ப்பூரநிகரத்தை வாயிலே யிடுகையும், ஒருபண்ணை நுணுங்குகையும் ப்ராப்தமிறே.

(நைவளம்) கேட்டாரோடு சொன்னாரோடு வாசியற நைவிக்கும்படியான அழகையுடைத்தான பண்ணை நுணுங்கி. நட்டபாஷையை குணயோகத்தால் (நைவளம்) என்று பேசிடுகிறது. (உ) "நுடங்கு கேள்வியிசை" என்னக்கடவதிறே. (ஒன்று) அல்லாத இசைகளிற்காட்டில் பிறரைவசீகரிக்கவற்றாயிருக்கையையும் இதுக்கு வசீக்ருதராகாவிட்டால் வேறுகதியற்றிருக்கையையும் பற்ற அத்விதீய மென்கிறது. கர்மஜ்ஞாநங்களால் ஸாத்யமல்லா

இருபத்திரண்டாம்பாட்டு. (நைவளம்) ஒருத்திபக்கலிலே ஜீவிக்கையாகாதொழிந்தால் புறம்பு ஜீவிக்கை யாகாதொழியவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (உத்தமராஜேத்யாதி.)

அழகைத் தான் வசீகாரஸாதநமாக நினைத்திருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ருசியேதொடங்கியித்யாதி.)

(க) ரா-ஸு-நக-க. (உ)

த்தை பக்தியாலே ஸாதிக்கலாம், பக்தியாலே ஸாத்யமல்லாதத்தை ப்ரபத்தியாலே ஸாதிக்கலாயிருக்கும்; அதுவும் பலியாவிட்டால் வேறு கதியில்லையிறே. சேஷபூதன் சேஷியை லபிக்கைக்குச் சரமமான உபாயத்தைப் பற்றினாற்போலேகாணும் காந்தன் அபிமத விஷயத்தை லபிக்கைக்குச் சரமோபாயத்தைப் பற்றினபடி. (ஆராயா) நுணுங்கினான். (நம்மைநோக்கா) பண்ணை நுணுங்கினவாறே தான் அழிந்தான், "இனித்தப்பாது இவளழிகை" என்று என்முகத்தைப்பார்த்தான், "வயிரவுருக்கானது அரக்கையுருக்கச் சொல்லவேணுமோ" என்றிருந்தான்; நம்முடைய பும்ஸ்த்வத்தையழித்த விது ம்ருதுஸ்வபாவையான விவளுடையஸ்த்ரீத்வத்தை யழிக்கக் குறையில்லையென்று என்முகத்தைப்பார்த்தான். (நம்மை) என்று - ஆத்மஸ்பஹ-வசநம்.

(நாணினார்போலிறையே) அல்பமேநாணினார்போலே. அவர் என்முகத்தைப் பார்த்தவிடத்தில் அவர் நுணுங்கினபண்ணிலே அகவாயழிந்திருக்கச்செய்தே பொரிபுறந்தடவி நானழிந்தமை அவர்க்குத் தெரியாதபடி அவிக்ருதையா யிருந்தேன், அத்தைக்கண்டு லஜ்ஜைபிறந்தது, "சரமோபாயத்தை யநுஷ்டித்தோம், அது நிஷ்ப்பலமாயிற்று" என்று லஜ்ஜையிலே யிழிந்தார். நேராக நாணினாராகில் மேல்பண்ணும் ப்ரவ்ருத்தி கூடாதிறே; ஆகையாலே நாணினார்போலே பாவித்தாரென்கிறாள். அதாகிறது - லஜ்ஜித்தாற்போலே பாவியா நேர்முகம் பார்க்கமாட்டாதே சோலையைப் பார்ப்பது, பார்ஶ்வங்களைப் பார்ப்பதானாரென்கிறாள். ப்ரபந்நர், தன்னைலபிக்கைக்கு (க) * அழுவன்தொழுவனில் பட்டபாட்டையெல்லாம் அபிமத விஷயத்தைக் குறித்துத்தான்பட்டபடி.

(பின்னும் நயங்கள் செய்வளவில்) பின்னும் நீசபாஷணங்களைப் பண்ணிலேயிட்டு நுணுங்குமளவில். (நயங்கள் பின்னும்) நம்முடைய மஹாவிஸ்வாஸம்போலே யாயிற்று அவனுடைய மஹாவிஸ்வாஸமிருக்கிறபடி. பண்ணின ப்ரபத்தி விபரீதபலமானாலும் அத்தையொழிய கதியற்றிருக்குமாபோலே தான் நுணுங்கினபண் பலித்ததில்லையென்றுவிடாதே பின்னையும் அத்தையே நுணுங்கினானென்கை. (நயங்கள்) அவ்விசையிலே வைத்து நுணுங்கின நீசபாஷணங்களுக்குத் தொகையில்லையென்கிறாள். (ஆராயா, நம்மைநோக்கா, நாணினார்போலிறையே நயங்கள பின்னும்) என்றுகொண்டு அவன் பண்ணின ஸாரஸ்யங்களை நீயுங்கூடக் காண

(க) தி-வாய்-ரு-அ-ரு.

ப்பெற்ற தில்லைகாணென்கிறாள். (செய்வளையில்) அத்தை நுணுங்கினவளவிலே.

(என்மனமும் கண்ணுமோடி) த்வஸ்தமாய்ப்போயிற்றென்கிறாள். பொரிபுறந்தடவி அடக்கிக்கொண்டிருந்தேன், என்னால் அடக்கப்போயிற்றதில்லை, கடலுடைந்தாற்போலேயுடைந்ததென்கிறாள். கண்ணால் கண்டவிடத்திலே யிறே நெஞ்சுசெல்லுவது, அம்முறை குலைந்ததென்கிறாள். நெஞ்சும் தனியேபோயிற்று, கண்ணும் தனியே போயிற்றென்கிறாள். ஹ்ருஷீகேசனைக் காணுமளவுமிறே இந்த்ரியங்களுக்கு இவனோடு ஸம்பந்தம்; † கர்ம நிபந்தநமாகையாலே ஔபாதிகமிறே. (ஓடி) ஒன்றைபொன்றுபின்பாராதே யோடிற்றென்கிறாள். என்னையும் பாராதே யோடிற்றென்கிறாள்.

(எம்பெருமான் திருவடிக்கீழணைய) நிருபாதிகஸம்பந்தியானவன்பக்கலிலே போய்ப்புக்கதென்கிறாள். (எம்பெருமான்) † தன்மிடற்றோசையாலே என்னையெழுதிக்கொண்டவன். (திருவடிக்கீழணைய) அவன் நினைத்தவளவன்றுகாண் நான் அழிந்தபடியென்கிறாள். என்முலையைத் தன்மார்விலே நெருக்கித் தழுவிக்கொள்ளவாயிற்று அவன் நினைத்தது, நான் அவன்காலைத் தலையிலே வைத்துக்கொண்டேனென்கிறாள். அடங்கியிருக்குமாபோலே யிறே அழியும்போதழியும்படி.

(இப்பால்) என்னைவந்துகிட்டுகைக்கு அவன் பண்ணினவ்யாபாரங்கள் சொன்னேன், கலந்தபோது அவன் பண்ணின வ்யாபாரங்கள் ஒரு மஹாபாரதத்துக்குப்போரும், அத்தை அடைவுபடப் பேசுகைக்குவேண்டுந்தெளிவில்லாமையாலே பேச்சுக்குநிலமன்று, † இக்கதை ஸ்ரீராமாயணத்தே கேட்கலாகாதோ வென்கிறாள். † உபோத்காதஞ்சொன்னேன், பலஶ்ருதியைக் கேட்கலாகாதோ?

---

ஆத்மாவன்றோ இந்த்ரியங்களுக்கு ஈஶ்வரன் என்ன; அருளிச்செய்கிறார் (கர்மநிபந்தநமாகையாலேயித்யாதி.)

தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தன்மிடற்றோசையாலேயித்யாதி.)

(இக்கதை) ஸ்ரீராமாயணத்தோடே கேட்கலாகாதோவென்கிறாளென்று ஸம்யக்பாடஃ. அதாவது - இத்தை ஸ்ரீராமாயணத்திலே பிராட்டியுடைய வ்யாபாரம் சொன்னாற்போலே என்னுடையவ்யாபாரத்திலே அறிந்து கொள்ளுங்கோளென்றபடி. அதாவது - (கைவளையும் மேகலையும்) இத்யாதியாயிருக்கிற ஆகாரத்தைக்கொண்டே அவன் கலந்தபோது பண்ணினவ்யாபாரங்களெல்லாமறிந்து கொள்ளுங்கோளென்றபடி. விவரணம் (உபோத்காதமித்யாதி.)

(கைவளையுமித்யாதி) அகம் ஒடுக்குண்டுபோனால் "கண்டதேது காணாததேது" என்று கேட்பாரைப்போலே அவன் வந்து கலந்த போது கலவியின் பலமாய்க்கொண்டு நீகாணாததேது, கண்டதெதென்னச் சொல்லுகிறாள். த்ருஷ்டம் அத்ருஷ்டமாய் அத்ருஷ்டம் த்ருஷ்டமாயிற்று.

(கைவளையும்) வளைகழலுவது விரஹத்தின் பின்பன்றோ, வளை போயிற்று என்பானென்னென்னில்; ஸம்ஶ்லேஷ ரஸத்தாலே பூரித்து வெடித்துப்போயிற்றென்கை. (மேகலையும்) மேகலைகண்டிலேனென்கை. அஸதஸ்யமன்றோவென்னில்; அத்தசையில் பரியட்டம் மாறாட்டத்தாலே என்பரியட்டப்பட்டுங் கண்டிலேனென்கை. அவன்பரியட்டம் தன்கையிலே யிருக்கக்கண்டா ளித்தனையிறே. (காணேன்) புக்கவிடமறிந்திலேன். இத்தால் - ஸ்வாபதேசத்தில் வந்தால் அஹங்கார மமகார நிவ்ருத்தியைச் சொல்லிற்று யிருக்குமிறே. ஸ்வரூபஜ்ஞானம் பிறக்கும்போதில் விரோதியான அஹங்கார மமகாரங்கள், போகவேளையில் வந்தால் வஸ்த்ரமென்றும் வளையென்றும் பேரிடக்கடவதாயிருக்கும். நான் போக்தாவென்றிருத்தல், எனக்கு போக்யமென்றிருத்தல் செய்யுமதுஸ்வரூபமன்றிறே; போக்யமாயிருக்கையிறே ஸ்வரூபம். (காணேன்) தான் விரோதியைக் கழித்துக்கொள்ளுதல் அவனைப்பற்றிப் போக்கித்தரவேணுமென்று அபேக்ஷித்தல் செய்தாலிறே விரோதிபோனதறிவது, தான் போகத்திலே அந்யபரையாயிருக்க அவன் போக்கப்போனவை யாகையாலே கண்டிலேனென்கிறாள்.

(கண்டேனித்யாதி) இத்தலையிலுள்ள தொன்றுங்காணாதாற்போலே அத்தலையிலுள்ளதை நேராகக்கண்டேன். விரோதியை நேராகக் கண்டிலேன், போக்யதை குறைவற்றிருக்கக் கண்டேன். அணைத்தபோது உறுத்தின திருமகரக்குழைகளையும் அணைத்த திருக்கைகளையுங் கண்டேன். (கனமகரக்குழை) ஸ்த்திரமான திருமகரக்குழை. நித்யாநுபாவ்யமா யிருக்கை. கலந்தவன் சக்ரவர்த்தித் திருமகனாயிருக்க, (நான்குதோள்) என்கிறது - தன்னைத் தழுவுகையாலே தோள்கள் பணைத்தபடியைப்பற்ற. இத்தலையகப்பட்டபின்பு தன்னை வெளியிட்டபடியாகவுமாம். †தோள்களைக்கொண்டு கார்யங் கொள்ளுமிடத்தே மறைக்கவொண்ணாதிறே.

(எவ்வளவித்யாதி) அவிச்சின்னமாக வநுபவிக்கவேணுமென்று பார்த்து "உம்முடைய வகம் எத்தனைதூரம்போரும்"என்று கேட்ட

---

† த்ருதீயதாத்பர்ய மருளிச்செய்கிறார் (தோள்களைக்கொண்டித்யாதி).

வெனக்கு. (எவ்வளவுண்டு) சற்றிடமாகில் கூடப்போவோமென்று நினைத்து "எவ்வளவுண்டு" என்கிறாள்போலேகாணும். (க) † "பருகிக்களித்தேன்" என்றவநந்தரம், (உ) "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்று ப்ரார்த்தித்தாற்போலே, இவளோடே ஸம்ஶ்லேஷிக்கப் பெற்றுவைத்து இவனுடைய வேண்டப்பாட்டைக்கண்டு இவனுக்குத் தகுதியான பரிஜநத்தோடே அநுபவிக்கவேணுமென்னும் அபேக்ஷைபிறந்தது. (எவ்வளவுண் டெம்பெருமான் கோயிலென்றேற்கு) (என்றேற்கு) நானேகிடீர் பிரிவை ப்ரஸங்கித்தேனென்கிறாள்.

(இதுவன்றோ வெழிலாலியென்றார்) திருமணங்கொல்லைக்கும் திருவாலிக்குமுண்டான ப்ரத்யாஸத்தி அங்குலிநிர்த்தேசம்பண்ணலா யிருக்கையாலே "இதுவன்றோ" என்று கையைக்காட்டினாரென்கிறாள். அங்ஙனன்றியே, நீயிருந்தவிடமன்றோ நமக்கு உத்தேஶ்யமென்றார் சொன்னவுமாம். சேஷியிருந்தவிடமே சேஷபூதனுக்குஉத்தேஶ்யமாமாபோலே. † பிள்ளைவேட்டகத்தையாசைப்படும், பெண்பிள்ளை புக்ககத்தை யாசைப்படுமிறே.

அதவா, (எவ்வளவித்யாதி) போகம் உந்மஸ்தகரஸமான வாறே ஸாத்மிப்பித்து அநுபவிப்பிக்கவேணுமென்று பார்த்து, "நாம் அகம்புக்கு வாராநின்றோம்" என்று பிரிவை ப்ரஸங்கிக்க, (எவ்வளவுண் டெம்பெருமான் கோயிலென்றேற்கு - எழிலாலி - இதுவன்றோ வென்றார்) உன்காலேயன்றோ நமக்குத்தேஶ்யமென்று என் காலைக் காட்டிப்போனாரென்கிறாள். (தாமே) வருவாருந்தாமே, அநுபவிப்பாருந்தாமேயாய்விட்டதென்கிறாள். ... ... (உஉ)

மூ.—உள்ளூருஞ்சிந்தைநோயெனக்கேதந்தென்
றௌிவளையும்மாநிறமுங்கொண்டாரிங்கே
தெள்ளூருமிளந்தெங்கின்தேறல்மாந்திச்
சேலுகளுந்திருவரங்கம்நம்மூரென்ன

---

தாத்பர்யம் (பருகிக்களித்தேனித்யாதி).

இவள் அவனிருந்தவூரைக்கேட்டால், நம்மூர் இன்னது என்றுசொல்லாதே நீ இருந்தவிடமென்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (பிள்ளைவேட்டகத்தையித்யாதி). ... ... ... ... ... (உங)

---

(க) தி-வாய்-உ-௩-க. (உ) தி-வாய்-உ-௩-க0.

கள்ளூரும்பைந்துழாய்மாலையானைக்
கனவிடத்தில்யான்காண்பன்கண்டபோது
புள்ளூருங்கள்வாநீபோகேலென்பன்
என்றாலுமிதுநமக்கோர்புலவிதானே. (உங)

பதம். உள்ளூரும், சிந்தைநோய், எனக்கேதந்து, என்ஒளிவளையும், என்மாநிறமும், (ரு) இங்கே, கொண்டார், தெள், ஊரும், இளம், (க0 தெங்கின்தேறல், மாந்தி, சேல், உகளும், திருவரங்கம் நம்மூரென்ன, (கரு) கள்ளூரும், பைந்துழாய்மாலையானை, யான், கனவிடத்தில்காண்பன், கண்ட போது, (உ0) புள்ளூரும்கள்வா, நீபோகேல்என்பன், என்றாலும், இது, நமக்குஓர்புலவிதானே. (உரு) (உரு)

உரை. அந்தக்கரணத்தையுங் கூட வ்யாபரிக்கும்படியான, மநோவ்யாதியை, எனக்கேதந்து, என்னுடைய அழகிய கைவளையல்களையும், என்னுடைய ஶ்லாக்யமான நிறத்தையும்,(ரு) இந்த திருவாலிதிருநகரியிலே, கொண்டுபோனார்; (அப்போது அவர்) தெளிந்து, பரவாநின்றுள்ள, இளமைதங்கிய, (க0) தென்னங் கள்ளைக், குடித்து, மத்ஸ்யங்களானவை, ஸஞ்சரிக்கிற, ஸ்ரீரங்கமானது, நம்முடையவூர் என்றுசொல்லிப்போக, (கரு) தேன்வெள்ள மிடாநின்றுள்ள, பசுமைதங்கிய திருத்துழாய் மாலையையுடைய வவரை, நான், கனவிலே கண்டேன்; அப்படி அநுபவித்ததசையில், (உ0) பெரிய திருவடியை நடத்துகிற க்ருத்ரிமனே! (என்னைவிட்டு) நீபோகாதேகொள்என்று (நான்) சொல்லாநிற்பன், இப்படிச் சொன்னாலும், இந்த ஸம்ஶ்லேஷம், நமக்கு ஆற்றாமைக்கு உறுப்பாமதன்றோ? (உரு) ... ... ... (உங)

வ்யா.—இருபத்துமூன்றாம்பாட்டு. (உள்ளூரும்) தானே க்ருஷிபண்ணிவந்துகலந்தவன் பிரிகிறபோது, "போகாதேகொள்" என்று ஒருவார்த்தை சொல்லமாட்டிற்றிலையோவென்ன; அதுவுஞ் சொன்னேன், அது அகார்யகரமாயிற்றென்கிறாள். உனக்கு பவ்யனாயிருக்கிறவன் உன்வார்த்தை கேளாதொழியுமோ வென்ன; "நிலமல்லாநிலத்திலே நீளவிருக்கக்கடவதோ" என்று பெரியதிருவடி கொண்டுபோகப்போனானென்கிறாள். † ரக்ஷகனுடைய வ்யாபாரமாகையாலே கூடுகையும் ரக்ஷகமாய்ப் பிரிகையும் ரக்ஷகமாயிறே யிருப்பது. போகம் உன்மஸ்தகமானால் அதைஸாத்மிப்பித்து அநுபவிப்

---

இருபத்துமூன்றாம்பாட்டு. (உள்ளூருஞ்சிந்தைநோய்) ஈஶ்வரன்றானே பிரிந்துபோனானென்று அர்த்தாந்தரத்தை விவக்ஷித்து, பரமதயாளுவாயிருக்கிறவன் நிர்த்தயமாகப் பிரியலாமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ரக்ஷகனுடையவித்யாதி). ஸாத்மிப்பித்து அநுபவிப்பிக்கைக்காகப் பிரிந்தானென்னு

பிக்கவேணுமென் றிருக்குமிறே அவன் ; † ஸ்வரக்ஷணத்தில் சிந்தையில்லாமையாலே † கூடுகைக்குப்பாரிக்கிறுளிறே இவள்.

உபயவிபூதி யுக்தனுய் பரமோதாரனு யிருக்கிறவனுக்கு நீ ப்ரிய விஷயமாய்க்கொண்டிருந்தாயாகில் அவன் உனக்குத் தந்துபோயிற்ற தென்னென்ன ; (உள்ளூருஞ்சிந்தைநோ யெனக்கேதந்து) அவன் தந்துபோனது இதுகாணென்கிறுள். உள்ளில்நோய், கண்கண்டு சிகித்ஸிக்கலாம் நோயன்றுகாண் தந்தது. பாஹ்யமான நோயாகிலிறே கண்கொண்டு சிகித்ஸிக்கலாவது. (உள்ளூரும்நோய்) ஸர்ப்பம் ஊர்ந்தாற்போலே ஸஞ்சாரியா யிருக்கை. † கண்ணுக்குத் தெரியா திருந்தாலும் ஒருப்ரதேசத்திலேயாகில் அவ்விடத்தே அந்வேஷித்து சிகித்ஸிக்கலாமிறே, அது செய்யவொண்ணுதபடி கழலைகரப்பான்போலே எங்குமொக்க ஸஞ்சரிக்கும் நோயென்கை. † காதல் நோயாகையாலே கிலாய்ப்பைப்பற்றி நிற்குமோ, பந்தத்தைப்பற்றி நிற்குமோ, இன்னபடியிருக்குமென்று நிர்ணயிக்கவொண்ணுதபடியாயிறே யிருப்பது. (சிந்தைநோய்) அபரிஹரணீயமான நோய். ஒருருக்கு நோவுவந்தால் வைத்யனுலே பரிஹரிக்கலாம், வைத்யனுக்கு ஒரு நோவுவந்தால் ஒருவராலும் பரிஹரிக்கவொண்ணுதிறே. (க) "𑌅𑌧𑍋𑌕𑍍𑌷𑌜𑌚𑍇𑌤𑌸𑌃-அதோக்ஷஜசேதஸ:" என்கிறபடியே நெஞ்சுதெளிந்திருந்தால் கர்மக்ஷயமிறேயென்று தரித்திருக்கலாம், நெஞ்சில் வ்யாதிக்குப் பரிஹாரமில்லையிறே. (நோய்) † இப்ரேமந்தான் அவஸ்த்தாநுகுணமாகப் புருஷார்த்தமாயிருக்கும், - போகோபகரணமா யிருக்கும், நோவுமாயிருக்கும் ; - ஸ்வரூபஜ்ஞானம் பிறந்தார்க்குப் புருஷார்த்தமாயிருக்கும், போக்தாவுக்கு போகோபகரணமாயிருக்கும், விஸ்லேஷித்தார்க்கு வ்யாதியாயிருக்கும்.

---

மதுதாமறிந்திருக்க மநோரதிப்பா னென்னென்ன; அருளிச்செய்கிறுர் (ஸ்வரக்ஷணத்திலித்யாதி). கூடுகைக்குப்பாரிக்கையாவது - கீழில்பாட்டிலே, "எவ்வளவுண்டு" இத்யாதியாலே அவிச்சிந்நமாக அநுபவிக்கப்பாரிக்கை.

உள்ளில்நோய் என்றதிலே அபரிஹரணீயத்வம் ஸித்தமாயிருக்க (ஊரும் நோய்) என்றத்தாலே பலித்தப்ரயோஜந மேதென்ன ; அருளிச்செய்கிறுர் (கண்ணுக்குத் தெரியா திருந்தாலுமித்யாதி). சிந்தைநோயாகையாலும் அபரிஹரணீயமென்கிறுர் (காதல்நோயாகையாலேயித்யாதி). (க) "𑌅𑌭𑌿𑌭𑍂𑌯𑌮𑌾𑌨𑌾𑌵𑍍𑌯𑌸𑌨𑍈𑌃 - அபிபூயமாநாவ்யஸநை:" என்றது இங்கு அபேக்ஷிதம்.

அநேகஜந்மஸாத்யமானப்ரேமத்தை (நோய்) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறுர் (இப்ரேமந்தானித்யாதி).

---

(க) பாகவ-௧௦-௨௦-௧௫.

(எனக்கேதந்து) எனக்கே கூறுகத்தந்து. கலவி இருவர்க்கு மொக்குமாகில் ஆற்றுமை இருவர்க்குமொவ்வாதோ வென்கை. (தந்து) என்பானென்னென்னில் ; என்னைப்போலே யன்றியே பிறர் முகம்பார்க்கவேண்டாதபடியான ஸ்வாதந்த்ர்யத்தையுடையவர்; பிரிந்துபோகையாலே அவர்க்கில்லை என்னுமிடங்கண்டிலையோவென்கிருள். (க) "నైవదంశాన్న మశకాన్- நைவதம்ஸாந்நமஶகாந்" என்கிறபடியே ஊர்ந்ததுங்கடித்தது மறியாதே அவன்படும்பாடு தானறியாளிறே. (உ) "ఊర్ధ్వంమాసాన్న జీవిష్యే- ஊர்த்த்வம் மாஸாந் நஜீவிஷ்யே" என்னுமளவு தன்னது, (ந) "నజీవేయంక్షణమపి- நஜீவேயம்க்ஷணமபி" என்னும்படி அவனுற்றுமை. எனக்கே யாயிற்றென்கிருள்- †அவன் க்ருஷியாலேவந்ததாகையாலே. (எனக்கேதந்து) அவர்பெரியவரன்றே, தமக்கென்னவொன்று வைக்க வல்லரோ? எல்லாம் (ச) "భక్తానామ్- பக்தாநாம்" என்றன்றே அவரிருப்பது என்று க்ஷேபமாதல்.

(என்னுளிவளையும் மாநிறமுங்கொண்டார்) நோவை விளைத்ததுக்குமேலே நோவுக்கு ஆஶ்வாஸகரமா யிருக்குமத்தையுங்கொண்டுபோனார். (என்னுளிவளையும் மாநிறமும்) (ரு) "మదీయఞ్చ నిఖిలమ్- மதீயஞ்சநிகிலம்" என்றும், (சு) "తవైవ- தவைவ" என்றும் ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநத்தை யுடைய விவள் தேஹாத்மாபிமாநிகளைப்போலே சொல்லக்கடவளோ வென்னில் ; ஸம்ஶ்லேஷதசையில் இதொரு வளை யிருந்தபடியென்! சேர்த்தியால்வந்த வொளியிருந்தபடியென்! வடிவில் நிறமிருந்தபடி யென்! என்று கொண்டாடுமவையாகையாலேசொல்லுகிருள். அவனுக்கு ஆதரணீயமானவை அவ்வழியாலே தனக்கு மாதரணீயமாயிருக்கையாலே "என்னது" என்னலாமிறே. (மாநிறம்) ஶ்லாக்யமானநிறம். (இங்கே) நான்வழிபறியுண்டதேசமிதுவென்கிருள். நான் வழிபறிக்கவந்து வழிபறியுண்டேனென்கிருள். (எ) "இங்கேயிருவராய்வந்தார்" என்றுநான்நிதியெடுத்ததேச மிதுவென்ருள் - அங்கு ; பறிகொடுத்ததேசமிது வென்கிருள் - இங்கு.

ஆனல் அவன்போகிறபோது உம்முடைய ஊரேதென்று கேளாவிட்ட தென்னென்ன; அது நான்கேட்கவேண்டிற்றில்லை; - வ்ய

---

விஶ்லேஷத்தாலே தன்னடையேவருகிறநோயை, (தந்து) என்பானென்னென்ன ; ஸ்வாபதேசத்தையுட்கொண்டு (அவன்க்ருஷியாலே யித்யாதி).

(க) ரா-ஸு-ருசு-சஉ. (ச) ஜி-ஸ்தோ-ரு. (எ) உக.
(உ) ரா-ஸு-ருஅ-சுஎ. (ரு)
(ந) ரா-ஸு-ருரு-கO. (சு)

திரோகத்தில் தரித்திருக்கைக்காகத் தானேசொல்லிப்போனுரென்கிருள். (தெள்ளுருமித்யாதி) தெளிந்து பாயாநின்றுள்ள இளந்தெங்கின் தேனை நுகர்ந்து, சேல்களானவை உகளும்படியான தேசம். (இளந்தெங்கு) தேசவிசேஷத்தில்பஞ்சவிம்சதிவார்ஷிகராயிருக்குமாபோலேயாயிற்று இத்தேசத்தில்ஸ்த்தாவரங்களு மிருப்பது. (தெள்ளுருமித்யாதி) தெளிந்து தெங்கினின்றும் வாராநின்றுள்ள தேறல் திருவீதிகளிலேபரவாநிற்குமாயிற்று. தேன்திருவீதியிலே பரவாதபோது சேல்பருகிற்றென்னக் கூடாதிறே. இது (௧) "தேட்டருந்திறல்தே னினைத்தென்னரங்கனை" என்கிறதேனுக்குஸ்மாரகமாயிருக்கிறதாயிற்று. (சேலுகளும்) முக்தர் களித்துவர்த்திக்குமாபோலே இத்தேசத்தில் திர்யக்குக்களு மகப்படக் களித்து வர்த்திக்கிறபடி. (தேறல்மாந்திச்சேலுகளும் திருவரங்கம்) ஜந்மதேசமானஜலத்தைவிட்டு போகஸ்த்தாநத்திலே புகுந்து தேனை நுகர்ந்து களித்ததென்கை. முக்தன் ஸம்ஸாரத்தை நினைக்குமன்றிறே இவை தமக்கு ஜந்மபூமியான ஆற்றைநினைப்பது.

(இளந்தெங்கித்யாதி) ஸம்ஸாரஸம்பந்த மற்றுப்போன முக்தனுக்கு ஸம்ஸாரஸ்பர்சமில்லாத நித்யஸூரிகள், (௨) "ஆண்மின்கள் வானகம்" என்று ஸ்வபோகத்தைக் கொடுக்குமாபோலே, ஆற்றிலே பிறந்துபுகுந்த கயல்களுக்கு ஊரில் ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டிதமான தெங்குகள் தன்னுடைய தேனைக்கொடுக்க அத்தை நுகர்ந்துகளிக்கிற கயல்களையுடையவூர், நம்மூரென்ன - நமக்குதேசமென்ன. எனக்குத்தேசமென்னில் "பக்தாநாம்" என்றதுவ்யாஹதமாம், உனக்குத் தேசமென்னில் தன்பாரதந்த்ர்யத்தோடு சேராமையாலே அவள் "உன்னையொழிய எனக்கொரு தேசமாவதென்" என்னும், இரண்டுதலைக்கும் ஸ்வரூபஹாநியாகையாலே, (நம்மூர்) என்கிருர். † இருவர்ஸத்தையையு முண்டாக்கும் தேசமிதுகாண். என்னை ப்ரணயியாக்கி உன்னை ப்ரணயிநியாக்கும் தேசமிதுவென்கை ; திருமந்த்ரம்போலே இருவர்க்கும் பொதுவானவூர். இருவரும் விஷயார்த்திகளாகையாலே இருவர்க்கும் தேசமிதுவிறே.

(கள்ளுருமித்யாதி) தோளிலேயிட்டதனிமாலையும் தாமுமாய் வந்தவரவை நீகாணப்பெற்றதில்லைகாண். புழுகுநெய்யேறிட்டுக் கொண்டு வருவாரைப்போலே நானுகந்தபடியே ஒப்பித்துவந்தார். (கள்ளுரும்பைந்துழாய் மாலையானை) அவனூர் பட்டதத்தனையும்

† "நம்மூர்" என்றதுக்கருளிச்செய்கிருர் (இருவர்ஸத்தையையுமித்யாதி.)

(௧) பெரு-திரு-௨-௧. (௨) தி-வாய்-௧௦-௯-௬.

படுங்காண் அவனுடம்பு. ரஸஸிரைகள் திறந்து மது வொழுகாநின்றுள்ள திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவனை. (கள்ளூரும்) நன்னிலத்திற் காட்டில் திருமார்விலே ஸ்பர்சித்தபின்பு செவ்விபெற்றபடி. (பைந்துழாய்) திருத்துழாய் குளிர்ந்திருந்ததென்று நீயறிந்தபடி யென்னென்ன; என்னை யணைக்கையாலே யறிந்தேனென்கிறாள்.

(கனவிடத்தில்) இந்த்ரஜாலமென்றும் கனவென்றும் அஸ்த்திரங்களைச்சொல்லக்கடவது; அஸ்த்திரமான தேசத்திலே † தாமும் ஸந்நிஹிதராய் அநுபாவ்யவிஷயமும் ஸந்நிஹிதமாயிருக்க தேசாந்தரம் வேண்டுகிறது-தேசமும் தேஹமும் அஸ்த்திரமாகையாலேயிறே. (கனவிடத்தில்) கனவென்று-ஸம்ஶ்லேஷத்தில் அஸ்த்தைர்யத்தைச் சொல்லவுமாம்; முன்பு அநுபூதமானதொன்றைக் காலநீளத்தாலே ஸ்வப்நம் கண்டமாத்ரமென்று சொல்லக்கடவதிறே. (யான்காண்பன்) அவனையொழியச்செல்லாதபடியான ஆற்றாமையையுடையநான் காண்பன். (நான்) அநுபவித்தேன், என்னபிநிவேசத்துக்குங் குறையில்லை. அநுபவத்துக்கும் குறையில்லை;

ஸம்ஶ்லேஷத்தில் புரையில்லையாகில் அத்தசையில் உனக்கு அவன்கையாளாயன்றோவிருப்பது, "போகாதேகொள்" என்று ஒருக்தியாலே விலங்கிட மாட்டிற்றிலையோவென்ன; அதுவும் செய்தேனென்கிறாள். (கண்டபோது) அநுபவித்ததசையிலே. (புள்ளூருங்கள்வா) பெரிய திருவடியை நடத்துகிற க்ருத்ரிமனே! பெரியதிருவடியைப்பதிப்படையாக வைத்துவந்து புகுந்து கலந்து, இத்தலையகப்பட்டவாறே அவன் கடுமைபோராதென்று அசேதநமான தேரை நடத்துமாபோலே பெரியத்வரையோடே பெரியதிருவடியை நடத்துகிறக்ருத்ரிமனே! † வந்தபோதே போகையாலே பெரியதிருவடியைப் பதிப்படையாகக் கடத்திவந்தக்ருத்ரிமனே யென்கிறாள். வந்தபோது * சிலையே துணையாகவந்தானானால் பெரியதிருவடி வருகையாவதென், கொண்டு போகையாவ தென்னென்ன; ராஜாக்கள் அபிமதவிஷயத்தைப் பற்றக் கறுப்புடுத்துப் புறப்பட்டால் மந்த்ரிகள் வரவுங் கொண்டுபோகவுங் கடவதா யிருக்குமாபோலே பெரிய

---

அஸ்த்திரமென்கைக்கு நியாமகமேதென்ன; அருளிச்செய்கிறார் (தாமும்ஸந்நிஹிதராயித்யாதி). பதிப்படையாக வைத்துவந்தானென்று இவள் அறிந்தபடியென்னென்ன; அருளிச்செய்கிறார் (வந்தபோதே யித்யாதி).

திருவடிவந்து கொண்டுபோனான். (புள்ளூருங்கள்வா) † "வந்தகார்யந்தலைக் கட்டிற்றாகில் எழுந்தருளலாகாதோ" என்று பெரியதிருவடிசொல்ல அவனை மேற்கொண்டுபோனானென்கிறாள். (புள்ளூரும்) தேரூர்ந்தா னென்னுமாபோலே. அதாகிறது - பெரியதிருவடியும் குழைச்சரக்காம்படிகாண் போனகடுமை யிருந்தபடியென்கிறாள். † பெரியதிருவடி சிறகிலும், திருவநந்தாழ்வான்மடியிலும், சேனைமுதலியார் பிரம்பிலும், பிராட்டிகடாக்ஷத்திலும் வளரும் தத்வமாகையாலே தான் நினைத்தபடி செய்யப்போகாதிறே. (க) * வானிளவரசிறே. (நீபோகேலென்பன்) நீ உன்னைக் கண்ணாடிப்புறத்திலுங் கண்டறியாயோ? "நாம் பிரியில் இவள் தரியாள்"என்றிருக்க வேண்டாவோ? (நீபோகேல்) என்னையுங்கூட்டிக்கொண்டு போதல், இங்கே கூடவிருத்தல்செய்யுமதொழியத் தனியே போகக்கடவையோ? (என்பன்) நிஷ்ப்ரயோஜநமான வார்த்தையைச் சொன்னேன். அவன்ஸ்வரூபத்தோடேசேரும் வார்த்தையைச் சொன்னேனல்லேன், என்ஸ்வரூபத்தோடேசேரும் வார்த்தையைச் சொன்னேனல்லேன், பலிப்பதொன்றைச் சொன்னேனல்லேன். அவன் போகத்தேட நான் தடுக்கையாவது அவனுடைய ப்ரணயித்வத்துக்குஞ் சேராது, (உ) "தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத் - தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" என்றிருக்கைஸ்வரூபமாயிருக்க போகாதேகொள்ளென்கை என் ஸ்வரூபத்துக்குஞ் சேராது.

(என்றாலும்) இப்படி இருவருடைய ஸ்வரூபத்துக்கும் சேராத வார்த்தையைச் சொன்னவிடத்திலும். (இது நமக்கோர்புலவிதானே) இந்தஸம்ஶ்லேஷம் நமக்கு ஆற்றாமைக்கு உறுப்பாய்விழுந்தது. அவனைப் பேணினேனல்லேன், என்னைப்பேணினே னல்லேன், அபிமதம் பெற்றேனல்லேன், இத்தால் - து:கமே சேஷித்து விட்டதென்கிறாள். புலவி - து:கம். (நமக்கு) அவன் அபிமதங் கைபட்டதென்று ஹ்ருஷ்டனாய்ப் போனான், நமக்கு து:கமே பலித்துவிட்டது. (தானே) நாட்டார்க்கு ஸுகஹேதுவானதுதானேகிடீர் நமக்கு து:கஹேதுவாயிற்றென்கிறாள். (ஓர்புலவி) ஸ்வரூபஹாநியால் வந்த து:கமும் அவனைப்பிரிகையால் வந்த து:கமுமாய் இரட்டித்திருக்கையாலே அத்விதீயமென்கிறாள். (உரு)

---

அவதாரிகையில் மூந்தின தாத்பர்யத்துக்கு அநுகுணமாகத் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (வந்தகார்யம் தலைக்கட்டிற்றாகிலித்யாதி). இரண்டாமர்த்தத்திலே (பெரியதிருவடிசிறகிலுமித்யாதி). தாத்பர்யம் (உன்னையித்யாதி). (உரு)

---

(க) பெரி-திரு-ரு-சு-ரு. (உ) ரா-ஸு-ருக-ருo.

மூ.—இருகையில்சங்கிவைநில்லாவெல்லே பாவம்
இலங்கொலிநீர்ப்பெரும்பௌவம்மண்டியுண்ட
பெருவயிற்றகருமுகிலேயொப்பர்வண்ணம்
பெருந்தவத்தரருந்தவத்துமுனிவர்சூழ
ஒருகையிற்சங்கொருகைமற்றுழியேந்தி
உலகுண்டபெருவாயரிங்கேவந்து, என்
பொருகயல்கண்ணீரரும்பப்புலவிதந்து
புனலரங்கமூரென்றுபோயினரே. (உச)

பதம். உலகுண்ட, பெருவாயர், இங்கேவந்து, பொரு, கயல், (ரு) என் கண், நீர், அரும்ப, புலவிதந்து, இலங்கு, (க0) ஒலி, நீர், பெரும்பௌவம், மண்டியுண்ட, பெரு, (கரு) வயிற்ற, கருமுகில், வண்ணம், ஒப்பர், பெரும் தவத்தர், (உ0) அருந்தவத்து, முனிவர், சூழ, ஒருகையில்சங்கு, மற்றொருகை ஆழி, (உரு) ஏந்தி, புனல்அரங்கம், ஊரென்று, போயினர், இருகையில், (ங0) சங்கிவைநில்லா, எல்லேபாவம். (ஙஉ)

உரை. ஸமஸ்தலோகங்களையும் (ப்ரளயகாலத்திலே) அமுதுசெய்த, பெரிய வாயையுடையவர், இவ்விடத்தேவந்து, ஒன்றோடொன்றுபொரா நின்றுள்ள, மத்ஸ்யங்களையொத்த, (ரு) என் கண்களிலே, நீர்த்துளிகள், ப்ரவஹிக்கும்படி, துக்கத்தைவிளைத்து, ஒளியையும், (க0) சப்தத்தையும், நீரையுமுடைய, மஹாஸமுத்ரத்தை, அவகாஹித்துப் பருகினதாய், இடமுடைத்தான, (கரு) வயிற்றையுடைத்தான, காளமேகத்தின் நிறத்தை, வடிவழகிலே, ஒத்திருப்பவர், பரமபக்தி யுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்களும், (உ0) மஹாதபஸ்விகளாய், மநநசீலர்களானருஷிகளும், சூழ்ந்துநிற்க, ஒரு திருக்கையில் பாஞ்சஜந்யாழ்வானையும், மற்றொருதிருக்கையில் திருவாழியாழ்வானையும், (உரு) தரித்தவராய், (தாம்பிரிந்தால் நான் தரித்திருக்கைக்காக), ஜலஸம்ருத்தியையுடைய ஸ்ரீரங்கம், தம்மூரென்றுசொல்லி, நம்மைப்பிரிந்து போனார்; (அவர்போனபோதே) (என்னுடைய) இரண்டுகைகளிலும், (ங0) சங்குவளையல்களானவை கழன்றுபோயின; என்னமஹாபாபமோ! (ஙஉ) (உச)

வ்யா.—இருபத்துநாலாம்பாட்டு. (இருகையில் சங்கு) பெரிய திருவடிகொண்டுபோனானாகில், (க) "யஸ்யைதே தஸ்ய தத்தநம்- யஸ்யைதேதஸ்யதத்தநம்" என்கிறபடியே †அவன்றான்உனக்கு பவ்யனாயிருந்தானாகில் அவனுக்குசேஷபூதனான பெரியதிருவடி உனக்கு

இருபத்துநாலாம்பாட்டு. (இருகையில் சங்கு) தாத்பர்யம் (அவன்றானித்யாதி).

(†) பார.

சேஷமாயன்றே விருப்பது, அதுகிடக்க மஹிஷீவர்க்கத்துக்கு ஸ்வ ரூபேண தாஸபூதனாயன்றே அவனிருப்பது, (க) "దాసస్సఖా - தாஸஸ்ஸகா", இரண்டாலும் அவனை "நீபோகேல்" என்று நிய மிக்கக்குறை யென்னென்ன; அவனொருவனுமே யாகிலன்றே அது செய்யலாவது, நித்யவிபூதியிலுள்ளாரடங்கவந்து சூழ்ந்துகொண் டார்கள், அவர் தாம் பண்டுபோலன்றியே வடிவில் பௌஷ்கல்யத் தாலும் மேன்மையினாலும் அநபிபவநீயராயிருந்தார், அத்தாலே சென்று கிட்டவும் வார்த்தைசொல்லவுமாயிருந்ததில்லைகா ணென் கிறாள்.

(இருகையிற் சங்கிவைநில்லா) தாம்போகையன்றிக்கே தாம் போனால் ஆஶ்வாஸஹேதுவாயிருக்குமவையும் எனக்குத் துணை யாகாதபடிகாண் பண்ணிப்போயிற்று. (கையிற்சங்குநில்லா) அவன் போனபோதே ஆற்றாமை குடிபுகுந்தது, கையில் வளையைப் பார்த்தாள், வளை அவனுக்குமுன்னேபோய் நின்றது. அவன் போனாலும் அவன் போகோபகரணங்கள் கிடந்ததாகில் அத்தைப் பார்த்துத் தரிக்கலாமிறே, "அது கையின் கார்ஶ்யத்தாலே வந்த தோ" என்று மற்றக் கையைப்பார்த்தாள், (இருகையில் சங்கு நில்லா) அதுவும் அதுக்குமுன்னேபோய்க் கிடந்தது, ஆகையா லே, (இருகையில் சங்கிவைநில்லா) என்கிறாள். (இவைநில்லா) அவன் நில்லாதொழிந்தால் இவையும் நில்லாதொழியவேணுமோ.? சேஷியாகையாலே அவன்போகிறான், எனக்கு சேஷமான இவையும் போகவேணுமோ.? சேதநனாகையாலே இத்தலையிலே ஒருகுறை கண்டுபோகலாம் அவனுக்கு, அசேதநமானவிவையும் போகவேணு மோ.? வந்து கலந்தவனாகையாலே போகிறான் அவன், ஸஹஜ மானவிவையும் போகவேணுமோ.? (இவைநில்லா) நங்கைக்கடங் காதவனாகையாலே போனான் அவன், நங்கைக்கடங்கின விவையும் போகவேணுமோ.? (இவைநில்லா) அவன் நிற்கிலும் இவைநிற்கிற னவில்லை. (நில்லா) போகேலென்னப் போனாற்போலே பலகால் எடுத்தெடுத்துக்கையிலேயிடக்கழலுகையாலே (நில்லா) என்கிறாள். (உ) "శైథిల్యముపయాన్త్యస్య కరేషు వలయాన్యపి- சைதில்யமுபயாந் த்யாசுகரேஷுவலயாந்யபி" என்னக்கடவதிறே.

(எல்லே) என்னே.! சிதசித்விபாகமற மத்ஸம்பந்தமே யமை யுமாகாதே! உதவாதொழிகைக்கு; "மமேதம்" என்னவமையுமா காதே உதவாதொழிகைக்கு. அவன் உதவாதொழிகைக்கு ஹேது மத்ஸம்பந்தமேயிறே. (பாவம்) அவன்போனானாகில்போகிறான், கைப்பட்டதும் போகைக்கடி என் பாபமேயிறே. (எல்லேபாவம்)

(க) ஸ்தோ-ர-ருக. (உ)

அவன்புண்யத்துக்கு ஓரவதியில்லாதவோபாதி என்பாபத்துக்கு மோரவதிகண்டிலோமீ! தானேவந்துகலந்தவனை அநுபவிக்கப் பெறுதபாபத்துக்குமேலே ஆஶ்வாஸஹேதுவான இவையும்உதவா தொழியும்படியிறே யென்பாபாதிசயம்.

(இலங்கொலிநீரித்யாதி) தன்னைக்கலந்துபிரிந்துபோகிறபோது அவன்வடிவிற் பிறந்த புதுக்கணிப்புச் சொல்லுகிறாள். இத்தலை வெறுந்தரையாம்படி விவர்ணமாயிறே கிடக்கிறது. (இலங்கித்யாதி) இவளை வெறுந்தரையாக்கின ப்ரகாரத்துக்கு த்ருஷ்டாந்தஞ்சொல்லுகிறது - "பெருவயிற்ற" என்னுமளவுஞ் செல்ல. (இலங்கொலி நீரித்யாதி) § லவணுதிகளாலே அளாவின வொளியன்றிக்கே ஸ்வாபாவிகமான ஒளியையும் காம்பீர்யத்தையு முடைத்தான நீரையுடைய மஹாஸமுத்ரத்தை வெறுந்தரையாகப் பருகினதொரு காளமேகம்போலேகாண் போகிறபோது அவர்வடிவிருந்தபடி. (க) "என்னுளிவளையும் மாநிறமுங்கொண்டார்" என்கிறபடியே என் வடிவிலொளியும் காம்பீர்யமும் அவர்பக்கலிலே குடிகொண்டதென்னும்படிகாண் வடிவிருந்தபடி. (பெரும்பௌவம்) என்று ஸப்தத்வீபங்களையும் விளாக்கொலைகொண்ட சுத்தஜலஸமுத்ரத்தைச் சொல்லுகிறது. (மண்டியுண்ட) மணலோடேபருகினவென்னுதல்; பெரியவபிநிவேசத்தோடே மேல்விழுந்து பருகினவென்னுதல். இவளோடே ஸம்ஶ்லேஷிக்க வருகிறபோதையில் அபிநிவேசமும் இத்தலையில் ஸௌந்தர்யஸாகரத்தை ஆத்தஸாரமாக்கினபடியும் வடிவிலே தோற்றியிருக்கிறபடி.

(பெருவயிற்ற) இத்தலையிலுள்ளது நேராக க்ரஹித்த பின்பும் அபிநிவேசம் மாளாதேயிருந்தபடி. (கருமுகிலேயொப்பர்வண்ணம்) இத்தால் - ஸ்வரூபகதநம்பண்ணுகிறதன்று, தாத்காலிகமான வழகைச் சொல்லுகிறது. ஒருகாளமேகத்தை ஒருமின்தழுவினாற் போலே ஸ்வாபாவிகமானவெழிலுக்குமேலே இத்தலையிலெழிலும் அங்கே குடிகொள்ளுகையாலே வடிவு இரட்டித்திருக்கிறபடி. (மண்டியுண்ட) பாவியேன்! மேகம் முகக்கும் கடலாகாதே, பெய்யுந்தரையாகப் பெற்றிலேன். (பெருந்தவத்தரித்யாதி) வடிவில் பௌஷ்கல்ய மிருந்தபடியும், பரிகரவத்தை யிருந்தபடியும், மேன்மையிருந்தபடியும் நீகாணப்பெற்றிலைகாண். (பெருந்தவந்த ரித்யாதி) ஒருவரிருவராய்ச்சென்று கிட்டுகிறாரோ, அம்ருதத்தை அமரர்கள் சூழநின்று காக்குமாபோலே காண் என்னைப்பிரிந்த ஸமநந்தரம்

(க) உரு. § (பா) ரத்நாதிகளாலே.

பரிகரம்வந்து சூழ்ந்துகொண்டபடி இதுகாணென்கிருள். (௧) "𑌭𑌕𑍍𑌤𑍈𑌰𑍍𑌭𑌾𑌗𑌵𑌤𑍈𑌸𑍍𑌸𑌹 - பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ" என்றும், (௨) "வைகுந்தத்தமரரும் முனிவரும்" என்கிறபடியே - நித்ய ஸூரிகளைச்சொல்லுகிறது. (பெருந்தவத்தர்) பகவத்ப்ரேமத்தாலே அதிசயித்தவர்கள். (௩) "வணக்குடைத்தவநெறி" என்று - பக்தியைத் தபஸ்ஸப்தத்தாலே சொல்லக்கடவதிறே. (அருந்தவத்துமுனிவர்) † அவனும் அவர்களுமாய்க்கொண்டு பரிமாறும் பரிமாற்றமே தங்களுக்குப் போகமாயிருக்குமேற்ற முண்டிறே - இவர்களுக்கு. (சூழ) அதுவுமாமிறே, தங்களுடைய சேஷத்வத்தையும் அவனுடைய ஸ்வாமித்வத்தையும் உணர்ந்திருக்குமவர்களாகில், பரிவராய்க்கொண்டு ஒருவர்கிட்டவொண்ணுதபடி எங்கு மொக்கச் சூழ்ந்து நிற்கையாலும் கிட்டப்போயிற்றில்லை.

(ஒருகையித்யாதி) பரிகரத்தை ஒருபடி நீஞ்சிச் சென்றுமேயாகிலும் கிட்டவொண்ணுதபடி காண், (௪) "சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு" என்கிறபடியே அவர் தாம் அநபிபவநீயராயிருக்கிறபடி. (ஒருகையில்சங்கு ஒருகைமற்றுழியேந்தி) என்றிறே மேன்மைக்கெல்லை, (௫) "வடிவார் சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு" என்ற பெரியாழ்வாரைப்போலேகாணும் இவர்களும் மங்களாசாஸநம் பண்ணுகிறபடி. (ஒருகையிற் சங்கித்யாதி) என்கையைப் பிடித்தகையும் என்காலைப் பிடித்தகையுங் காண் அவர்களுக்கு ப்ராப்யமாயிற்றென்கிருள். அக்கைக்கு என்னவயவங்கள் ப்ராப்யமானாற்போலே காண் அவர்களுக்கு அக்கை ப்ராப்யமா யிருந்தபடி. கலந்தபோதைநீர்மைபோலேகாண்பிரிந்த போதைமேன்மையிருந்தபடி. அப்போதை நீர்மைக் கெல்லையில்லாதாப்போலேகாண் போகிறபோது மேன்மைக்கு எல்லையற்றிருந்தபடி.

(உலகுண்டபெருவாயர்) இத்தால் - ப்ரளயாபத்ஸகனைச் சொல்லுகிறதன்று; வந்துகலந்தான் சக்ரவர்த்தித் திருமகனுகையாலே தத்ஸ்வபாவத்தைப் பற்றச் சொல்லுகிறது. ப்ரளயகாலத்திலே ஜகத்துக்குத் தம்மையொழியச்செல்லாதாப்போலேகாண் என்னோடு கலக்கவருகிறபோது அவர்வந்தபடியென்கை. (இங்கேவந்து) அவர்

---

(பெருந்தவத்தர்) என்றத்தைப்பற்ற - குணநிஷ்டரான முனிவர்க்குப் பெறுதற்கரிய தபஸ்ஸேதென்ன; அருளிச்செய்கிருர் § (அவனும் அவர்களுமித்யாதி). ... ... ... ... ... (௨௪)

---

(௧) சை-பு.
(௨) தி-வாய்-௧௦-௩-௩.
(௩) ,, ௧-௩-௫.
(௪) தி-வாய்-௫-௫-௧௦.
(௫) தி-பல்-௨.
§ இங்கு பங்க்திவிட்டுப்போயிருக்கலாம்.

வரவாலே அவரை யநுபவிப்பதென்னு மிடந்தோற்றுகிறது. விஷயீகரிக்கைக் கவதரித்தாற்போலே போகமும் அவர்வரவாலேயென்கை.

(பொருகயல் கண்ணீரரும்பப் புலவிதந்து) அவர்வந்து கலந்தத்தால் நான்பெற்றபேறு இதுகாணென்கிருள். (பொருகயல்கண்) ஒன்றுக்கொன்று உபமாநமாவ தொழிய வேறுபமாநரஹிதமான கண்கள்: (கயற்கண்) என்று - ஸம்ஶ்லேஷதசையில் ஹர்ஷத்தாலே வந்த அலமாப்பைச் சொல்லுகிறது. (நீரரும்ப) சோகாஶ்ருவுக்கிலக்காயிற்றென்கிருள். (அரும்ப) விரஹாக்நியாலே உள்ளுலர்ந்து கிடக்கிறபடி. (புலவிதந்து) தன்னைக்கிட்டினுரை, (க) "வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனம்" என்கிறபடியே ஆநந்திப்பிக்கக்கடவவன்காண் எனக்கு துக்கத்தை விளைத்தான். (தந்து) அவர் தம்முடைய கிழிச்சீரையினின்றும் அவிழ்த்துத் தந்த தநமிதுகாணென்கிருள். தான் ஸாதித்ததொன்றன்றியே ஈஶ்வரனுடைய ஔதார்யத்தாலே வந்ததாகையாலே (தந்து) என்கிருள். (புனலரங்கமித்யாதி) தாம்போனல் நான் தரித்திருக்கவேணுமென்று பார்த்து, (நம்மூர்கோயில்) என்று போனுர்.

[உலகுண்டபெருவாய ரிங்கேவந்து என் பொருகயற் கண்ணீரரும்பப் புலவிதந்து, இலங்கொலி நீர்ப்பெரும் பௌவம்மண்டியுண்ட பெருவயிற்ற கருமுகிலே யொப்பர் வண்ணம் - பெருந்தவத்தரருந்தவத்து முனிவர்சூழ - ஒருகையிற் சங்கொருகைமற்ருழியேந்தி - புனலரங்கமூரென்று போயினுர் - இருகையிற்சங்கிவை நில்லா எல்லேபாவம்] என்றந்வயம். ... ... (உச)

மூ.—மின்னிலங்குதிருவுருவும்பெரியதோளும்
கரிமுனிந்தகைத்தலமுங்கண்ணும்வாயும்
தன்னலர்ந்தநறுந்துழாய்மலரின்கீழே
தாழ்ந்திலங்குமகரஞ்சேர்குழையுங்காட்டி
என்னலனுமென்னிறைவுமென்சிந்தையும்
என்வளையுங்கொண்டென்னையாளுங்கொண்டு
பொன்னலர்ந்தநறுஞ்செருந்திப்பொழிலினூடே
புனலரங்கமூரென்றுபோயினுரே. (உரு)

பதம். மின் இலங்கு, திருவுருவும், பெரியதோளும், கரிமுனிந்த, கைத்தலமும், (ரு) கண்ணும், வாயும், தன், அலர்ந்த, நறும், (கo) துழாய்மலரின் கீழே, தாழ்ந்து, இலங்கு, சேர், மகரக்குழையும்காட்டி, (கரு) என்நலனும், என்நிறைவும், என்சிந்தையும், என்வளையும்கொண்டு, என்னை ஆளுங்கொ

(க) தி-வாய்-ச-ரு-ரு.

ண்டு, (உ0) பொன் அலர்ந்த, நறு, செருந்திப்பொழிலினூடே, புனல் அரங்கம், ஊரென்றுபோயினர். (உரு)

உரை. மின்போலே விளங்காநின்றுள்ள, திருமேனியும், பெரிய திருத்தோள்களும், (குவலயாபீடமென்கிற) யானையை நிரஸித்த, திருக்கைகளும், (ரு) திருக் கண்களும், திருவதரமும், தன்னிலத்திற் காட்டில், செவ்வி பெற்று, மிக்க பரிமளத்தையுடைத்தான, (க0) திருத்துழாய் மாலையின்கீழே, திருத்தோ ளளவும் வரத்தாழ்ந்து, விளங்கா நிற்பதாய், ஒன்றோ டொன்று பொருந்தியிருந்துள்ள, திருமகரகுண்டலங்களையுங்காட்டி, (கரு) என்னுடைய ஸௌந்தர்யத்தையும், என்னுடைய ஸ்த்ரீத்வத்தையும், என்னுடைய மநஸ்ஸையும், என் வளையையுங்கொண்டு, என்னையடிமையுமாக்கிக்கொண்டு, (உ0) பொன்போலே யலர்ந்ததாய், பரிமளிதமாயிருந்துள்ள (பூவையுடைத்தான), செருந்திப் பொழிலிலே, ஜலஸம்ருத்தியையுடைய ஸ்ரீ ரங்கம், நம்மூரென்று சொல்லிப்போய்விட்டார். (உரு) ... ... ... (உரு)

வ்யா.—இருபத்தஞ்சாம்பாட்டு. (மின்னிலங்கித்யாதி) அந்தலையிலுள்ளத்தை நேராகக்காட்டி இத்தலையிலுள்ளத்தை நேராகக் கொண்டுபோனானென்கிறாள்.

(மின்னிலங்கு திருவுருவும்) மின்போலே விளங்கா நின்றுள்ள திருமேனியும் † (க) "கார்வண்ணந் திருமேனி" என்றும், (உ) "கருமுகிலேயொப்பர் வண்ணம்" என்றும் ஔதார்யத்தையும் ஶ்ரமஹரதையையும் பற்றச்சொல்லிற்றுக் கீழ்; இங்கு அநுபவநீயதையைப்பற்றச் சொல்லுகிறது. † ஆனாலும் வடிவுக்கு நிறம் அதுவன்றோ †வென்னில்; † காளமேகத்தை அருணகிரணத்தாலே வழியவட்டினாற்போலே திருவாழி யாழ்வானுடைய தேஜஸ்ஸு திருமேனியெங்குமொக்கப் பரவியிருக்கையாலே சொல்லுகிறது. (ந) "வடிவார்சோதி வலத்துறையுஞ் சுடராழி" என்னக்கடவதிறே. (க) † "ஒருகையிற்சங்கு ஒருகைமற்றாழியேந்தி" என்று

---

இருபத்தஞ்சாம்பாட்டு. (மின்னிலங்கு) (க) "கார்வண்ணந்திருமேனி" என்றும், (உ) "பெருவயிற்றகருமுகிலே யொப்பர்வண்ணம்" என்றுஞ் சொல்லிவைத்து, இங்கே மின்னிலங்கக்கூடுமோ வென்ன; பரிஹாரத்ரயம்; ப்ரதமம் (கார்வண்ணமித்யாதி). த்விதீயம் (காள்மேகத்தையித்யாதி). வடிவுக்கு நிறம் அது என்றாலுமென்று அந்வயித்துக்கொள்வது. (என்னில்) என்றசங்கையிலே தாத்பர்யமில்லை. இப்பாட்டில் திருவாழி யாழ்வான் ப்ரஸங்கமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (ஒருகையில் சங்கித்யாதி). இந்தபாத

---

(க) கஅ. (உ) உச.
(ந) திருப்பல்-உ.

ரிறே இமே; (க) † “తమసఃపరమోధాతా శఙ్ఖచక్రగదాధరః- தமஸஃபரமோதாதா சங்கசக்ரகதாதர:” என்கிற பெரியமேன்மையைக் காட்டினபடி. (மின்னிலங்கு திருவுருவும்) † கிட்டினபோது, (உ) “பெருவயிற்றகருமுகிலே” என்றுள் ; பேரநின்றவாறே பளபளத்துத் தோற்றினபடி.. (பெரியதோளும்) காலதத்வமுள்ளதனையு மநுபவியா நின்றாலும் அவயவாந்தரங்களில் போகவொட்டாதபடியான போக்யதையையும் காவல்துடிப்பையும் சொல்லுகிறது. † ஓதுங்குவார்க்கு நிழல்மிக்கிருக்கை. (ரு) “పరిఘోపమాః సర్వభూషణభూషార్హాః-பரிகோபமா: ஸர்வபூஷணபூஷார்ஹா:” என்கிறபடியே - வீர சிஹ்நத்தையும்போகசிஹ்நத்தையுமுடைத்தான தோளென்கை. (ச) “చకాసతమ్-சகாஸதம்” இதி”. (ரு) “கைவளையும் மேகலையுங் காணேன்” என்று - விரோதிநிவர்த்தகத்வத்தையும், “நான்குதோளும்” என்று - போக்யதையையும் இவள்தானே சொன்னாளிறே.

(கரிமுனிந்த கைத்தலமும்) குவலயாபீடத்தை வேண்டோமென்று நினைப்பிட்டகையும். † கம்ஸனையும் சாணூரமுஷ்டிகர்களையும் நிரஸிக்கிறபோதை வ்யாபாரமெல்லாம் இதுக்குவேண்டிற்றில்லையிறே. இத்தால் - வீரசிஹ்நத்தையும்போகசிஹ்நத்தையுமுடைத்தான கையென்கை. (சூ) “புகர்ச்செம்முகத்த களிறட்டபொன்னாழிக்கை” என்கிறபடியே. (கையும்) அறுகாழியோடேகூடியிருக்கிறகையாலேயிறே குவலயாபீடத்தை நிரஸித்தது. (எ) “எய்வண்ணவெஞ்சிலையே துணையா” என்று - வீரசிஹ்நத்தையும், (எ) “கைவண்ணந்தாமரை” என்று - போகசிஹ்நத்தையுங்காட்டினான்.

(கண்ணும்) கிட்டினாரை ஓடியெறியுங்கண்ணும். (எ) “கண்ணிணையும் அரவிந்தம்” என்றாளிறேதானே. (வாயும்) அழகுக்குத்தோற்று அநந்யார்ஹமானாைக் குறித்துத் தான் அநந்யார்ஹமானமைதோற்ற ஸாந்த்வவாதம் பண்ணும் திருவதரமும். (எ) “வாய்கமலம்போலும்” என்றாளிறே.

(தன்னலர்ந்த) இத்தால் - ஒப்பனையழகு சொல்லுகிறது. தன்னிலத்திற்காட்டில் செவ்விபெற்று அதிபரிமளிதமான திருத்துழா

---

த்துக்கு அர்த்தம் - (தமஸஃபரமோதாதா இத்யாதி). த்ருதீயம் (கிட்டினபோதித்யாதி). காவல்துடிப்புஎன்றதின்விவரணம் (ஓதுங்குவார்க்கித்யாதி). சிஹ்நத்வயத்துக்கும் ப்ரமாணம் (சகாஸதம்) என்று.

(முனிந்த) என்றதுக்குத்தாத்பர்யம் (கம்ஸனையுமித்யாதி).

---

(க) ரா-யு-கககூ-கடு.
(உ) உச.
(ரு) ரா-இ.
(ச) ஸ்தோ-ர-ருரு.
(ரு) உஉ.
(சூ) தி-வாய்-அ-க0-கூ.
(எ) உக.

யாலே அலங்க்ருதமானவளையத்தின்கீழே: (மலரின்கீழேதாழ்ந்தில ங்கு மகரமித்யாதி) வைத்தவளையத்தின்கீழே திருத்தோளளவும் வரத் தாழ்ந்து பரபாகரூபத்தாலே விளங்காநின்றுள்ள திருமகரக் குழையையும் காட்டி. பிரிந்த்துக்குமேலே † திருவடி திருத்தோ ளிலேயேறி இவள்முன்னே சாரிகைவந்து தனக்குள்ளத்தையடை யக் காட்டி இங்குள்ளத்தையடையக் கொண்டானென்கிறாள். இத் தால் - ஒப்பனையோடு ஆபரணத்துக்குண்டான சேர்த்தியழகு சொ ல்லுகிறது.

(என்நலனுமித்யாதி) ஸர்வஸ்வதாநம் பண்ணுவாரைப்போலே வந்து ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினனென்கிறாள். (என்னலனும்) என்னுடைய ஸௌந்தர்யஸௌகந்த்ய ஸௌகுமார்யாதி ரூபங்களை யும். நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்கிற ஆத்மகுணங்களையும். நலம் - குணம். என்நலம் - ஒருவரா லழிக்கவொண்ணாத நலம். எதிர்த்தலையைத்தானழிக்கு மித்தனையொழியத் தன்னை ஒருத்த ராலு மழிக்கவொண்ணாதபடி யிருக்கை. (என்நிறைவும்) என்னு டைய ஸ்த்ரீத்வமும். எதிர்த்தலையில் பும்ஸ்த்வத்தை யழிக்கும்படி யிறே இவளுடைய ஸ்த்ரீத்வ மிருப்பது. (நிறைவு) அடக்கம். (என் சிந்தையும்) அதுக்கடியான மநஸ்ஸையும். (என்வளையுங்கொண்டு) தான்போனல் ஆஶ்வாஸஹேதுவா யிருக்கிற வளையுங்கொண்டு.

(என்னையாளுங்கொண்டு) †என்ஸர்வஸ்வத்தையு மபஹரித்துக் கொண்டுபோகையன்றியே சுமையாளும் நானேயாகவேணுமோ? ஒருவ னகத்தேபுக்கு நேராகவொடுக்கி அவன்தலையிலே சுமையை வைத்துக்கொண்டு போமாபோலே. அங்ஙனன்றியே, அவனோடே கலந்து பரிமாறின பரிமாற்றத்தை அடிமையாக நினைத்திருக்கை யாலே என்னை யடிமையுங்கொண்டா னென்கிறாளாகவுமாம். (க) "கொம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல்" என் னக்கடவதிறே. அங்ஙனன்றியே, ஸர்வஸ்வத்தையுமபஹரித்துக் கொண்டு போகாநின்றால் "தன்னுடைமையைத் தானேகொண்டு போகிறானாகில் நீயென்" என்னும்படி என்னை அநந்யார்ஹமாக்கியும் போனானென்கிறாள்.

(உ) "புள்ளூருங்கள்வா" என்றத்தைப்பற்ற (திருவடி திருத்தோளிலே யித்யாதி.)

(என்னையாளுங்கொண்டு) என்றதுக்கு முந்தினவர்த்தம் - என்னையடி மைகொள்ளவேணுமோவென்று வெறுப்பிலே;

(க) நா-தி-௧௩-௧. (உ) உ௩.

(பொன்னித்யாதி) ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினேனும், ஸத்தை கிடக்கவேணுமே யென்று ஊரைச்சொல்லிப்போனுனென்கிறுள். தன்ஸௌகுமார்யத்துக்கு அநுரூபமாகச் சோலையூடேபோனுன். பொன்போலேயலர்ந்து பரிமளிதமாயிருந்துள்ள பூவையுடைத்தான செருந்திப்பொழிலினூடே ஶ்ரமஹரமான கோயில் நம்மூரென்று போயினுர். † திருநகரியில் நின்றும் கோயிலளவுஞ் செல்லப்பொழிலாய்க் கிடந்ததோவென்னில்; "ஒருகாளமேகம் வர்ஷித்துக்கொண்டு போகாநின்றுல் கண்டவிடமெங்கும் தளிரும் முறியுமாகாதோ" என்று பட்டரருளிச்செய்வர். † பிரிந்தார் இரங்கும் நிலத்தில்மரம் செருந்தியிறே.

(போயினுரோ) முன்பைக் காற்கடைகொண்டு பெறவேண்டும்படிகாண் போகிறபோது அவர் பின்புறமிருந்தபடி. (புனலரங்கம்) ஶ்ரமஹரமானதேசம். நித்யஸம்ஶ்லேஷம் பண்ணலாம்தேசம். (போயினுரோ) பரமபந்துவாயிருந்துவைத்து இப்படிசெய்தார்காணென்னும் இன்னுப்பாலே; பிரியாதேகூடவிருத்தல் போகிறபோது கூடக்கொண்டுபோதல் செய்யவேண்டாவோ வென்கிறுளாகவுமாம். (பொன்னித்யாதி) புஷ்பாபசயம் பண்ணுகைக்கும் ஜலக்ரீடைபண்ணுகைக்கும் ஏகாந்தமான தேசம் நம்மூரென்று போயினுரென்னவுமாம். (பொழிலினூடேபுனல்) மேல்செருந்தியாய் கீழ்நீராயிருக்கை. போகிறபோது அவர்பின்பிருந்தபடி காணப்பெற்றதில்லைகாண்நீ. † விக்ரமசோழதேவன், "உங்கள் தலைமகள் பிரிந்தவிடத்தில் சொன்னகவியென்" என்ன; "'அவள், எலும்புஞ் சாம்பலுமுடையவன்' என்றுள்; இவள் 'மின்னிலங்குதிருவுருவம்' என்றுள்" என்ன; "தன்காலிலே துகை யுண்டவனைத் தோழிக்குச்சொல்லாநிற்க (திருவுரு) என்பதே! இவள் தலைமையுடையவள்; அவள் பிணந்தின்னி" என்றுன். ... ... ... ... (உரு)

மூ.—தேமருவுபொழிலிடத்துமலர்ந்தபோதைத்
தேனதனைவாய்மடுத்துஉன்பெடையும்நீயும்
பூமருவியினிதமர்ந்துபொறியிலார்ந்த
அறுகாலசிறுவண்டேதொழுதேனுன்னை

---

• திருநகரியென்றது - திருவாலி திருநகரியென்றபடி. அல்லாத்மரங்களுமுண்டாயிருக்க வழியெல்லாம் செருந்தியாயே யிருக்கிறதென்று இவள் சொல்லும்படி யென்னென்ன; அருளிச்செய்கிறுர் (பிரிந்தாரிரங்கும் நிலத்தில்த்யாதி).

ப்ராஸங்கிகம் (விக்ரமசோழனித்யாதி.) ... ... ... (உரு)

ஆமருவிநிரைமேய்த்தவமரர்கோமான்
அணியழுந்தூர்நின்ருனுக்கின்றேசென்று
நீமருவியஞ்சாதேநின்ருேர்மாது
நின்னயந்தாளென்றிறையேயியம்பிக்காணே. (உசு)

பதம். தேமருவு, பொழிலிடத்து, மலர்ந்தபோதை, தேனதனை, வாய் மடுத்து, (ரு) உன்பெடையும், நீயும், பூமருவி, இனிது அமர்ந்து, பொறியிலார்ந்த, (கo) அறுகால, சிறுவண்டே, உன்னைத்தொழுதேன், அமரர்கோமான், ஆநிரை, (கரு) மருவிமேய்த்த, அணியழுந்தூர்நின்ருனுக்கு, இன்றேசென்று, நீமருவி, அஞ்சாதேநின்று, (உo) ஓர்மாது, நின்நயந்தாளென்று, இறைஇயம்பிக்காண். (உரு)

உரை. எப்போதும்தேன்பரிபூர்ணமாயிருக்கிற, பொழிலையுடைய தேசத்திலே, பூஅலர்ந்தபோதுண்டான, தேனைப், பாநம்பண்ணி, (ரு) உன்னுடைய ஸ்த்ரீயும், நீயும், புஷ்பங்களிலே பொருந்தி, ஸுகமாகஸம்ஶ்லேஷித்து, புள்ளிமிக்கிருப்பதாய், (கo) ஆறுகால்களையுடைய, சிறியவண்டே! உன்னையாஶ்ரயித்தேன்; நித்ய ஸூரி நிர்வாஹகனுயிருக்குமவனுய், பசுக்கூட்டங்களை, (கரு) பொருந்திரக்ஷித்தவனுய், திருவழுந்தூரிலே நின்றவனுக்கு, இன்றைக்கேபோய், நீ அவனிடத்தில் பொருந்தி, அஞ்சாமல் எதிரேநின்று, (உo) ஒரு ஸ்த்ரீயானவள், உன்னை ஆசைப்படாநின்ருளென்று, ஒருவார்த்தை சொல்லவேணும். (உரு) ... ... ... ... ... (உசு)

வ்யா.—இருபத்தாரும்பாட்டு. (தேமருவு)அவன், இவளுடைய வாற்ருமை ஸ்வக்ருஷியின் பலமாகையாலே அதிலே முகமலர்ந்து கடக்கநிற்கையாலும், தாயார், ஹிதஞ் சொல்லு மளவல்லாமையாலே ஶ்லாகித்துக் கடக்க நிற்கையாலும், தோழி, "இவ்வளவில் இவளை ஆஶ்வஸிப்பிக்கும் விரகேதோ?" என்று பார்த்து, பூர்வவ்ருத்தத்தைக் கேட்க, வ்ருத்தகீர்த்தநமாகையாலே தரித்து அத்தை இரண்டுபாட்டாலே இவளுக்குச் சொன்னுள்; பின்பும் அங்கே ஓரவகாசங்கண்டு "இப்படி உனக்கு பவ்யனுயிருந்தால் பிரிகிறபோது 'போகாதேகொள்' என்று ஒருவார்த்தை சொல்லமாட்டிற்றிலேயோ?" என்ன; "அதுவுஞ் சொன்னேன், அவன் பரப்ரேரிதனுய்ப்போகையாலே இது கார்யகரமாயிற்றில்லை" என்ருள், மூன்ரும்பாட்டாலே; "கொண்டுபோனவன் றன்னை நியமிக்கமாட்டிற்றிலேயோ?" என்ன; "ஒருவரிருவரோ? பரிகரமெல்லாம் வந்து சூழ்ந்துகொண்டது" என்ருள், நாலாம்பாட்டாலே; அது தன்னை நிகமித்துவிட்டாள்; அஞ்சாம்பாட்டாலே - "ஸர்வஸ்வதாநம்பண்ணுவாரைப்போலேவந்து அந்தலையிலுள்ளத்தை நேராகக்காட்டி

இத்தலையிலுள்ளத்தை நேராகவபஹரித்துக்கொண்டு போகிறவர் என்ஸத்தைகிடக்கவேணுமென்று ஊரின்பேரைச் சொல்லிப்போனார்" என்றாள்; ஆறும்பாட்டாலே-ப்ரஸ்நமில்லாமையாலே ப்ரதிவசநமில்லையாய்ப் பழையவாற்றாமைதலையெடுத்து"நம்முடையவாற்றாமை யறியாமையாலே வாராதொழிகிறானித்தனை, அத்தையறிவிக்கவே ஸர்வதாவரும்" என்று பார்த்துச் சிலவண்டுகளைத் தூது விடுகிறாள்.

தன்னுடைய பந்துவர்க்கம் தனக்குமுன்னே தரைப்பட்டுக் கிடக்கையாலும், சேதநர் தூதுபோனவிடத்தில் அது கார்யகரமாகக் காணாமையாலும், ராமாவதாரத்திலே திர்யக்குக்கள் தூதுபோனவிடத்தில் கார்யகரமாகக்காண்கையாலும், திர்யக்குக்களைத் தூது போகவிடுகிறாள். பரமசேதநனான க்ருஷ்ணன் தூதுபோனவிடத்தில் ஊர்ப்பூசல்விளைத்துவந்தானித்தனையிறேசெய்தது. ஆனால் குரங்கைத் தூதுவிடாதே வண்டைத் தூதுவிடுவானென்னென்னில்; அங்கு-பெண்தூதாகையாலே விரக்தனுமாய் ஸமர்த்தனுமாயிருப்பானொருத்தன் தூதுபோக வேண்டிற்று; இங்கு-விஶ்லேஷத்திலாற்றாமையறிவாரைப் போகவிடவேண்டுமாகையாலும், இவை தன்னுடைய ஸந்நிதியிலே கலந்து ஸுகித்திருக்கக் காண்கையாலும் இவற்றைத் தூதுவிடுகிறாள். ஆனால் கலவியிலே ப்ரவணமாயிருக்கிறவிவை போகக் கூடுமோவென்னில்; ஆத்மஸாம்யத்தாலே சொல்லுகிறாள். தானுமவனும் ஸம்ஶ்லேஷிக்குமளவில் சிலது:கிகள் கூடினால் (க) "𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 - ப்ராஹ்மணேப்யோவிசேஷத:" என்று அவர்கள்கார்யத்தை முடித்தபின்பிறே தங்கள்போகத்தி லிழிவது. ப்ரதமத்தில் வண்டுகளைக்கொண்டாடுகிறாள் தனக்கிரங்கிக் கார்யஞ் செய்கைக்காக.(உ) "𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌗𑌰𑌵𑌃 𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌾𑌃-ப்ரத்யக்ஷேகுரவ:ஸ்துத்யா:" என்று கடகரை ஸ்துத்யராகச் சொல்லக்கடவதிறே.

(தேமருவுபொழிலிடத்து) தேன்மாறாத பொழிலையுடையதேசத்திலே. மருவுகையாவது - † என்றுமொக்க வுண்டாயிருக்கையும், ஸம்ருத்தமாயிருக்கையும். பொழிலென்கையாலே - ஶ்ரமஹரதையைச் சொல்லுகிறது. பரமபதத்துக்கு மேற்றம் என்று மொக்கவுண்டாயிருக்கையும், ஸம்ருத்தமாயிருக்கையும், தாபஹரமாயிரு

இருபத்தாறும்பாட்டு. (தேமருவுபொழில்) (தேமருவு) என்றவர்த்தமாநத்தாலே - என்று மொக்கவுண்டாயிருக்கை.

(க) ரா - ஆர - கo - கக. . (உ)

க்கையுமிறே. உங்களுக்கு அந்தபோகஸ்த்தாநத்திலிருப்பு போகமாவது என்னையும் போகஸ்த்தாநத்திலே யிருத்தினாலன்றோவென்கை. (மலர்ந்தபோதைத் தேனதனைவாய்மடுத்து) அபிநவமாய் அதிரஸமாயிருந்துள்ளதேனைப் பாநம்பண்ணி. கழியவலர்ந்தால் பர்யுஷிதமாய்த் தேன் அல்பமுமாய்ப் பழசுமாயிருக்கும்; கடுமொட்டாயிருந்தால் தேன் உத்பந்நமாகிறவளவாகையாலே அல்பமுமாய், வலியவலர்த்துகையாலே ஸாரஸ்யமுங்குறைந்திருக்கும்; ஆகையாலே அலருகிறபோதைத் தேனென்கை. காற்றாலே அலரக்கடவ புஷ்பம் இவை செல்லும்போதாக வலருமோ வென்னில்; முன்பு தொட்டாரோடே தோஷமாம்படி பக்வமாயிருக்கையாலே இவற்றின் சிறகின்காற்றாலும் உச்வாஸத்தாலும் மலருமென்கை. (க) "பூவிரிய மதுநுகரும்" என்னக்கடவதிறே. செவ்வியறியாதே பொகட்டுப்போனவரைப்போலேயன்றியே நீங்கள் செவ்வியறிந்து அநுபவிக்கப் பெற்றேனென்கை. என்னையுஞ் செவ்வியழியாதே அவனோடே சேர்த்தபோதன்றோ நீங்கள் செவ்வியறிந் தநுபவித்திகோளாவது. (வாய்மடுத்து) பர்த்ருபார்யைகள் ஒருகலத்திலே உண்பாரைப்போலே அத்தேனை வாயிலேகொண்டு அந்யோந்யம்வாயிலே கொடாநிற்கை; அந்யோந்யம்போகத்துக்கு வர்த்தகமாயிறே தேனிருப்பது. என்னையும் அவனோடே சேர்த்து, (உ) "ఇదంమేధ్యమిదంస్వాదు-இதம்மேத்யமிதம்ஸ்வாது" என்னும்படி பண்ணவேண்டாவோ வென்கை.

(உன்பெடையும் நீயும்) உனக்கு பவ்யமானபெடையும் அதுக்கு பவ்யமான நீயும். உன் (*) சந்தத்தை யநுவர்த்திக்கும் பெடையும் அதின் (*)சந்தத்தை யநுவர்த்திக்கும் நீயும். அவனைப்போலேசந்தத்தை யறியாதொழிகையன்றியே நீங்கள் சந்தாநுவர்த்திகளாய்ப் பரிமாறப்பெற்றதே! (உன்பெடையும் நீயும்) சேரவிருப்பார் பிரிந்திருப்பார் கார்யஞ்செய்யவேண்டாவோ? நீங்களும் †என்னைப்போலே பிரிந்திருந்து உங்களைச் சேரவிடவேண்டாதே போரப்பெற்றதே! என்கிறாள். மஹாராஜர் ராஜ்யதாரங்களை யிழந்திருக்கையாலே அத்தைச் சேரவிட்டுக் கார்யங்கொள்ளவேண்டிற்றிறே.

(பூமருவி) அக்நியிலே அணைவாரைப்போலே இதென்னஸாஹஸமென்கிறாள். (ங) * மென்மலர்ப்பள்ளிவெம்பள்ளியாயிறே தனக்கிருப்பது. அக்நிஸ்தம்பநமுடையார்க்குச் செய்யலாமிறே. அக்நி

(உன்பெடையும் நீயும்) என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னைப்போலேயித்யாதி).

(க) தி - மொ - ௬ - ௬ - க. (ங) தி - வாய் - ௯ - ௯ - ௪.
(உ) ரா - அயோ - ௯௬ - உ.

ஸ்தம்பநமாவது - மிதுநமாயிருக்கையிறே. படுக்கைபொருந்தாதே தரைக்கிடைகிடக்கிற வென்கார்யஞ்செய்தாலன்றோ உங்களுக்குப் படுக்கைபொருந்திற்றுவது. "ஶ்ரமஹரமானசோலை போகஸ்தாநமாகவும், மது போக்யமாகவும், பூ படுக்கையாகவும், தம்பதிகள்சேரவிருக்கவும்பெறுவதாய் இதொரு ஆஶ்சர்யமிருந்தபடி யென்!" என்கிறாள். (இனிதமர்ந்து) இனிதாகவமர்ந்து; ஸுகரூபமாக ஸம்ஶ்லேஷித்து. துக்கரூபமான கலவியிறே தன்னது. ஸம்ஶ்லேஷாநந்தரம் விஶ்லேஷிக்கையாலே, (க) "இது நமக்கோர் புலவிதானே" என்றுளிறே. உங்களுக்கு அது ஸுகரூபமாவது என் துக்கத்தைப்போக்கினாலன்றோ?

(பொறியிலார்ந்த) பொறியென்று - புள்ளி. புள்ளிமிக்க. ஸம்ஶ்லேஷத்தால் வடிவிற்பிறந்தபுகரைச்சொல்லுகிறது. (உ) "𑌯𑍁𑌵𑌾 𑌕𑍁𑌮𑌾𑌰𑌃-யுவாகுமாரஃ" (ந) "𑌯𑍁𑌵𑌤𑌿𑌶𑍍𑌚 𑌕𑍁𑌮𑌾𑌰𑌿𑌣𑍀 - யுவதிஶ்சகுமாரிணீ" என்கிற பருவத்தையுடைத்தாயிருக்கை. உபவாஸக்ருஶையாய்(ச)"𑌭𑍂𑌷𑌣𑌾𑌰𑍍𑌹𑌾𑌨𑌶𑍋𑌭𑌤𑍇-பூஷணார்ஹாநஶோபதே"என்னும்படியிருக்கிற வெனக்கு அழகையுண்டாக்கினாலன்றோ உங்களுக்கு அழகாவது. (அறுகாலசிறுவண்டே) "த்விபாத்தாயிருத்தல், சதுஷ்பாத்தாயிருத்தல் செய்கையன்றியே, கமநஸாதநமான கால்கள் ஆறுண்டாகப் பெற்றேனென்கிறாள்" என்று பூர்வர்கள் நிர்வாஹம். "வண்டுக்கு கமநஸாதநம் சிறகாகையாலும், மேலே, (தொழுதேன்) என்கையாலும், என்தலையிலே வைக்கைக்கு ஆறுகாலுண்டாகப் பெற்றேனென்கிறாள்" என்று பட்டரருளிச்செய்வர். (சிறுவண்டே) ஏற்கவே சிறியையாய்; திருவடியைப்போலே கார்யகாலத்திலே சிறகவேண்டாவே யுனக்கு. (வண்டே) திருவடியைப்போலே ஆராய்ச்சிப்படவேண்டாதபடி வளையத்தேயாதல், தோளில் மாலையிலே யாதலிருந்து வார்த்தைசொல்லும்படியான ஜந்மமன்றோ உன்னது. அந்யோந்ய ஸம்ஶ்லேஷ ஸுகத்தாலே மதிகெட்டுக்கிடக்கிறவற்றின் செவியிலே ஆர்த்தத்வநிபட்டவாறே அக்நிகணங்களைத் தூவினாற்போலே அவை துணுக்கென்று எட்டிப்பார்த்தன. (தொழுதேனுன்னை) உன்காலிலே, தொழுதேன் - விழுந்தேன். கடகர்போலேகாணும் ஸ்துத்யரும், நமஸ்கார்யரும். (உன்னை) அவனைத்தொழுகிறேனல்லேன், அவன் பொகட்டுப்போன தசையிலும் ஆறுதல் பண்ணக்கவிருக்கிற வுன்னைத்தொழுதேன். அவனுமுண்டாய் நானு

---

(க) உ௩.  (ந)
(உ)  (ச) ரா - ஸு - கசு - உக.

முண்டாயிருக்கப் பிரிந்து க்லேசப்படாநின்றேன், சேரவிட்ட நீயன்றே ஸ்துதிக்கப்படுவாயும் நமஸ்கரிக்கப்படுவாயும். இவளுடைய (க) * அத்ரபரத்ரசாபி-அத்ரபரத்ரசாபி இருக்கிறபடி.

என்னைத் தொழுகிறதென், கார்யத்தைச் சொல்லலாகாதோவென்னச், சொல்லுகிறாள், (அமரர்கோமான்) * அயர்வறுமமரர்களதிபதிக்குச் சென்று அறிவியுங்கோள். அவனை எங்களால் கிட்டலாமோவென்ன; (ஆமருவினிரைமேய்த்த)அம்மேன்மை கிடக்கச் செய்தேகாண் பசுக்களோடே பொருந்திப் பசுக்களை ரக்ஷிப்பது. நித்ய ஸூரிகளுக்குத் தன்னை யொழியச்செல்லாதாற்போலேகாண் பசுக்களையொழியத் தனக்குச் செல்லாதே குடியிருக்கும்படியும். அவர்களுக்குத் தன்னையொழியச்செல்லாதபடியாலே முகங்காட்டுகிறுனித்தனை; பசுக்களோடேகாண் அவனுக்குப் பொருத்தம்.

அது பின்னை யொருகாலத்திலன்றோ வென்ன; (அணியழுந்தூர் நின்றானுக்கு) அக்காலத்தில் பசுக்களை ரக்ஷித்தாற்போலே அக்காலத்துக்குப் பிற்பாடராய்ப் பசுஸமரா யிருப்பாரையும் ரக்ஷிக்கைக்காகத் திருவழுந்தூரிலே நின்றான், அவனுக்கறிவியுங்கோள். அவன் பிரிகிறபோது, (உ) "புனலரங்கமூர்" என்று சொல்லிக் கோயிலிலே போயிருக்கத், திருவழுந்தூரிலே தூதுவிடுகை, (ங)"ಕರ್ಣೇಸ್ಪೃಷ್ಟೇ கடிம்சாலயதி-கர்ணேஸ்ப்ருஷ்டேகடிம்சாலயதி' என்கிறபடியேஅஸங்கதமன்றோ வென்னில்; அவனும் சேதநனகையாலேஎன்னோற்றாமையவனுக்கு முண்டாயிருக்கும், ஒருகார்யப்பாட்டாலே பிரிந்தானித்தனை, முடியப்போகமாட்டான், திருவழுந்தூரிலே பிற்காலித்து நிற்கக்கூடும், அங்கே சென்றறிவியுங்கோளென்கிறாள். அங்ஙனன்றியே, கோயில் போகஸ்த்தாநமாகையாலே என்னை யொழிய அங்கு தரிக்கமாட்டான், அத்தாலே எதிரே திருவழுந்தூரளவிலே வரும், அங்கே செல்லுங்கோளென்கிறாளாகவுமாம்.

(நின்றானுக்கு) அவ்வருகுபோகமாட்டாமையாலே ஸ்த்தாவர ப்ரதிஷ்டையாய் நின்றானென்னுதல்; கோயில்நின்றும் வந்து தான் மேல்விழமாட்டாமையாலே "இத்தலையில் நின்றும் ஆள்வருவார்" என்று பார்த்து நின்றானென்னுதல். (இன்றேசென்று) நானைச்செய்கிறோமென்னவொண்ணாது, நாளைக்கு நானில்லையென்கிறாள். நானில்லாமையாலே அவனுமில்லை, இரண்டுதலையும் பிழைக்கவேண்டியிருந்தீர்களாகில் இன்றேசெல்லுங்கோள். இரண்டுதலையும் அழிகை

(க) ஸ்தோ - ர - உ. (ங)
(உ) உசு.

யாவது - ஜகதுபஸம்ஹாரம் பிறக்கைபிறே. (நீமருவி) * ஆமருவி நிரைமேய்த்தவனுகையாலே திர்யக்ஜாதியான உனக்கு முகந்தரும், நீசென்றுகிட்டி. (நீமருவி) என்னைப்போலே அவனுடைய சீலாதிக்யத்தைதக்கண்டுவைத்தும், (க) "அவரை நாம் தேவரென் றஞ்சினோமே" என்று - அவர்பக்கலிலே * அதஸ்மிந்தத்புத்திபண்ணிப் பிற்காலியாதே அவனோடேபொருந்தி. (அஞ்சாதேநின்று) * அமரர் கோமானுயிருக்கிறபடியைப் பார்த்து அஞ்சாதே * ஆமருவி நிரைமேய்த்தபடியைப்பார்த்து, தரித்து நின்று. அங்ஙனன்றியே, (அஞ்சாதேநின்று) "மஹிஷிபக்கல்நின்றும் வந்தார்கள்" என்று தோற்றும்படி மேலிட்டு நின்று வார்த்தைசொல்லுங்கோ ளென்கிறாளாகவுமாம். மேலிட்டு வார்த்தைசொன்னபோதே என்பக்கல் நின்றும் வருகிறார்களென்றிருக்கும்.

அவனுக்கறிவிக்கும் வார்த்தையேதென்னச், சொல்லுகிறாள் மேல், (ஓர்மாது) பேர்சொல்லவேண்டா, "ஒருத்தி" என்னவமையும், தாமேயறிவர். "ஒருகாட்டிலே ஒருமான் அம்புபட்டுக்கிடந்து துடியாநின்றது" என்றால் எய்தவன் அறியுமிறே. அதவா, (ஓர்மாது) அத்விதீயையாயிருப்பாளொருத்தியென்று சொல்லுங்கோ ளென்கிறாள். "அத்விதீயையானமாது" என்றபோதேயறியும். † ஸம்ஸாரிகளுக்குங் கூட்டன்றியே, முக்தருக்குங் கூட்டன்றியே, முமுக்ஷுக்களுக்குங்கூட்டன்றியே, (உ) "பிறந்திட்டாள்" என்னும்படியிறே யிருப்பது.

(நின்நயந்தாள்) சென்றபோதே யறியும், வார்த்தை சொல்லவேண்டிற்றில்லை, ஓர்மாது என்றபோதேயறியும், இவ்வளவு போராது என்றிருந்தாயாகில் ஒருவார்த்தை சொல்லென்கிறாள். (நின்நயந்தாள்) படுகொலைபட்டாளென்று சொல்லுங்கோள். † ஒருகாபுருஷனையோ ஆசைப்பட்டது, ? வ்யதிரேகத்தில் ஆற்றவொண்ணாதபடியான வைலக்ஷண்யத்தையுடைய உன்னையன்றோ வாசைப்பட்டதென்று சொல்லுங்கோள். (நின்நயந்தாள்) "† பர வ்யூஹ விபவங்களிலே யாசைப்பட்டாளோ ஆறியிருக்கைக்கு" என்று சொல்லுங்கோள். (இறையே யியம்பிக்காணே) நீங்கள் வார்த்தைசொல்ல உப

---

(ஓர்மாது) என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகளுக்கு மித்யாதி).

தாத்பர்யம் (ஒருகாபுருஷனையோவித்யாதி.) த்ருதீயதாத்பர்யம் (பரவ்யூஹேத்யாதி). ... ... ... ... ... (உசு)

---

(க) உக. (உ) தி - வாய் - சு - டு - கo.

க்ரமித்தபோதே உங்களை முடியச்சொல்லவொட்டான், அவன்முன் உங்களைக்கொண்டாடுமென்கிருள். (இறையேயியம்பி) "ஓர்மாது" என்று சொன்னபோதே அவனறியும், (நின்நயந்தாள்) என்கிற விது வும் மிகையாம்படியா யிருக்குமென்னவுமாம். (காணே) நீ இவ்வள வுஞ்சொன்னபோதே அவன் உன்னைஸத்கரிக்கும் ஸத்காரமெல் லாம் காணவன்றேபுகுகிருய். (க) "த்⁴ருத: பரிரக்ஷித: - தர்மத:பரிர க்ஷித:" என்பது, (உ)"ஏஷ ஸர்வஸ்வபூ⁴தஸ்துபரிஷ்வங்க³:-ஏஷஸர்வஸ்வபூ தஸ்துபரிஷ்வங்க:" என்று தழுவிக்கொள்ளுவதாகவன்றே புகுகி ருன். (காணே) நான் காணப்பெருத வடிவையன்றே நீகாணப்பு குகிருயென்னவுமாம். (உரு)

மூ.—செங்காலமடநாராயின்றேசென்று
திருக்கண்ணபுரம்புக்கென்செங்கண்மாலுக்கு
என்காதலென்துணைவர்க்குரைத்தியாகில்
இதுவொப்பதெமக்கின்பமில்லை,நாளும்
பைங்கானமீதெல்லாமுனதேயாகப்
பழனமீன்கவர்ந்துண்ணத்தருவன்,தந்தால்
இங்கேவந்தினிதிருந்துன்பெடையும்நீயும்
இருநிலத்திலினிதின்பமெய்தலாமே. (உஎ)

பதம்.—செங்கால, மடம், நாராய், இன்றேசென்று, திருக்கண்ண புர ம்புக்கு, (ரு) என் செங்கண், மாலுக்கு, என் துணைவர்க்கு, என்காதல், உரை த்தியாகில், (க௦) எமக்கு, இதுவொப்பது, இன்பமில்லை, நாளும், இது, (கரு) பைங்கானமெல்லாம், உனதேயாக, பழனம், மீன், கவர்ந்து உண்ண, (உ௦) தருவன், தந்தால்,உன்பெடையும்நீயும், இங்கேவந்து, இனிதிருந்து, (உரு) இருநிலத்தில், இனிது, இன்பம் எய்தலாம். (உஅ)

உரை.—சிவந்தகால்களையும், மடப்பத்தையுமுடைய, நாரையே! இன் றைக்கே போய், திருக்கண்ணபுரத்திலே ப்ரவேசித்து, (ரு) என்னுடைய புண் டரீகாக்ஷராய், ஆஸ்ரிதவ்யாமுக்தராய், எனக்குவல்லபரானவரிடத்திலே, எனக்கு (அவர்பக்கலுண்டான) வ்யாமோஹத்தைச், சொல்லுவாயே யாகில், (க௦) (அவரைப் பிரியில்தரியாத) எமக்கு, இதுக்கு ஸத்ருசமான, ஸுகமி ல்லை; (நீயுள்ள) காலமெல்லால், இந்த, (கரு) பரப்பை யுடைத்தான சோலைசூழ் ந்தகாட்டையெல்லாம், உனக்கே உரித்தாம்படிசெய்து, நீர் நிலங்களிலுள்ள, மத்ஸ்யங்களை, மேல்விழுந்து புஜிக்கும்படியாக, (உ௦) (விருப்பத்தோடே) கொடுப்பேன்; தருவேனேயாகில், உன்மனையாட்டியும்நீயும், இவ்விடத்தில் வந்து, ஸந்துஷ்டசித்தராயிருந்து, (உரு) (இந்த) மஹாப்ருதிவியிலே, அநுகூல ஸுகத்தை யடையலாம். (உஅ)

(க) (உ) ரா-யு-க-கச-

வ்யா.—இருபத்தேழாம்பாட்டு. (செங்கால) கீழ்ப்பாட்டில்-வண்டுகளைத் தூதுவிட்டாள்; அதுசென்று சொல்லி மறுமாற்றங் கொண்டு வருமளவும் தரித்திருக்கச் சக்தியில்லாமையாலே ஒரு நாரையைத் தூதுவிடுகிறாள். (க) "దక్షిణస్యాం సముద్రస్తే-திக்ஷு ஸர்வாஸுமார்க்கந்தே" என்று பிராட்டியைத்தேடுகைக்கு ஸ்ரீவாநரவீரரை யடைய ஏவினாற்போலே இவளும் கண்டவற்றையடைய ஏவுகிறாள். ராமாவதாரத்தில் வாநரஜாதி ஶ்லாக்யமானாற்போலே காணும் ஆழ்வார்களைத் தோற்றி பக்ஷிஜாதி ஶ்லாக்யமானபடி.

(செங்காலமடநாராய்) † ஸம்ஶ்லேஷதசையில் தன்காலை அவன் கொண்டாடக்கண்டிருந்தவளாகையாலே அல்லாத அவயவங்களை விட்டுக் காலைக்கொண்டாடுகிறாள். "இதொருகாலும் சிவப்புமிருந்தபடி யென்" என்கிறாள். ஒரு சிவந்தகாலோடே வாஸனையுண்டுபோலேகாணும் இவளுக்கு. "அபிமதனுடைய கால்போலேயிருந்ததீ! உன்காலும்" என்கிறாள். கருமுகைமாலையைச் சும்மாடுகொண்டாற்போலே தூதுவிடுலைகமிகையாய் ஸ்தாதர்சநம்பண்ணலாயிருந்ததீ! உன்காலிருந்தபடியென்கிறாள். அவன்காலோடொக்குமென்னுமிடம் தப்பச்சொன்னேன், தன்காலைத்தருமித்தனையிறே அவன் செய்வது, அவன் காலையுந் தந்து உன்னையுந் தருமேற்றமுண்டே இக்காலுக்கு; நீயும் ஸௌலபமாயிருந்து அவனையும் ஸௌலபனுக்குமேற்றமுண்டேயுனக்கு.

(மடநாராய்) அறிவுகெட்டநாராய்! (மடம்) என்று-இங்கு அறிவின்மையைச் சொல்லுகிறது. ஸ்தோத்ரம்பண்ண விழிந்தவள் இங்ஙன் சொல்லக்கடவளோவென்னில்; நிந்தாஸ்துதிபோலே இதுவுங் கொண்டாட்டத்திலேயொன்றாயிருக்கிறது. நிந்தாஸ்துதியாவது-ஆபாதப்ரதீதியிலே நிந்தைபோலேயாய், விமுக்காட்டிலே ஸ்தோத்ரமாயிறேயிருப்பது. ஸம்ஶ்லேஷதசையில், (உ) "నశాస్త్రం నైవచక్రమః-நஶாஸ்த்ரம்நைவசக்ரமঃ" என்கிறபடியே, அறிவழிந்து முறைகெடப் பரிமாறுகையிறே ப்ரணயித்வத்தில் உனக்குண்டான கௌசலமென்கிறாள். முறையிலே பரிமாறில் ஸ்வரூபத்தை நோக்கிற்றாமித்தனை யொழிய ப்ரணயியன்றிக்கே யொழியுமிறே. † என்னிழவு தீரும்படியான பூர்த்தி உனக்குண்டாகப் பெற்றேனென்கிறாள்.

---

இருபத்தேழாம்பாட்டு. (செங்காலமடநாராய்) காலைமுற்படக் கொண்டாவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷதசையிலித்யாதி).
(மடப்பம்) என்று - ஸ்த்ரீத்வமாய், அத்தை - அல்லாத ஆத்மகுணங்களுக்கும் உபலக்ஷணமாக்கி தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னிழவுதீரும்படியானவித்யாதி).

---

(க) ரா - ஸு - ௩௦ - ௩. (உ)

(நாராய்) என்கிற உக்தி, அம்மே! என்பானைப்போலே யிருக்கிறதா யிற்று. வழிபறியுண்கிறதசையிலே தாய்முகத்திலே விழித்தாற்போ லேயாயிற்று அவனைப்பிரிந்து நோவுபடுகிறதசையிலே இதின் ஸந் நிதியுண்டானவிது. (க) "பம்பாதீரே ஹநுமதாஸங்கதః-பம்பாதீரே ஹநுமதாஸங்கதஃ" என்று பிராட்டியைப்பிரிந்து ஸ்மாரக பதார்த் தங்களின்கையிலே பெருமாள் நோவுபடுகிறதசையிலே திருவடி வந்து ஸந்நிஹிதனானவிது வழிபறியுண்டதசையில் தாய்முகத்திலே விழித்தாற்போலே யிருந்ததிறே பெருமாளுக்கு. (நாராய்) என்ற போதையார்த்தி இசையிலேயிறே தோற்றுவது; ராஜமஹிஷியாகை யாலே கைக்கூலிதந்து கார்யஞ் செய்யவேண்டும்படி யன்றோ வென் னுடைய வேற்றமிருப்பது.

நீ அபேக்ஷிக்கவேணுமோ, கார்யத்தைச் சொல்லலாகாதோ வென்னச் சொல்லுகிறாள். (இன்றேசென்று) நாளைச்செய்கிறோமெ ன்னுமதன்று. அவன்படியைப்பார்த்தாலும் நாளைச்செய்யுமதன்று, என்படியைப்பார்த்தாலும் நாளைச்செய்யுமதன்று. (உ) "நஜீவேயங்க்ஷணமபி-நஜீவேயம்க்ஷணமபி" என்னும்படியாயிற்று அவன்படி; (ங.) "ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ-ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ" என்னும் படியாயிற்று என்படி.

(திருக்கண்ணபுரம்புக்கு) ருஷிகளும் அல்லாத ஆழ்வார்களும் சொல்லுமாபோலேயன்றுகாணும்- இவர் திருக்கண்ணபுரமென்றுவி ருக்கும்படி. அவர்களளவன்றே இவர்க்கு அவ்வூரிலுண்டான பாவ பந்தம். அநந்தாழ்வான் "திருவேங்கடமுடையான்" என்னுமாபோ லேயும், பட்டர் "அழகிய மணவாளப்பெருமாள்" என்னுமாபோ லேயும், சோமாசியாண்டான் "எம்பெருமானாரேசரணம்" என்னு மாபோலேயும் இராதிறே நாம் திருநாமங்களைச் சொல்லும்போது. (கண்ணபுரம்புக்கு) திருவழுந்தூரிலே தூதுவிட்டாளாகில் பின்பும் அங்கே விடும்தொழிய இங்கே விடுவானென்னென்னில்; திருவழுந் தூரில் அவன் தரிக்கமாட்டான், வண்டும் தானும் அரைகுலையத் தலைகுலைய எதிரேவந்து ஒருபயணம் புகுராநிற்கும், அங்கே செல் லுங்கோளென்கிறாள்.

(என்செங்கண்மாலுக்கு) (என்மாலுக்கு) உபய விபூதியும் தாமி ட்ட வழக்காயிருக்கிறவர், நானிட்ட வழக்காம்படி என்னபிமாநத்தே

(க) ரா - பா - க - ௫அ. (ங.) ரா - அ - ௫௩ - ௩௧.
(உ) ரா - ஸு - ௬௬ - ௪௦.

யடங்கியிருக்கிறவர்க்கு. (செங்கண்மாலுக்கு) கண்ணழகைக்காட்டி என்னை "ஜிதம்" என்னப்பண்ணித் தம்மபிமாநத்தே[ஒதுக்கி]யிட்டுக்கொண்டவர்க்கு. (செங்கண்மாலுக்கு) (க) †"𑌅𑌨𑌿𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑌤𑌤𑌂𑌰𑌾𑌮𑌃-அநித்ரஸ்ஸததம்ராம:" என்கிறபடியே என்னைப் பிரிகையாலே அவர்க்கு உறக்கமில்லை, அத்தாலே கண் குதறிச் சிவந்திருக்கும், அது உங்களுக்கு அடையாளமென்கிறாளாகவுமாம். (மாலுக்கு) பெரும்பித்தர்க்கு. தம்முடைய பித்தைக்காட்டி என்னைப்பிச்சேற்றினவர்க்கு. பிச்சேறியிருக்குமத்தனையிறே இத்தலைக்குள்ளது, பிச்சேறியிருக்கையும் எதிர்த்தலையைப் பிச்சேற்றுகையும் அத்தலைக்கேயிறேஉள்ளது. (உ) "மாலாய்ப்பிறந்த நம்பியை மாலேசெய்யும் மணாளனை" என்னக்கடவதிறே.

(என்காதல்) தம்முடைய காதல்போலன்றென்று சொலலுங்கோள். (ங) "மின்னிலங்கு திருவுருவு" என்று- உடம்பு குறியழியாதபடியன்றோ நீர் காதல்பண்ணிற்று, (ச) * பொங்கார்மென்னிளங்கொங்கை பொன்னேபூக்கும்படியன்றோ அவள்காதல்பண்ணிற்று என்னுங்கோள். (என்காதல்) (ரு) † "𑌯𑌾 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌰𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌷𑌯𑍇𑌷𑍍𑌵𑌨𑌪𑌾𑌯𑌿𑌨𑍀-யாப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷ்வநபாயிநீ" என்கிற § (படியே) நாட்டார் காதல்போலன்று, முக்தர்காதல்போலன்று காணும் இவளுடையகாதல். ஜ்ஞாநம்பிறந்தவாறே த்யாஜ்யமானகாதலிறே ஸம்ஸாரிகளது, ஸுகஹேதுவான காதலிறே முக்தரது.

(என் துணைவர்க்கு) எனக்கு அவர்ஜநீயபந்துவாயிருக்குமவர்க்கு; எவ்வவஸ்த்தையிலும் எனக்குத் துணையாயிருக்குமவர்க்குச் சொல்லுங்கோள். விமுகமானதசையிலே ஸத்தையைநோக்கிப் பின்பு ஆபிமுக்யத்தைப் பிறப்பித்து, ஸம்ஶ்லேஷித்துப் பிரிந்தபின்பும் ஸத்தைகிடக்கும்படியிறே அவர் துணையாயிருக்கும்படி. (என் துணைவர்க்கு) † இவ்வாற்றாமையைப் பரிஹரிக்குமவர்க்குச் சொல்லுங்கோள். (உரைத்தியாகில்) சொல்லுவுதியாகில். (ஆகில்) என்று- கடகரை இரக்குமதொழிய நியமிக்க ப்ராப்தியில்லையிறே; அத்தாலே திருவுள்ளமாகில் என்கிறாள். (உரைத்தியாகில்) † அவரழகிலே கால் தாழ்ந்து போனகார்யத்தைமறவாதே என்தசையை அறிவிப்புதியாகில். (உரைத்தி) (சு) "𑌵𑌾𑌚𑌾𑌧𑌰𑍍𑌮𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍁𑌹𑌿-வாசாதர்ம

---

(செங்கண்மால்) என்றதுக்குத் தாத்பர்யம் (அநித்ரஸ்ஸததமித்யாதி).
வ்யாவ்ருத்யந்தரம் (யாப்ரீதிரித்யாதி).

தாத்பர்யம் (இவ்வாற்றாமையித்யாதி). அர்த்தாந்தரம் (அவரழகிலேயித்யாதி).

---

(க) ரா-ஸு-ருகூ-சச.   (ங) உ௫.   (ரு) வி-பு-க-௨௦-கக.
(உ) நா-தி-கச-ங.   (ச) கஎ.   (சு) ரா-அ-ருகூ-க௦.
§ குண்டலிதம் அதிகம்.

மவாப்துஹி'' என்கிருள். உனக்கு ஒருவார்த்தை, நான்பெறுகிறது ஸத்தையென்கிருள்.

(இதுவொப்பதெமக்கின்பமில்லே) எனக்கு இத்தோடொத்த ப்ரியமில்லே; நீ உரைக்கையாகிற விதுக்குமேற்பட்ட ஸுகமில்லே. அவனேடு ஸம்ஶ்லேஷித்தாலன்றே ஸுகஸித்தியுள்ளது, அறிவித்தமாத்ரத்திலே ஸுகஸித்தியுண்டாமோவென்னில்; "அறிவிக்குமது வேவிலம்பம், வரவு தப்பாது" என்றிருக்கையாலே சொல்லுகிருள்.

(நாளுமித்யாதி) எனக்கு உபகரித்துவிடுமளவுபோராது, உபகாரஸ்ம்ருதியாலே நான் பண்ணும் கிஞ்சித்காரத்தையும் அங்கீகரிக்கவேணுமென்கிருள். (நாளுமித்யாதி) ஆசார்யன் ஒருகால் உபகரித்துவிடுமித்தனே, ஶிஷ்யன்யாவதாயுஷம் அநுவர்த்திக்கக்கடவனென்கை. (பைங்கானமீதெல்லாம்) தன்னபிமாநத்தில் கிடந்தத்தைக் கொடுக்குமத்தனையிறே செய்யலாவது, பரப்பையுடைத்தான கடற்கரைச்சோலேயடைய. பிரிந்தாரிரங்குமிடம் நெய்தலாகையாலே கடற்கரையிலே தானிருக்கிறதாகையாலே "பைங்கானமீதெல்லாம்" என்கிருள். (ஈதெல்லாம்) தன்கண்ணுற்கண்ட ப்ரதேசத்தை யடையக்கொடுக்கிருள். என்விபூதியடங்கலும் தருவனென்கிருள். இது உபயவிபூதிக்கு முபலக்ஷணம். (க) "பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ" என்னக் கடவதிறே. (உனதேயாக) எனக்கும் உனக்கும் பொதுவாகவன்றியே உனக்கே சேஷமாம்படி தருவேன். (பழனமீன்) நீர்மாறுதே யிருக்கையாலே மத்ஸ்யங்களும் ஆனேக்கன்றுபோலேயிருக்குமிறே. (உ) " யதந்நஃபுருஷோ ஭வதி ததந்நாஸ்தஸ்ய தேவதாः-யதந்நःபுருஷோபவதிததந்நாஸ்தஸ்யதேவதாः" என்கிறபடியே தனக்குஸித்தித்த அம்சத்தைக்கொடுக்கலாவது அவனுக்கிறே, கடகர்க்கு, அவர்களுகந்தது தேடிக் கொடுக்கவேணுமென்கை. (கவர்ந்துண்ணத்தருவன்) மேல்விழுந்து புஜிக்கும்படியாக ஸாதரமாகத்தருவேன்.

(தந்தால் இங்கேவந்து) உங்கள்பூர்த்தியாலே நான் பண்ணின கிஞ்சித்காரத்தைஸ்வீகரித்திகோளாய்ப் போகையன்றியே என்ஸந்நிதியிலே புஜிக்கவேணும். (வந்து) அவனேப்போலே உபகரித்துப் பின்பு வாராதொழியாதே நானிருந்தவிடத்தே வந்து புஜிக்கவேணும். (உன்பெடையும் நீயும் இனிதிருந்து) ஏகாகியாய் வந்திருக்கவொண்ணுது, அபிமதவிஷயத்தோடேகூட வந்திருக்கவேணும். அது தனக்குத் தேட்டமிறே. (இருநிலத்திலினிதின்பமெய்தலாமே) (௩) * அநந்தக்லேஶ஭ாஜநம்-அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரத்திலே (௪) * அந்தமில் பேரின்பத்தை ப்ராபிக்கலாம். (௫) "நல்ல

(க) தி-வாய்-௬-அ-க.
(உ) ரா-அ-கO௩-கரு.
(௩) ஜி-ஸ்தோ-௪.
(௪) தி-வாய்-கO-௯-கக.
(௫) ,, அ-கO-கக.

பதத்தால் மனைவாழ்வர்'' என்கிறபடியே வாழப்பெறலாம். † வைஷ்ணவர்கள் சரீரஸம்பந்தயுக்தராகையாலே அபேக்ஷிதந்தசைகளிலே அபேக்ஷிதங்களைக் கொடுத்து வர்த்திக்கும்கார்ஹஸ்த்யத்தால் வந்தவேற்றமில்லையிறே நித்யவிபூதியில் ... ... ... (உஎ)

மூ.—தென்னிலங்கையரண்சிதறியவுணன்மாளச்
சென்றுலகமூன்றினையுந்திரிந்தோர்தேரால்
மன்னிலங்குபாரதத்தைமாளவூர்ந்த
வரையுருவின்மாகளிற்றைத்தோழீ, என்றன்
பொன்னிலங்குமுலைக்குவட்டில்பூட்டிக்கொண்டு
போகாமைவல்லேனாய்ப்புலவியெய்தி
என்னிலங்கமெல்லாம்வந்தின்பமெய்த
எப்பொழுதும்நினைந்துருகியிருப்பன்நானே. (உஅ)

பதம்.—தோழீ, இலங்கை, தென், அரண், சிதறி, (டு) அவுணன், மாள, சென்று, உலகமூன்றினையும், திரிந்து, (௧0) மன், இலங்கு, பாரதத்தை மாள, ஓர்தேர்ஊர்ந்த, வரையுருவின், (௧டு) மா, களிற்றை, வல்லேனாய், என்றன், பொன்இலங்கு, (உ0) முலைக்குவட்டில், போகாமை, பூட்டிக்கொண்டு, புலவியெய்தி, என்னிலங்கமெல்லாம், (உடு) வந்து, இன்பமெய்த, எப்பொழுதும், நான், நினைந்து, (௩0) உருகியிருப்பன். (௩௧)

உரை.—என் உயிர்ப்பாங்கியே! லங்காநகரத்திலே, தர்சநீயமான, கோட்டையை,அழித்து, (டு) ராவணாஸுரன், முடியும்படியாக, (அந்நகரத்திலே) ப்ரவேசித்து, மூன்றுலோகங்களையும், ஸஞ்சரித்து, (திருவடிகளாலேயளந்து), (௧0) அரசர்கள் விளங்காநின்றுள்ள, பாரதஸமரம்முடியும்படி, ஒருதேரை (ஸாரதியாய்நின்று) நடத்தின, மலைபோலேயிருந்துள்ள திண்மையையுடைய, (௧டு) பெரிய, யானைபோலேயிருந்துள்ளவனை, ஸமர்த்தையாய்க்கொண்டு, என்னுடைய, வைவர்ண்யத்தையுடைத்தான, (உ0) ஸ்தநங்களாகிற ஸ்தம்பத்திலே, (அவன்) புறம்புபோகாதபடி, சேர்த்துக்கொண்டு, (அவனைப் பிரிந்து படும்) க்லேசத்தை (அவன் ஸந்நிதியிலே) யடைந்து, என்னுடைய ஸர்வாவயவங்களும், (உடு) என்னிடத்தே வந்து, ஆநந்தத்தை யடையும்படியாக, ஸர்வகாலத்திலும், (விஶ்லேஷாஸஹையான) நான், (அவரை) நினைத்து, (௩0) அழிந்துவிடுவேன். (௩௧) (உஅ)

வ்யா.—இருபத்தெட்டாம்பாட்டு. (தென்னிலங்கை) நம்மாழ்வார் (௧) * வைகல்பூங்கழிவாயிலே தூதப்ரேஷணம் பண்ணி அநந்தரம் அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலே ப்ரணயரோஷம்

''நல்லபதத்தால் மனைவாழ்வர்'' என்றதுக்கர்த்தம் (வைஷ்ணவர்களித்யாதி). ... ... ... ... ... ... ... ... (உஎ)

(௧) தி - வாய் - ௬ - ௧ -

தலையெடுத்தூவடினாற்போலே இவளும் தூதுவிட்டு இதிலே யூடு கிறாள். தூதப்ரேஷணம் பண்ணும்படியான ஆற்றாமைக்கு மவ்வ ருங்க ஒருதசாவிசேஷமிறே ப்ரணயரோஷமாகிறது; அப்படியே அத்தசையிலே வெள்ளிடி விழுந்தாற்போலே மநப்ப்ரஸாதம் பிற ந்து தெளிந்து, "நம்மாற்றாமை யிருந்தபடியாலும் தூதப்ரேஷணம் பண்ணுகையாலும் சுபநிமித்தங்கள் செய்கையாலும் அவன்வரவு தப்பாது" என்று நிர்ணயித்து, "அவன்வந்தால் முகங்கொடுக்கக்கட வோமல்லோம்" என்று அத்யவஸித்தாள். அதுக்கு ஹேது வென் னென்னில்; "அவனுடைய ஸம்ஶ்லேஷம் விஶ்லேஷாந்தமா யல்ல திராமையாலே இன்னமொரு விஶ்லேஷத்துக்கு இலக்காயிருந்து க்லேசப்படுமதிற்காட்டில் அவன் வந்தால் முகங்கொடாதே அவன் ஸந்நிதியிலேமுடிந்துபிழைக்கக்கடவோம்"என்று பார்த்தாள்; தாந் தாம் முடியநினைப்பார் வெற்றிலைதின்பது, பூச்சூடுவது, சிரிப்ப தாமாபோலே, அகவாயழியாநிற்கச் செய்தே இவள் தெளிந்திருக்க, அத்தைக்கண்ட தோழியானவள், "ப்ரணயரோஷம் தலையெடுக் கும்படியான ஆற்றாமை செல்லாநிற்கச்செய்தே நிஶ்ஶங்கமாக இவள் தெளிந்திருந்தாள், இதுக்குஹேதுவென்?" என்றுபார்த்து, "நெஞ்சிலோடுகிறதென்?" என்று கேட்க; "அவன்வந்தால் பண் டுபோலே முகங்கொடுக்கக்கடவேனல்லேன், அவன்ஸந்நிதியிலே முடியக்கடவேனாக அத்யவஸித்தேன்" என்ன; "கெடுவாய்! மலை யோடே மல்பொருத மல்லருண்டோ? உபய விபூதி நாயகனாய் ஸர்வ சக்தியா யிருக்கிறவனோடே அபலையான நீ எதிரிடுகையாவ தென்?" என்று, தோழிக்கு இவள் தன்னிலுங் காட்டில் ரோஷம் கனத்திருக்கையாலே, "ப்ரணயிகளோடு செய்யுமத்தை ப்ரபுக் களோடு செய்யக்கடவதோ?" என்ன; "அவர்ப்ரபுத்வமும் நாடா ளும்படியும் என்கையிலே படும்பாடுபாராய்" என்ன; "இவளத் யவஸாய மிருந்தபடியால் முடியும்போலேயிருந்தது, ப்ரணயரோ ஷத்தளவிலேயாய் முடியாதபடிநோக்கவேணும்" என்று பார்த்து, "ஆஶ்ரிதர்க்கு அவன் முகங்கொடுக்கும்படி இதுகாண்" என்று சொல்ல; "அமையும், எல்லாம்பகட்டுக்காண், நான் முடிகைதவி ரேன்" என்கிறாள். ப்ரணயிநி யான இவளையொழியத் தோழிக்கு ரோஷம் தலையெடுக்கக்கூடுமோவென்னில்; வீதராகனாய்ச் சருகி லைதின்று போந்த ஸ்ரீவால்மீகி பகவான் பிராட்டியைக்கண்டு,

இருபத்தெட்டாம்பாட்டு. (தென்னிலங்கை) அவதாரிகாவாக்யங்களு க்கு நிதாநம் (வஸாயுநவின்மாகளிற்றை) என்றது.

(க) "ஹீநோயததயா ப்ரபு:-ஹீநோயதநயாப்ரபு:" என்று பெருமாள் நாடாளவும் ஆனைகுதிரை கட்டவும் கற்றுரித்தனைபோக்கி ப்ரணயித்வத்தில் புதிய துண்டிலராகாதே! என்றுனிறே. முற்படத் தோழி, அவன் ஆஸ்ரிதர்க்கு முகங்கொடுத்த ப்ரகாரத்தைச்சொல்ல, அத்தை யநுபாஷித்து அவையெல்லாம்பகட்டுக் காணென்கிருள்.

(தென்னிலங்கையரண்சிதறி) மேல், "வரையுருவின்மாகளிற்றை" என்கையாலே † யானையினுடைய வ்யாபாரமாகப் பேசுகிருள் - இவ்வபதாநங்களையெல்லாம். லங்கையில் தர்சநீயமான வரணைச்சிதறி. அரணின்வலியிறே வீரர்களுக்குத் தர்சநீயமாயிருப்பது. திருவடி பிராட்டியைத்தேடி லங்கையிற்சென்றபோது லங்கையினரணையும் ராவணனுடைய பலத்தையும்பார்த்து, "இவ்வரணிருந்தபடியால், நான் புகுதல், என்தமப்பனை வாயுபுகுதல், வைநதேயன்புகுதல் செய்யுமித்தனை யொழிய வேறொருத்தரால் புகுரவொண்ணாது, அதுதன்னிலும் ராத்ரி புகுருமதொழியப் பகல் புகுரவொண்ணாதாயிற்று அரணிருந்தபடி; இதுக்கு அத்யக்ஷனானவன் றன்னுடையபலமிருந்தபடி யென்னென்னில், வெளிநிலத்திலே எதிரிகளைத் தனியேஜயிக்க வல்லவனாயிருந்தது, இப்படிப்பட்ட தேசத்திலே ஸுகுமாரரான ராஜகுமாரர்களைக் கொண்டுவரத்தேடாநின்றேம்" என்று திருவடிநெஞ்சுளுக்கும்படியிறே அரணிருந்தபடி. (சிதறி) ஓரானை மணற்கொட்டகத்தைச்சிதறினாற்போலே அநாயாஸேநவழித்து. ஒருகல்லும் மரமுமாகிலிறே "இடறி" என்பது, பெருமாளுடைய வீரத்தைக் கேட்டிருந்தமாத்ரத்தைக்கொண்டு, (உ) "'யதாஸைகதம் அம்பஸி-யதாஸைகதமம்பஸி' என்று ஓரானை மணற்கொட்டகத்தை யழிக்குமாபோலேகாண் பெருமாள்கையில் நீயும் உன்பரிகரமும் அழியுண்ணப்போகிறபடி என்றுரிறே ஸ்ரீ விபீஷணாழ்வான். (அவுணன் மாளச்சென்று) ராவணன்முடியும்படிசென்று. சென்ற செலவிலே ம்ருதனானன், பின்னைப்பிணம்வெட்டி வாள்முறிந்த வித்தனையாயிற்று. அதாகிறது-ஒருமதஹஸ்தி வழிபோகாநின்றால் முன் கண்டவற்றையடையக் கையாலுங் காலாலு மழித்துக்கொண்டுபோமாபோலே கரதூஷணப்ரப்ருதிகளை நிரஸித்து, தன்னை வாலிலேகட்டிக்கொண்டுதிரிந்த வாலியை நிரஸித்து, கடற்கரையிலே சென்றுவிட்டு லங்கைக்கரணானகடலை அணைசெய்து, லங்கையைச்சென்று

† (சிதறி - மாள) என்கையாலே - யானையினுடைய வ்யாபாரமாகப் பேசுகிறுளென்றபடி.

(க) ரா-ஸு-கடு-ருரு. (உ) ரா - யு -

அடைமதிட்படுத்தினபடியைக் கண்டபோதே ம்ருதனானென் கை. ஒருப்ரணயினிக்காக அவன் பண்ணின வ்யாபாரமிதுவன்றோ வென்ன; அவன் பரமப்ரணயியன்றோ, அபலைகளாயிருப்பார் அகப் படுகைக்காகச்செய்த தொன்றாகையாலே அதுவும் பகட்டுக்காணெ ன்கிறாள்.

(உலகமூன்றினையுந்திரிந்து) சதுர்த்தசபுவநத்தையுமளந்து. ஒ ருமதஹஸ்திஸ்வைரஸஞ்சாரம் பண்ணுமாபோலே எல்லார்தலைகளி லும் ஸ்வைரமாகத் திருவடிகளைவைத்தபடியாலே (திரிந்து) என்கி றது. ப்ரணயினிக்கு முகங்கொடுக்கையன்றியே அந்யசேஷத்வத் தாலும் ஸ்வஸ்வாதந்த்ர்யத்தாலும் விமுகராயிருப்பார் தலைகளிலு மகப்படத் திருவடிகளை வைக்கும் ஸ்வபாவனன்றோவென்ன; அவன் விசேஷஜ்ஞன்காண், விமுகர்தலையிலே திருவடிகளைவைக்கு மதொழிய (க) "எம்பெருமான்திருவடிக்கீழணைய" என்றிருப்பார் க்கு முகங்கொடுக்குமவனன்றுகாணென்கிறாள்.

(ஓர்தேரால் மன்னிலங்கு பாரதத்தைமாளவூர்ந்த) (ஓர்தேரால்) எதிரிகள், "க்ருஷ்ணன் ஆயுதமெடுக்கவேண்டா" என்றவித்தனை யொழியத் "தூதுபோதல், ஸாரத்யம்பண்ணுதல் செய்யவேண்டா" என்றிலர்களே, ஆகையாலே ஸாரதியாய் நின்று ஒருதேராலே யழி யச்செய்தான். "இன்னத்தைக்கொண்டு இன்னகார்யஞ்செய்யக்கட வோம்" என்னும் நியதியில்லையிறே. (உ) "கொல்லாமாக்கோல் கொலைசெய்து" என்னக்கடவதிறே. (மன்னிலங்குபாரதத்தை) அதிரதமஹாரதரான பீஷ்மாதிராஜலோகங்கள் முன்துர்சியிலே ஸஞ் சரிக்கும்படியான பாரதத்தை. (மாளவூர்ந்த) பிணமுங் கண்காணா தபடியாகத் தேரைநடத்தின. (ந) "ஆடியமாநெடுந்தேர்படை நீறெழச்செற்றபிரான்" என்கிறபடியே தேர்க்காலிலே துகையுண்டு தூளியாய்ப்போம்படியாயிற்றுத் தேரைநடத்தினபடி. தன்னை யொ ழியச்செல்லாதேயிருப்பாளொருத்தியுடைய குழல் முடிப்பிக்கைக் காக அவன் பண்ணின வ்யாபாரமிதுவன்றோவென்ன; "ஒருத்தி குழலைமுடிப்பிக்கைக்காகத் தன்னையழியமாறி வ்யாபரிப்பதே!" என்று நாட்டாரைப்பகட்டுகைக்காகச்செய்தா னித்தனை, தன்னை யொழியச்செல்லாதார்குழலை விரிப்பிக்குமவன்காணென்கிறாள்.

(வரையுருவின்மாகளிற்றை) மலைபோலேயிருந்துள்ள திண்மை யையும் செருக்கையுமுடைத்தான ஆனைபோலேயிருந்துள்ளவனை. ஆஸ்ரிதவிரோதி நிரஸநத்தில் திண்ணியனாயிருக்கையும், ஆஸ்ரிதர்

(க) உஉ.
(உ) தி - வாய் - ந - உ - ந.
(ந) தி - வாய் - சு - அ - ந

கார்யஞ்செய்த ப்ரீதியாலேவந்த செருக்கையுமுடையவனை. (தோழீ) என் கையாலே அவன்படும்பாடு காணவிறேபுகுகிறாய். அங்ஙனன்றியே, (க) "ఏకం దుఃఖం సుఖఞ్చనౌ-ஏகம் து:கம் ஸுகஞ்சநௌ" என்றிருக்கிறவளாகையாலே நீ விலக்காயாகில் அவன்படும்பாடு பாராயென்னுதல். (தோழீ) நீ விலக்காதொழியவேணும்.

(என்றனித்யாதி) என்கையில் ப்ரஹ்மாஸ்த்ரமிருக்க ஜயிக்கவொண்ணாதகிலமுண்டோ? (என்றன் பொன்னிலங்குமுலை) நாட்டார்முலையெழுந்தாற்போலேயோ என்முலையெழுந்தபடி. அவன் முலையெழுந்தாற்போலேயோ என்முலையெழுந்தபடி. (பொன்னிலங்குமுலை) அவனுடைய பும்ஸ்த்வம்போலேயோ என்னுடைய ஸ்த்ரீத்வமிருப்பது. வ்யதிரேகத்தில் விவர்ணமாம்படியன்றோ வென்னுடைய ஸ்த்ரீத்வம். (௨) "மின்னிலங்குதிருவுரு" என்று - வ்யதிரேகத்தில் வடிவு ஏகரூபமாயிருக்கும்படியன்றோ அவனுடைய பும்ஸ்த்வமிருப்பது. ஸதைகரூபமான வடிவையுடையவனுக்கு §வரவுண்டோ? (முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு) முலையாகிறஸ்தம்பத்தோடே சேர்த்துக்கொண்டு. ஸ்தம்பத்தோடே சேர்க்கையாவது - தன்னுற்றமையை ஆவிஷ்கரிக்கை. (போகாமல் - பூட்டிக்கொண்டு) என்பக்கல் முகம்பெறாமையாலே போகத்தேடும்போது என்னுற்றமையை யடங்க ஆவிஷ்கரிக்கக்கடவேன். (முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு) † * வரையுருவின் மாகளிறாகையாலே ஒரு மலையிலே சேர்க்கவேணுமிறே. (வல்லேனாய்) இதொன்றுமே குறை யென்கிறாள். என் மநஸ்ஸு ஸஹகரிக்கப்பெறில்; அவன் வந்து முகங்காட்டினால் நெஞ்சு மேல்விழாதொழியப்பெறில்; நீயும் நிஷேதியாதே ஸஹகரிக்கப்பெறில். நெஞ்சிலுங்காட்டில் அந்தரங்கையிறேதோழி. (புலவியெய்தி) அவனைப்பிரிந்து படும் க்லேசத்தை யெல்லாம் அவன் ஸந்நிதியிலே படக்கடவேனென்கிறாள். அதவா, (புலவியெய்தி) அவனைப் பிரிந்து நாம் பட்டபாடித்தனையும் அவன்றான் என்ஸந்நிதியிலே படும்படி பண்ணக்கடவேனென்கிறாளாகவுமாம்.

(என்னிலங்கமெல்லாம் வந்தின்பமெய்த) இன்னமொரு விஶ்லேஷத்துக்கிலக்காயிராதபடி அவன் ஸந்நிதியிலே முடிந்து பிழைக்கக்கடவேன். (என்னிலங்கமெல்லாம்) "இதொரு கண்ணிருந்தபடியென், இதொரு முறுவலிருந்தபடியென், இதொருமுலையிருந்தபடி

---

(குவடு) என்றதுக்கு (மலை) என்று அருளிச்செய்கிறார் (வரையுருவின் மாகளிறாகையாலேயித்யாதி). ... ... ... ... ... (௨அ)

---

(க) ரா கி - ு - கஅ. (௨) ௨ு. § (பா) வாயுண்டோ.

யென்" என்றாற்போலே அவன் கொண்டாடும்படி அவனுக்கு ஆத ரணீயமான வென்னுடைய ஸர்வாவயவங்களும். (இன்பமெய்த) "க்ஷாமகாலத்தில் குடும்பியாயிருக்குமவன் குடும்பத்தினுடைய பசி யும் தன்பசியும் பொறுக்கமாட்டாமையாலே ஸகுடும்பமாய் ஆற் றிலே புக்குமுடியும்" என்னுமாபோலே என் அவயவங்களோடே கூட முடியக்கடவேன். (வந்து) கன்றுவேறு, தாய்வேறாக்கும்விஷ யமிறே, ஸ்ரீபரதாழ்வானையும்கைகேயியையும் போலே; ஆகையாலே, தனித்தனியே சேதநஸமாதியாலே அவ்விஷயத்திலே ப்ரவணமாயி றேயிருப்பது. அவை அங்குநின்றும் மீண்டு ஆஸ்ரயபூதையான என்னோடேகூடிமுடிகையிலே உத்யோகிக்கை. (இன்பமெய்த) முடி யக்கடவேனென்னுமத்தை (இன்பமெய்த) என்கிறாள் - முடிகை தான் பரமபதஸ்த்தாநீயமாம்படியானவாற்றாமையாலே. (எப்பொ ழுதும்) எவ்வவஸ்த்தையிலும். "அவன் வாராதபடியாலே சொல் லுகிறாய், வந்து முகங்காட்டினவாறே, (க) 'மைவண்ணம்' இத்யா தியிற் சொல்லுகிறபடியே அவன் ஸௌந்தர்யத்தைக் கண்டவாறே நீ மேல்விழுகிறாய்" என்ன; அத்தசையிலும் முடியக்கடவேன். (எப்பொழுதும்) சேஷித்வத்தால் வந்த ப்ராப்தியைக்காட்டிலும் முடியக்கடவேன்.

(நினைந்துருகியிருப்பன்) நினைத்தமாத்ரத்திலே யழிந்திருப்பன். அவன் வந்து ஸங்ஙிஹிதனாய், தன் செல்லாமையைக் காட்டினால் அழிகையன்றியே மநோரதித்தமாத்ரத்திலே யழியும்படியாயிற்று இவளுடைய *ஸௌந்தர்யமிருப்பது. நம்மாழ்வாருக்கு ப்ரணயரோ ஷம் தலையெடுத்தபோது அவன்வந்து முகங்காட்டினவளவிலும் தோழியுந்தானுமாக அவனுக்கும் புகுரவொண்ணாதபடி ப்ரணய ரோஷமாகிற மதிளையிட்டுக்கொண்டுநிற்க க்ரமத்தாலே தன்செல் லாமையைக் காட்டிப் ப்ரணயரோஷத்தை யழித்துக் கிட்டவேண் டிற்று, இவர் நினைப்பதுக்குமுன்னே யழிந்தார். (நானே) "புறம்பு கண்டறியோமீ!" என்ன; என்ப்ரக்ருதியிருக்கும்படி யிதுவென்கி றாள். அல்லாதார் ஒன்றை ஸங்கல்பித்தால் அத்தைமுடிய நடத்த வும் வல்லர்களாயிருப்பார்கள், ஸங்கல்பித்தபோதே யழியும்படியா யாயிற்று நானிருப்பது. ... ... ... ... ... (உஅ)

மூ.—அன்றாயர்குலமகளுக்கரையன்றன்னை
 அலைகடலைக்கடைந்தடைத்தவம்மான்றன்னைக்
குன்றாதவலியரக்கர்கோனைமாளக்
 கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்துகுலங்களைந்து

---

* ஸௌகுமார்யமென்றும் பாடம். (க) உக.

வென்றானைக், குன்றெடுத்ததோளினானை
விரிதிரைநீர்விண்ணகரம்மருவிநாளும்
நின்றானைத், தண்குடந்தைக்கிடந்தமாலை
நெடியானையடிநாயேன்நினைந்திட்டேனே. (உகூ)

பதம்.—அன்று, ஆயர்குலமகளுக்கு, அரையன்றன்னை, அலைகடலை, கடைந்து, (ரு) அடைத்த, அம்மான்றன்னை, குன்றாதவலி, அரக்கர்கோனை, (கo) மாள, கொடுஞ்சிலைவாய், சரம், துரந்து, குலம், (கரு) களைந்து, வென்றானை, குன்று, எடுத்த, தோளினானை, (உo) விரி, திரை, நீர், விண்ணகரம், நாளும்மருவிநின்றானை, (உரு) தண், குடந்தை, கிடந்த, மாலை, நெடியானை, (ஙo) அடி, நாயேன், நினைந்திட்டேன். (ஙங)

உரை.—கும்பர்ஏழுருஷபங்களைக் கந்யாசுல்கமாக வைத்தவன்று (அவற்றை நிரஸித்து), இடைக்குலத்திலவதரித்த பெண்ணான நப்பின்னைப்பிராட்டிக்கு, வல்லபனானவனாய், அலைகளையுடைத்தானஸமுத்ரத்தை, (அம்ருதத்துக்காக) மதநம்பண்ணி, (ரு) (ராமாவதாரத்தில்) ஸேதுபந்தம்பண்ணினவனாய், ஸர்வஸ்வாமியாய், ஒருகாலும் க்ஷயியாதபலத்தையுடைய, ராக்ஷஸஜாதிக்கெல்லாம் நிர்வாஹகனான ராவணன், (கo) முடியும்படியாக, க்ரூரமான வில்லிலே, பாணங்களை, ப்ரயோகித்து, ராக்ஷஸகுலத்தை, (கரு) நிர்மூலமாக்கி, ஜயித்தவனாய், (பசு நிரைகளையும் இடையரையும் ரக்ஷிக்கைக்காக,) கோவர்த்தநபர்வதத்தைக், குடையாகவெடுத்த, திருத்தோளையுடையனாய், (உo) விஸ்த்ருதமாகாநின்று, அலைகளையுடைத்தான, ஜலஸம்ருத்தியையுடைய, திருவிண்ணகரிலே எக்காலமும் பொருந்திநிற்குமவனாய், (உரு) ஶ்ரமஹரமான, திருக்குடந்தையிலே, கண்வளர்ந்தருளின, ஆஶ்ரிதவ்யாமுக்தனாய், இப்படிப்பட்டவனென்று அளவிடற்கரியனாய் இருக்கிற ஸர்வேஶ்வரனை, (ஙo) அடிமையையே நிரூபகமாகவுடையளாய், நாய்போலேதண்ணியளானநான், நினைத்தேன். (ஙங) ... ... ... ... ... (உகூ)

வ்யா.—இருபத்தொன்பதாம்பாட்டு. (அன்றாயர்) முதல்பத்தில் - ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை நிர்ணயித்து, ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தை நிர்ணயித்து, தத்விரோதியையும் நிர்ணயித்து, விரோதிநிவ்ருத்திக்கும் புருஷார்த்தஸித்திக்கும் அநுரூபமான உபாயத்தை நிர்ணயித்து, இத்தனைக்கும் வாசகமான திருமந்த்ரத்தை வாகிந்த்ரியத்துக்கு விஷயமாக்கி, இவ்வர்த்தத்தை நெஞ்சுக்கு விஷயமாக்கித் தெளிந்து காலக்ஷேபம் பண்ணினார்; நடுவிற்பத்தில்-காலக்ஷேபார்த்தமாக வநுஸந்தித்த அநுஸந்தாநத்தளவிலே பர்யவஸியாதே கண்ணுஞ்சுழலையிட்டு, கண்ணாலே கண்டு அநுபவிக்கும்படியானவாற்றாமைவிளைந்து, தான்நினைத்தபடி யநுபவிக்கப் பெறாமையாலே அப்ராக்ருதிங்கதராய்ப் பிறர்வாயாலே வார்த்தை சொல்ல

வேண்டும்படியான மோஹமேயாய்ச் சென்றது; மூன்றாம்பத்தில் - இவள்தசையைக்கண்டதோழி இவளை ஆஶ்வஸிப்பிக்கவேணுமென்று பூர்வஸம்ஶ்லேஷத்தை முன்னிட, வ்ருத்தகீர்த்தநமாகையாலே தரித்துநின்று பேசினாள்; பின்னை ப்ரஶ்ந ப்ரதிவசநங்களில்லாமையாலே பழையவாற்றாமையேமேலிட்டு தூதப்ரேஷணத்திலே அந்வயித்தாள். அநந்தரம் அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலே ப்ரணயரோஷந் தலையெடுத்தது; நம்மாழ்வாரைப்போலே ப்ரணயரோஷம் கிலேகிற்கிலிறே அவன்வந்து முகங்காட்டுவது, அது செய்யாதே நடுவே வெளிமைப்பட்டுப பழையப்ரக்ருதியிலே விழுந்தார், விழுந்தவிடத்திலு[illegible]தரித்திருக்கலா[illegible]து அவன் வந்து முகங் காட்டினானிறே, அதில்[illegible]மையாலே, நம்மாழ்வாருக்கு (க) * முனியேநான்முகனிற்பிறந்த[illegible]பக்தி இவர்க்குப் பிறந்து தம்முடைய அநந்யகதித்வத்தையும்[illegible]தோஷபூயஸ்த்வத்தையும் முன்னிட்டு "ப்ரணயியான நீ எனக்[illegible]முகங்காட்டாதொழிவதே!" என்றுகூப்பிடுகிறார். நம்மாழ்வார் பரத்வத்தையும் அவதாரத்தையும் பற்றிக் கூப்பிட்டார்; இவர்க்கு பராவஸ்த்தையும் அவதாரமாகையாலே அவதாரத்தையும் அர்ச்சாவதாரத்தையும் பற்றிக் கூப்பிடுகிறார்.

(அன்றித்யாதி) ப்ரணயிநிகளுக்கு முகங்கொடுத்தபடியைச் சொல்லுகிறார். ப்ரதமத்தில் நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினபடியையருளிச்செய்கிறார். (அன்று) அன்றுமின்றுபோலேகாணும் ஆபத்துள்ளது. அதாகிறது - நப்பின்னைப்பிராட்டியுடைய ஸௌந்தர்யத்தைக்கண்டு "இவளைக் காத்தூட்டவல்லானொருஸமர்த்தன் வரனாகவேணும்" என்றுபார்த்து ருஷபங்களைமுன்னிட்டு "இவற்றை நிரஸித்தவனுக்கு இவளைக் கொடுக்கக்கடவோம்" என்று ஸங்கல்பிக்கையாலே க்ருஷ்ணன்வந்து முகங்காட்டுவதுக்கு முன்பு "அந்யார்ஹமாகப் புகுகிறோமோ?" என்று நடுங்கின நடுக்கமிறே அவளது. (ஆயர்குலமகளுக்கு) அபிஜாதையானநப்பின்னைப் பிராட்டிக்கு. இவளுடைய ஆபிஜாத்யத்துக்கு ஸத்ருசமான குலத்திலே பிறந்தா லல்லது இவளை லபிக்கவொண்ணாதென்று பார்த்திறே ஸ்ரீநந்தகோபர்க்குப் பிள்ளையாய்வந்துபிறந்தது. (அரையன்றன்னை) ஒருநாட்டைவன்னியமறுத்து அத்தேசத்தையநுபவிப்பித்தவோபாதிபோருமாயிற்று இவளுடைய விரோதி வர்க்கத்தினுடைய கனமும் போக்யதையினுடைய பெருமையும். அவளுடைய விரோதி வர்க்கத்தைப்போக்கி அவளுக்கு உதவினாற்போலே எனக்கு முகந்தரவேண்டாவோ வென்கிறாள்.

---

(க) தி - வாய் - ௪௦ - ௪௦.

(அலைகடலித்யாதி) பிராட்டிக்கு உதவினபடியை யருளிச்செய்கிறார். இவ்விரண்டு அபதாநத்திலும் பிராட்டியை லபிக்கைக்காகக் கடலைக்கடைந்தது. அவளுடைய தனிமையைத் தீர்க்கைக்காகக் கடலையடைத்தது; அம்ருதப்ரதாநமும் குடியிருப்புக்கொடுக்கையும் ஆநுஷங்கிகமிறே. அவனுடைய திருவுள்ளத்தை அடியொத்தின ஆளவந்தார், (க) "யதர்த்தமம்போதிரமந்த்யபந்திச- யதர்த்தமம்போதிரமந்த்யபந்திச" என்றாரிறே. (அம்மான்றன்னை) உன்னுடைய ப்ரணயித்வத்தை இழக்கையன்றியே, ஆநுஷங்கிகமாகக்கொண்டு துர்வாஸஶ்ஶாபத்தாலே நஷ்டஸ்ரீகரான இந்த்ராதிகள்வந்து சரணம்புகுர அவர்களுடைய அஸ்ரீயைப்போக்கி அம்ருதப்ரதாநம் பண்ணுகையாலும், ப்ரஹ்மாதிகள் ராவணனாலே குடியிருப்பிழக்க அவர்களுக்குக் குடியிருப்புக்கொடுக்கையாலும் வந்த பரத்வத்தையிழக்கக்கிடாய்ப் புகுகிறாயென்கிறாள்.

(குன்றுதவலி) தோள்வலியாகிலிறே போதுசெய்வது, வரபலமாகையாலே போதுசெய்யாதிறே. (அரக்கர்கோனைமாள) அவ்வரபலத்தையே ஆலம்பநமாகக்கொண்டு பரஹிம்ஸையே யாத்ரையாயிருக்கும் ராக்ஷஸஜாதிக்கெல்லாம் நிர்வாஹகனாயிருக்கிற ராவணனை நசிப்பிக்கும்படியாக. (கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்து) கண்டபோதே எதிரிகள் மண்ணுண்ணும்படியான ஸ்ரீசார்ங்கத்தாலே திருச்சரங்களை நடத்தி. (கொடுஞ்சிலை) (உ) † "தீப்தபாவகஸங்காஶை:-தீப்தபாவகஸங்காஶை:" என்கிறபடியே திருச்சரங்களுக்குண்டான வேற்றமும், (ந) * "ராமபாணாஸநக்ஷிப்தம் - ராமபாணஸநக்ஷிப்தமாகை யாலே. (குலங்களைந்து) ராக்ஷஸஜாதியாக வழியச்செய்து. ஸ்ரீவிபீஷணாழ்வான், தன்னினைவாலும் ராவணனுடைய நினைவாலும் பெருமாள் நினைவாலும் இக்ஷ்வாகுவம்ஶ்யனிறே;தான்சொன்னஹிதம் அவன் கேளாமையாலே (ச) "நிஶாசர-நிசாசர" என்றான் தான்; (ரு) "த்வாம் து திக்குலபாம்ஸநம்-த்வாந்துதிக்குலபாம்ஸநம்" என்றான் ராவணன்; ஸ்ரீவிபீஷணாழ்வான்றன்னை,(சு) "ராக்ஷஸாநாம்பலாபலம்-ராக்ஷஸாநாம்பலாபலம்" என்று பெருமாள்கேட்டார்; (எ) "ராக்ஷஸாநாம்வதே ஸாஹ்யம்- ராக்ஷஸாநாம்வதேஸாஹ்யம்" என்று-ராக்ஷஸ

---

இருபத்தொன்பதாம்பாட்டு. (அன்றுயர்) சரங்களுக்கன்றோ க்ரௌர்யமுள்ளது, வில்லுக்கு க்ரௌர்யமேதென்ன; அருளிச்செய்கிறார் (தீப்தபாவகஸங்காஶைரித்யாதி).

---

(க) ஸ்தோ - ர - ௩௭.
(உ) ரா - யு - ௧௬ - ௨௨.
(௩) ரா - ஆ - ௧௭ - அ.
(ச) ரா - யு -
(ரு) ரா - யு - ௧௬ - ௧௫.
(சு) ரா - யு - ௪௩ - ௧.
(எ) ரா - யு - ௪௩.

வதத்திலேஸஹகரிக்கக்கடவேனென்றுன் தான்; ஆகையாலே ராக்ஷஸஜாதிக்குக் கூட்டல்லவென்கை. ராவணனொருவனும் அபராதம் பண்ண ராக்ஷஸஜாதியாக நசிக்கும்படியிறே அவன் பண்ணின அபராதத்தினுடைய கனம். ஒருத்தன் அநுகூலனுனல் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுமடங்க உஜ்ஜீவிக்குமாபோலே யிறே ஒருவன் ப்ராதிகூல்யம் பண்ணினல் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுமடங்க நசிக்கும்படியும். ராவணன்பக்கல்சிற்றம் ராக்ஷஸஜாதியாகமுடிந்தது, மஹாராஜர்பக்கல் ஸ்நேஹத்தாலே வாநரஜாதியாக வாழ்ந்தது. (வென்றுனை) ராக்ஷஸஜாதியை நிஶ்ஶேஷமாக நசிப்பித்தாற்போலே யாயிற்று - ஸ்ரீவாநரவீரரிலே ஒருத்தனுக்கு ஒருவாட்டம் வாராதபடிக் கீடாகவென்றபடியும்.

(குன்றெடுத்ததோளினனை) பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களுக்கும் தன்னையொழியச்செல்லாதபடியான வாற்றுமையை விளைத்து அவர்களை யநுபவிப்பித்தவனை. இத்தால்-உன்னையொழியச்செல்லாதபடியான வாற்றுமையை விளைவித்தநீ உன்னை யநுபவிப்பிக்கவேண்டாவோவென்கை.

(விரிதிரைநீர்விண்ணகரம்மருவி) அவ்வவதாரத்துக்குப்பிற்பாடராய் தூதப்ரேஷணத்திலே யந்வயிப்பது, ப்ரணயரோஷத்திலே யந்வயிப்பதானுர்க்கு உதவுகைக்காகவன்றே திருவிண்ணகரிலேநித்யவாஸம்பண்ணுகிறது. (விரிதிரைநீர் விண்ணகரம்)ஸௌகுமார்யத்துக்கநுகூலமான ஜலஸம்ருத்தியையுடைய தேசம். (மருவி) பரமபதத்தைவிட்டு (க)*அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரத்திலே பொருந்தி வர்த்திக்கிறது - ஆஶ்ரிதவாத்ஸல்யத்தாலே யிறே. கர்ஷகனுக்கு அகத்திற்கிடையிற்காட்டில் மடைத்தலையில் கிடையிறே பொருந்தியிருப்பது. (நாளும் நின்றுனை) கல்பாவஸாநமாகநிற்கிறவனை.

(தண்குடந்தைக்கிடந்தமாலை)நின்றுல் கந்தவ்யபூமியுண்டென்னுமிடந்தோற்றுமிறே, அதுசெய்யாதபடி "ஸம்ஸாரங் கிழங்கெடுத்தாலல்ல து போகோம்" என்று ஶ்ரமஹரமான திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளினவனை. இப்படி இத்தேசத்திலே நிற்பது இருப்பது கிடப்பதாகைக் கடியென்னென்னில்;(மாலை) ஆஶ்ரிதவ்யாமுக்தனுகையாலே யென்கை. (நெடியானை) இவன் ஆஶ்ரிதர்க்கு முகங்கொடுக்கும்படி என்னுல் பேசப்போமோ? அபரிச்சிந்நனென்னுமித்தனையென்கிருள். அதவா, (நெடியானை) இப்படி ஸர்வஸுலபனுயிருக்கிறவன்கிடீர். எனக்கு எட்டாப்பூவாயிருக்கிறுன்.

(க) ஜி - தோ - ச.

(அடி நாயேன்நினைந்திட்டேனே) அவனுடைய உத்கர்ஷத்துக் கவதியில்லாதாப்போலே யிறே என்னுடைய நிகர்ஷத்துக்கு அவதி யில்லாதபடி. (நாயேன்) திறந்த வாசலெல்லாம் நுழைந்து திரிகை யும், நுழைந்தவாசலெல்லாம் பரிபூதமாய்ப் புறப்படுகையும், உடை யவனே உகந்துதொடிலும் ஸ்நாநம்பண்ண வேண்டும்படியானஜந்ம த்திலேபிறந்தவன். (அடிநாயேன்) ஸம்பந்தமே ஹேதுவாக நீமுகம் பார்த்தால் ஒழிதல் செய்யுமதொழியப்புறம்புகதியில்லாதவன். ஆஶ்ரயணவேளையோடுபோகவேளையோடு வாசியற ஆகிஞ்சந்யமும் ஸ்வ தோஷக்யாபநமுங் காணும் இவருக்குள்ளது. (க) "நாயேன் வந்தடைந்தேன்" என்றார்-ஆஶ்ரயண வேளையிலே; இங்கே -(அடிநாயேன்) என்கிறார்; இதிறே இவர் தம்மை நினைந்திருந்தபடி. † தமக்குண்டான நன்மையடங்கலும் போகோபகரணமாக நினைத்திருக்கும வரிறே.

நம்மாழ்வார், (உ) "அதனிற் பெரியவென்னவா" என்று தலைக் கட்டினார், இவர் (அடிநாயேன்) என்று தலைக்கட்டினார், அதுக்கு ஹேதுவென்னென்னில்; அவர்க்கு விரக்தி நைஸர்க்கிகமாகையாலே ப்ரேமத்தைவிளைக்கையாயிற்று க்ருத்யம், ஆகையாலே (உ) "அதனிற்பெரியவென்னவா" என்னும்படிக்கீடாகப் பண்ணினான்; இவர் (௩) *வென்றியேவேண்டி வீழ்பொருட்கிரங்கி வேல்கணார்கலவியே கருதிநின்றவாநில்லாநெஞ்சினையுடையராய்ப் போருகையாலே இவ னை (அடிநாயேன் நினைந்திட்டேன்) என்னப்பண்ணுகையாயிற்று க்ருத்யம்; ஆகையாலே இவனை (அடிநாயேன்நினைந்திட்டேன்) என் னப்பண்ணினான். (நினைந்திட்டேனே) அடியிலே நிர்ஹேதுகமாகவி ஷயீகரித்ததொரு விஷயீகாரமுண்டு, அது யாவதாத்மபாவியாகவே ணுமென்று நினைத்தேன். இயற்கையிற் புணர்ச்சி யாவதாத்ம பாவி யாகவேணுமென்று நினைத்தேனென்கை. (௨௯)

மூ.—மின்னுமாமழைதவழும்மேகவண்ணா
விண்ணவர்தம்பெருமானேயருளாயென்று
அன்னமாய்முனிவரோடமரரேத்த
அருமறையைவெளிப்படுத்தவம்மான்றன்னை

---

வ்யதிரேகத்தில் தரியாமை. அப்ராப்தவிஷயங்களில் ஜுகுப்ஸைதொடக்கமான நன்மைகளுண்டாயிருக்க (அடிநாயேன்) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (தமக்குண்டான நன்மையடங்கலுமித்யாதி.) ... (௨௯)

---

(க) தி - மொ - க - ௯ - க. (௩) தி - மொ - க - க - ௪.
(உ) தி - வாய் - ௧௦ - ௧௦ - ௧௦. (௪)

மன்னுமாமணிமாடமங்கைவேந்தன்
மானவேல்பரகாலன்கலியன்சொன்ன
பன்னியநூல்தமிழ்மாலைவல்லார்தொல்லைப்
பழவினையைமுதலரியவல்லார்தாமே. (௩0)

## திருநெடுந்தாண்டகம் முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

ப்தம்.—முனிவரோடு, அமரர், ஏத்த, அன்னமாய், அருமறையை, (ரு) வெளிப்படுத்த, அம்மான்றன்னை, மன்னு, மாமணி, மாடம், (க0) மங்கை வேந்தன், மானவேல், பரகாலன், கலியன், மின்னும்மா (கரு) மழைதவழும், மேகம், வண்ணா, விண்ணவர்தம் பெருமானே, (உ0) அருளாயென்றுசொன்ன, பன்னிய, நூல், தமிழ், மாலை, (உரு) வல்லார், தொல்லை, பழவினையை, முதலரிய, தாமேவல்லார். (௩0)

உரை.—ருஷிகளோடேகூட, ப்ரஹ்மாதிகள், ஸ்தோத்ரம்பண்ண, ஹம்ஸரூபியாய், பெறுதற்கரிய வேதத்தை, (ரு) ப்ரகாசிப்பித்த, ஸர்வேஶ்வரன் விஷயமாக, நிலைபெற்ற, விலையுயர்ந்தரத்நங்களால் செய்த, மாடங்களையுடைத்தான, (க0) திருமங்கைக்கு ராஜாவாய், பெருமைதங்கிய வேலையுடையராய், ப்ரதிபக்ஷத்தைவென்றவராய், கலிதோஷத்தைப்போக்கின ஆழ்வார், மின்னலையுடைத்தாய், (கரு) தர்சநீயமாய், வர்ஷியாநின்றுள்ள, மேகத்தினுடைய, வடிவையுடையனாய், நித்யஸூரி நிர்வாஹகனானவனே! (உ0) க்ருபை செய்தருளவேணுமென்று அருளிச்செய்த, (ஸ்வரூபரூபகுண விபூதிகளை) ப்ரதிபாதிப்பதாய், லக்ஷணோபேதமாய், தமிழ்பாஷையாய், மாலாரூபமான இப்ரபந்தத்தை, (உரு) அர்த்தத்தோடே கற்கவல்லவர்கள், அநாதிஸித்தமான, ப்ராரப்த்தகர்மத்தை, முதலோடே அரிந்துவிடுகைக்குத், தாங்களே ஸமர்த்தராவர்கள். (௩0) (௩0)

வ்யா.—முப்பதாம்பாட்டு. (மின்னுமாமழை)நிகமத்திலேஸ்வலாபத்தைச் சொல்லாநின்றுகொண்டு, இப்ரபந்தத்தைஅத்யவஸித்தவர்களுடைய ஸாம்ஸாரிகமான ஸகலதுக்கங்களையும் தாங்களே முதலரியவல்லாரென்கிறார்.

(மின்னுமாமழையித்யாதி) மின்னிமுழங்கிவில்லிட்டு தர்சநீயமாய் வர்ஷியாநிற்பதொரு வர்ஷுகவலாஹகம்போலேயிருந்துள்ள வடிவையுடையவனே! ஒருநீர்ச்சாவியிலேஒருகாளமேகம்வர்ஷித்தாற்போலே (க)"அடிநாயேன் நினைந்திட்டேனே" என்று இவருடைய ஆர்த்தநாதத்தைக்கேட்டு இவருடைய தாபமெல்லாம்நீங்கும்படியாகக் குளிரநோக்கிக்கொண்டு காளமேக நிபஶ்யாமமானவடிவோடே

---

(க) உக.

வந்து முகங்காட்டினபடியைச் சொல்லுகிறது. கீழ்ப்பாட்டிலே - பரோக்ஷநிர்த்தேசம்பண்ணியிருக்க இங்கே அபரோக்ஷித்துச்சொல்லுகையால் - வந்து முகங்காட்டினமைதோற்றுகிறது. ப்ரணயரோஷம் அகிஞ்சித்கரமான தசையிலும் ஸ்வதோஷக்யாபநம்கார்யகரமானபடி. நம்மாழ்வார் ஜகத்காரணத்வத்திலேயுபக்ரமித்து, (க)"அவாவறச்சூழரியையயனையரனை" என்று-ஜகத்காரணத்வத்தோடேதலைக்கட்டினார்; † இவர்வடிவிலேஉபக்ரமித்து "மின்னுமாமழைதவழும்" என்று வடிவோடே தலைக்கட்டினார்.

(விண்ணவர்தம்பெருமானே) இவ்வடிவைப் படியிட ஜீவித்திருக்குமவர்களைச் சொல்லுகிறது. * அயர்வறுமமரர்களுக்கு உன்னையநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கிறவனே! கடலிலே வர்ஷித்தாற்போலே அவர்களுக்கு உன்னைக் கொடுக்குமது ஓரேற்றமோ? அவர்கள் உன்னை ஸதாதர்சநம் பண்ணுமாபோலே நானும் உன்னை சரீரஸம்பந்தமற்று ஸதாதர்சநம்பண்ணும்படி க்ருபைபண்ணியருளவேணும். (அருளாய்) பரமபக்தி பர்யந்தமானவிடாய் பிறந்தவிடத்திலும் இரக்கமே ஸாதநமென்றிருக்கிறார். (உ) "ஆழியானருளே" என்று விஷயாந்தர நிவ்ருத்திக்கும் இரக்கமே ஸாதநமென்றார், பகவதநுபவத்துக்கும் இரக்கமே ஸாதநமென்கிறார்.

(அன்னமாயித்யாதி) தமக்கு அவன்வந்து தன்னைக்கொடுத்தபடிக்கு த்ருஷ்டாந்தஞ்சொல்லுகிறார். ப்ரஹ்மாவுக்கு ப்ரமாணத்தை வெளியிட்டாற்போலே யாயிற்று தமக்கு ப்ரமேயபூதனை தன்னை வெளியிட்டபடியும். (முனிவரோடமரரேத்த) ருஷிகளோடேகூட ப்ரஹ்மாதிகள் "வேதசக்ஷுஸ்ஸையிழந்தோம்" என்று தன்னையாஶ்ரயித்து ஏத்த. ருஷிகளுக்கும் ஆத்மோஜ்ஜீவநார்த்தமாக ப்ரமாணாபேக்ஷையுண்டு, ப்ரஹ்மாதிகளுக்கு ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரத்துக்கு ப்ரமாணாபேக்ஷையுண்டு. (அன்னமாய்) அபௌருஷேயத்வங்குலையாதபடி ஹம்ஸரூபியாய். (அருமறை) பெறுதற்கரியவேதம். பெறுதற்கரியது ப்ரமேயமன்று, ப்ரமாணமாயிற்று. (வெளிப்படுத்த) † ப்ரமாணத்துக்கு உத்பத்திவிநாசமாவது-ப்ரகாசாப்ரகா

---

முப்பதாம்பாட்டு. (மின்னுமாமழை) "மணியுருவில்பூதமைந்தாய்" என்றத்தைப்பற்ற (இவர் வடிவிலேயித்யாதி).

(ங) "[illegible]-வாருத்ஸ்ருஷ்டாஸ்வயம்புவா" இத்யாதியாலே வேதத்துக்கு உத்பத்திசொல்லாநிற்க (வெளிப்படுத்த) என்பானென்னென்ன; (ப்ரமாணத்துக்கு உத்பத்தியித்யாதி).

---

(க) தி - வாய் - க௦ - க௦ - கக. (ங)
(உ) தி - மொ - க - க - கூ -

Funding: IKS/Tattva Heritage. Digitization: Sarayu Trust/eGangotri



சங்களென்கை. (அம்மான்றன்னை) ஸர்வேஸ்வரனை இவர்களுக்கு வேதப்ரதாநம்பண்ணுகைக்கடி உடையவனுகையாலே யென்கை.

(மன்னுமாமணிமாட மங்கைவேந்தன்) இவர் தரித்தவாறே ஊரும் ஸ்த்திரமானபடி. கல்பாவஸாநத்தளவும் அழிவின்றிக்கே ஶ்லாக்யங்களான ரத்நங்களாலே செய்யப்பட்டமாடங்களையுடைத்தான திருமங்கை. (மங்கைவேந்தன்) பக்ஷியின்காலிலேவிழுந்தவர் திருமங்கைக்கு நிர்வாஹகரானார். (மானவேல்பரகாலன்) வேலெடுக்கவும் க்ஷமரானார்; கிஞ்சித்கரிக்கவும் பெற்றாரென்கை. † அத்தலையில் பரிவாலே யெடுத்தவேலிறே. (மானவேல்) காபுருஷனெடுக்கிலும் திருமங்கைமன்னனுக்கவல்லவேல். † மானவேற்பரகால னென்னுதல். (பரகாலன்) கையில் வாளாலும் ப்ரதிபாதநத்தாலும் ப்ரதிபக்ஷத்தைவென்று வைதிக மர்யாதையை ஸ்த்தாபித்தவர். (கலியன்) உபயத்துக்கும் அடியான மிடுக்கைச்சொல்லுகிறது. கலி - மிடுக்கு. அங்ஙனன்றியே, கலிகாலத்தைக் கடிந்தவரென்னுதல்.

(பன்னியநூல்தமிழ்மாலைவல்லார்) பன்னுதல் - பரம்புதல். ஸ்வரூபரூபகுணவிபூதிக ளித்தனையும் விளாக்கொலை கொண்டிருக்கை. நூல்-ஸர்வலக்ஷணோபேதமாயிருக்கை. பின்பு லக்ஷணங்கட்டுவார்க்கும் இதுவே கொண்டு செய்யவேண்டும்படியிருக்கை. தமிழ்-ஸர்வாதிகாரமா யிருக்கை. (மாலை) ஈஶ்வரனுக்கு சிரஸாதார்யமா யிருக்கை. (தொல்லையித்யாதி) கார்யகாரணரூபத்தாலே அநாதியாய் வருகிற அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதி ஸம்பந்தங்களைத் தாங்களே ஸவாஸநமாகப் போக்கவல்லவர். (வினை) அதாகிறது - புண்யபாபரூபமான கர்மத்வயம். இதுதான் பூர்வோத்தராகப்ராரப்தரூபமாயிருக்கும். இதுதான் அல்லாத ஜ்ஞாநாநுதயம், அந்யதாஜ்ஞாநம், விபரீதஜ்ஞாநம், ஸ்த்தூலஸூக்ஷ்மரூபமான அசித்ஸம்பந்தம், வாஸநாருசிகளுமாகிற விரோதிவர்க்கத்துக்குமுபலக்ஷணம்.

(தொல்லைப்பழவினை) என்கிறது - இவைதான் † பழையதாயிருக்கையும் அடிகாணவொண்ணாதிருக்கையுமாகிற அதிசயத்தைப் பற்றச்சொல்லுதல்; அறவும் பழையதானவினையென்னுதல். (தாமே)

---

வேலெடுக்கை கிஞ்சித்காரமாகக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (அத்தலையில் பரிவாலேயித்யாதி). (மானம்) என்றது பரகாலனுக்கு விசேஷணமான பக்ஷத்தில் - தாஸ்யாபிமாநத்தையுடையரான பரகாலனென்றபடி.

(தொல்லை) என்றும், (பழமை) என்றும் சொன்னது புநருக்தமன்றோவென்ன; கார்யகாரண ரூபத்தாலே யருளிச்செய்கிறார் (பழையதாயித்யாதி).

இப்ரதிபந்தகங்களையெல்லாம் தாங்களே ஸவாஸநமாகப் போக்கவல்லார். ஈஶ்வரன் முழங்கைத்தண்ணீர்வேண்டாவென்கை.

† (அருளாயென்று-முனிவரோடமரரேத்த) என்று, அவர்களுக்கு விசேஷணமானபோது - எம்பெருமானைக் கண்டபோதே, (க) "என்னவாவறச்சூழ்ந்தாயே" என்னசக்தரல்லாமையாலும், கீழிற் பாட்டுப்போலே இப்பாட்டில் இயலின்பலஹாநி தோற்றியிராமையாலும், எம்பெருமான் திருமேனி வர்ஷுகவலாஹகம்போலேயிருந்ததென்கையாலும், * அயர்வறுமமரர்களுக்குத் தன்னை புஜிக்கக்கொடுத்துக்கொண்டிருக்கும்படியைச் சொல்லுகையாலும், தாமே வேலெடுக்க சக்தராகையாலும், ப்ரதிபக்ஷத்தை நிரஸித்தபடியை யருளிச்செய்கையாலும், இப்படியுள்ள பேச்சுக்களெல்லாவற்றாலும் - தம்முடைய பலஹாநிபோய்த் தம்முடைய வபேக்ஷிதம் பெற்று த்ருப்தரானாரென்னுமிடம் இப்பாட்டிலே வ்யக்தம்.

[முனிவரோடமரரேத்த - அன்னமாய் அருமறையை வெளிப்படுத்த வம்மான்றன்னை மன்னுமாமணி மாடமங்கைவேந்தன் மானவேல்பரகாலன் கலியன் - மின்னுமாமழை தவழும் மேகவண்ணா விண்ணவர்தம்பெருமானே யருளாயென்று-சொன்ன - பன்னிய நூற்றமிழ்மாலைவல்லார் தொல்லைப்பழவினையை முதலரியவல்லார் தாமே] என்றந்வயம். (௩௦)

பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த

திருநெடுந்தாண்டக வ்யாக்யாநம்

முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளைதிருவடிகளேசரணம்.

---

(மின்னுமாமழைதவழும்) இத்யாதியெல்லாம் ஸ்வரஸமாக ப்ரஹ்மாதிகளுக்கு விசேஷணமாகத் தோன்றியிருக்க, சப்தத்தைநெருக்கி இவருக்கு விசேஷணமாக யோஜிக்கிறதுக்குக் கருத்தென்னென்ன; அருளிச்செய்கிறார், (அருளாயென்று முனிவரோடமரரேத்தவென்றித்யாதி). (௩௦)

அரும்பதம் முற்றிற்று.

---

(க) தி - வாய் - ௫௦ - ௫௦ - ௫௦.



    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# பொதுத் தனியன்கள்.

அழகிய மணவாள னருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍॥

ஸ்ரீஸைலேஸ தயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்।
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்॥

கூரத்தாழ்வா னருளிச்செய்தது.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாத யாமுநமத்யமாம்।
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம்॥

𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜 𑌯𑍁𑌗𑍍𑌮 𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑂃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇॥

யோ நித்யமச்யுதபதாம்புஜ யுக்ம ருக்ம
வ்யாமோஹத ஸ்ததிதராணி த்ருணாய மேநே।
அஸ்மத் குரோர்பகவதோ ऽஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே॥

### ஆளவந்தா ரருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯 𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿
𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌂 ।
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇 𑌰𑍍𑌵𑌕𑍁𑌳𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

மாதா பிதா யுவதய ஸ்தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்।
ஆத்யஸ்ய நஃ குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா॥

### பராஶரபட்ட ரருளிச்செய்தது.

𑌭𑍂𑌤𑌂 ‡𑌸𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰 𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌪𑌰𑌕𑌾𑌲 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

பூதம் ஸரஸ்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்।
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோ ஽ஸ்மி நித்யம்॥



‡ (பா) ஸரஸ்ய.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ‡ திருப்பல்லாண்டின்

# தனியன்கள்.

பிள்ளைலோகார்ய ஜீயரருளிச்செய்த வ்யாக்க்யாநம்.

அவதாரிகை.—இதுதான் திருப்பல்லாண்டுத் தனியனாயிருக்கும். அந்தத் திருப்பல்லாண்டு பாடுகைக்கடியான பெரியாழ்வார் வைபவத்தைப் பெருக்கப்பேசி, அவரை ப்ரணிபாத நமஸ்காரம் பண்ணும்படி சொல்லுகிறது. ... ... ... ... ... *

நாதமுநிக ளருளிச்செய்தது.

𑌗𑍁𑌰𑍁𑌮𑍁𑌖𑌮𑌨𑌧𑍀𑌤𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌵𑍇𑌦𑌾𑌨𑌶𑍇𑌷𑌾𑌨𑍍
𑌨𑌰𑌪𑌤𑌿𑌪𑌰𑌿𑌕𑍢𑌪𑍍𑌤𑌂 𑌶𑍁𑌲𑍍𑌕𑌮𑌾𑌦𑌾𑌤𑍁𑌕𑌾𑌮𑌃 ।
𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌮𑌮𑌰𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌂 𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍
𑌦𑍍𑌵𑌿𑌜𑌕𑍁𑌲𑌤𑌿𑌲𑌕𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿॥ (௧)

குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநஶேஷாந்
நரபதிபரிக்லிப்தம் சுல்கமாதாதுகாம: ।
ஶ்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி ॥ (௧)

---

‡ இவையே பெரியாழ்வார் திருமொழிக்கும் தனியன்களாம்.

வ்யாக்க்யாநம்.—(குருமுகமநதீத்ய) - குருமுகமநதீத்ய) ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனு ஸர்வேஶ்வரனும்,(க)"ஸாந்தீபநேஸ்ஸக்ருத் ப்ரோக்தாம் ப்ரஹ்மவித்யாம் ஸவிஸ்தராம்-ஸாந்தீபநேஸ்ஸக்ருத் ப்ரோக்தாம் ப்ரஹ்மவித்யாம் ஸவிஸ்தராம்" என்னும்படி - ஸாந்தீபநியிடத்திலே யாய்த்து ஸகலவேதங்களையும் அதிகரித்தது; இவர், அங்ஙன் ஒரு குருகுலவாஸம் பண்ணி தந்முகேந(உ)*நலங்களாய நற்கலைகள் நாலை யும் அதிகரியாதே, புண்டரீகரைப்போலே (௩) *துளவத்தொண் டிலே மண்டி, ஸ்ரீமாலாகாரரைப்போலே (௪) *சூட்டுநன்மாலைகளைத் தொடுத்து, வடபெருங்கோயி லுடையானுக்குச் சூட்டி அடிமைசெய் து போந்தார்; ஏவம்வித தாஸ்ய ரஸஜ்ஞரான இவர். (நரபதி பரிக்லுப்தம் ஶுல்கமாதாதுகாம:-நரபதிபரிக்லிப்தம் ஶுல்கமாதாதுகாம:) என்று-ஸ்ரீவல்லபதேவனென்கிற ராஜாவானவன் பரதத்வ நிர்ணய பூர்வ கமாகப் புருஷார்த்தலாபத்தை லபிக்கைக்காக அநேகமான அர்த்தத்தை வித்யாசுல்கமாகக் கல்பித்துக் கல்தோரணத்திலே கட்டிவைக்க; இப் படிநிர்மிதமான அந்த தநத்தை வடபெருங்கோயிலுடையானு டைய ஆஜ்ஞையாலே ஆஹரித்துக்கொண்டுவரவேணுமென்கிற அபே க்ஷையையுடையராய், வித்வத்கோஷ்டியிலே சென்று. (அஶேஷாந் - வேதாந் - ப்ராஹ-அஶேஷாந்- வேதாந்-ப்ராஹ) (௫) "வேண் டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்" என்றத்தைச் சொல் லுகிறது. இவர்க்கு அப்போது (௬) *வேதப்பிரானுரான (௭) *பீதக வாடைப் பிரானுர்தாமே பிரமகுருவாய், (எ) *போதில்கமல வன்னெ ஞ்சம் புகுந்து (அ) *நாவினுளானுய், (௯) *நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகளை இவர்முகேந பேசுவித்தானிறே. (௧0) *எயிற்றிடை மண்கொண்ட வெந்தையான (௧௧) *ஞானப்பிரானுய்த்து இவரை (௯) *ஞானக்கலைகளை ஓதுவித்தது. ஆகையாலே நாட்டார்க்கு ஓதினவிட மொழிந்து ஓதாதவிடம் தெரியாதிருக்குர்; இவர்க்கு *மயர்வறமதி நலமருளுகையாலே அசேஷவேதங்களு மருளிச்செய்யும்படி விசத மாய்த்து. அத்தாலே (௧௨) "வேதாந்த விழுப்பொருளின்மேலிருந்த

(க) (உ) தி-ச-வி-௯0. (௩) தி-மா-சடு. (௪) தி-வி-உக.
(௫) பெரி-திரு-தனி. (௬)பெரி-திரு-டு-உ-க. (எ)பெரி-திரு-டு-உ-அ.
(அ) தி-வாய்-க-௯-எ. (௯)தி-வாய்-க-௯-அ. (௧0)பெரி-திரு-டு-உ-௯.
(௧௧) தி-வி-௯௯. (௧உ) பெரி-திரு-ச-௩-௧௧.

விளக்கை விட்டுசித்தன் விரித்தனன்'' என்னும்படி பரதத்வ ஸ்தாபநம்பண்ணி அந்த வேததாத்பர்யமான திருப்பல்லாண்டை, (க) *அங்கானைமேல் மங்கலவீதி வருகையிலே மங்களாசாஸநமாக வருளிச்செய்தார். "வேதாந்தேஷு - வேதாந்தேஷு" என்கிறதுக்குள்ளே இதுவும் அந்தர்ப்பூதம். (உ) "வேதைஶ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:- வேதைஶ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" என்னக் கடவதிறே.

(ஶ்ரீஸூக்தி - ஶ்ரீஸூக்திம்) அநந்தரம், வித்வான்களை வென்று கிழியறுத்து அந்தத(ந)நத்தை ஸ்வாமிஸந்நிதியிலே ஸமர்ப்பித்து, மீளவும் தம் துறையான (ங) *துளவத்தொண்டிலே மூண்டு நடத்திக்கொண்டு போர; அக்காலத்திலே ஆண்டாள் இவர்க்குத் திருமகளாகத் திருத்துழாயடியிலே அவதரிக்க; இவரும் (ச) திருமகள்போல வளர்த்துப்போர; அஞ்சுபிராயத்திலே, திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியில் பெண்களை அநுகரித்துத் திருப்பாவைபாடி, அதுக்குமேலே, அவர் (ரு) *தொடுத்த துழாய்மலரை, (சு) "வியன்துழாய்க்கற்பென்றுசூடும் கருங்குழல்மேல்" என்கிறபடியே சூடிக்கொடுத்தவளாய், பின்பு ப்ராப்தயௌவநையாய், (எ) * மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழாததன்மையளாய், (அ) "தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்" என்றும், (கூ) "பணவாளரவணைப் பற்பலகாலமும் பள்ளிகொள் மணவாளர்" என்றும் சொல்லப்படுகிற அழகிய மணவாளப்பெருமாளை ப்ரார்த்தித்துத் திருமணம் புணருகையாலே அவர் மணவாளப்பிள்ளையானார். (க0) * மறைநான்கு முன்னோதிய பட்டனுக்கிறே (கக) *பட்டர்பிரான் கோதையைக்கொடுத்தது. ஆகையாலே, ஔபசாரிகமாகவன்றிக்கே, யதாவாக ரங்கநாதனுக்குப் பட்டநாதர் மாமனாரானார். அத்தாலே (அமரவந்த்யம் - அமரவந்த்யம்) என்கிறது. அதாவது - (கஉ) *வடிவுடைவானோர் தலைவனான தன்னை, அவர்கள் அடிவணங்கி ஏத்துமாபோலே, இவர் தம்மையும் அமரர் வந்திக்கும்படியான வரிசை கொடுத்தபடி.

---

(க) நா-தி-சு-க0. (உ) கீ-கரு-கரு. (ங) தி-மா-சரு.
(ச) பெரி-தி-ங-அ-ச. (ரு) தி-ப-கூ. (சு) ங-திரு-சுகூ.
(எ) நா-தி-க-ரு. (அ) நா-தி-கக-க. (கூ) நா-தி-கப-சு.
(க0) தி-மொ-எ-ங-எ. (கக) தி-பா-ங0. (கஉ) தி-வாய்-எ-உ-க0.

(க) * தம்மையே யொக்க வருள்செய்வரிறே. பட்டநாதரான மாத்ர மன்றிக்கே, தேவர்களாலும் ஸ்துத்யராயிருக்குமவரென்கிறது. (உ) "விரும்புவ ரமரர்மொய்த்து" என்னக்கடவதிறே. அஸ்த்தாநே பய சங்கிகளானவர்களையும் இவர் மங்களாசாஸநம் பண்ணுமவராகையாலே, அவர்களும் இவர்க்கு ஸ்துத்யபி(ஃ)வாதநங்களைப் பண்ணுவர்கள். (௩) "𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌨𑍀𑌚𑌭𑌾𑌵𑁈𑌃 - பரஸ்பரநீசபாவை:" என்னக்கடவதிறே.

இனி ரங்கநாதனோடே ஸம்பந்திக்கைக்கீடான பட்டநாதகுலத்தைச்சொல்லுகிறது (𑌦𑍍𑌵𑌿𑌜𑌕𑌲𑌤𑌿𑌲𑌕𑌂 - த்விஜகுலதிலகம்) என்று. (௪) * வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தராகையாலே, (௫) "அந்தணனையான்கண்ட தணிநீர்த்தென்னரங்கத்தே" என்னும்படி கண்டு கொடுத்தார். த்விஜகுலதிலகராகையாவது - ப்ராஹ்மண குலத்துக்கெல்லாம் முக்க்யராய், ஶிரஸாவாஹ்யராய், ஶ்ரேஷ்ட்டராயிருக்கையென்றபடி. (𑌤𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 - தம்விஷ்ணுசித்தம்) அப்படி ஶ்ரேஷ்ட்டராய், விஷ்ணுவை எப்போதும் சித்தத்திலே யுடையரானவரையென்கிறது. (௬) "வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர்விட்டு சித்தன் விரும்பியசொல்" என்று - அடியிலே தமக்கு நிரூபகமாக ஆழ்வார் தாமேயருளிச்செய்தாரிறே. "விஷ்ணுசித்தம்" என்கையாலே, (எ) "மின்னு நூல் விட்டுசித்தன் விரித்த" என்று - பெரியாழ்வார் திருமொழியடியிலும். (அ) "விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலனை" என்று - முடிவிலுமருளிச்செய்கையால், இந்தத்திருநாமத்தாலே அந்த ப்ரபந்த ப்ரவக்தாவென்னுமதுவும் ஸூசிதம். அதுக்கும் தனியன் இதுவேயிறே. (அ) "அனந்தன்பாலும் கருடன்பாலும் ஐதுநொய்தாகவைத்து எனமனந்தனுள்ளேவந்துவைகிவாழச்செய்தாயெம்பிரான்" என்னும்படி இவர் திருவுள்ளத்திலே அத்யபி(ஃ)நிவிஷ்டனுமிருக்குமாய்த்து. (𑌵𑌿𑌷𑍍𑌣𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 - விஷ்ணுசித்தம்) (௯) * விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்யராயிருக்கிறபடி. (௧௦) "நின்கோயிலில்வாழும் வைட்டணவன்" என்றாரிறே. அவனும் வைஷ்ணவ ஸம்பந்தத்தை அபேக்ஷித்துக் கைப்பற்றினான். (𑌤𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 - தம்விஷ்

(க) தி-மொ-கக-௩-௫. (உ) தி-வாய்-௩-௪-கக. (௩) வை-ஸ்த-எ௫. (௪) பெரி-திரு-௫-௪-கக. (௫) தி-மொ-௫-௬-எ. (௬) தி-ப-கஉ. (எ) பெரி-திரு-க-உ-க0. (அ) பெரி-திரு-௫-௪-அ. (௯) விஷ்வக்ஸேந ஸம்ஹிதை. (௧0) பெரி-திரு-௫-க-௩.

ணுசித்தம்நமாமி) அந்த விஷ்ணுசித்தரை (க) "கிழியறுத்தான்பாதங்கள் யாமுடையபற்று" என்னும்படி ஸேவிக்கிறேனென்கிறது. நமஸ்காரமும் ஸேவையும் பர்யாயம். (உ) "ஓம் நமோ விஷ்ணவே - ஓம் நமோ விஷ்ணவே" என்னுமது விஷ்ணுசித்தவிஷயத்திலேயாய்த்து; விசேஷஜ்ஞர்க்கு பகவத்விஷயத்திலே அரைவயிறாய், இங்கேயிறே எல்லாம் பூர்ணமாவது. (ங) * நம்பி விட்டுசித்தரிறே. இத்தால் - ப்ரதம ப்ரபந்தாநுஸந்தாநதசையில் தத்வக்தாவான ஆழ்வாரை (ச) "தம் வ-ஞவ-ஹிவாஉயேஃ - தம்பூர்வமபிவாதயேத்" என்று ப்ரதமம் திருவடிதொழும்படியைச் சொல்லிற்றாய்த்து. (க)

அவ.—(மின்னார்தடமதிளித்யாதி)இதில், ஸ்ரீ வில்லிபுத்தூர் பட்டர்பிரானுன பெரியாழ்வா ரவதரணஸ்த்தலத்தை அநுஸந்திப்பார் திருவடிகளைத் தொழுகையிலுண்டான ப்ரீதியையும், அவர் செயலைச்சொல்லுகையாலுண்டான விரோதி நிவ்ருத்யாதிகளிலே த்ருப்தியையும் மநஸ்ஸோடே சொல்லி உலாவுகிறதாயிருக்கிறது. *

பாண்டிய பட்டரருளிச்செய்தது.

மூ.—மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்றொருகால்
சொன்னார்கழற்கமலம் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம் கீழ்மையினில் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து. ... ... (உ)

வ்யா.—(மின்னார்தடமதிள்சூழ்) தேஜஃப்ரசுரமான பெரியமதிளாலே சூழப்பட்ட வில்லிபுத்தூர். இத்தால் (ரு) * செம்பொனேய்ந்த மதிளாயிருக்கை. ப்ரதிகூலர்க்குக் கிட்டவொண்ணுதபடியாய், அநுகூலர்க்குக் கண்டு வாழும்படியாயிருக்கை. கல்மதிள்போலே அத்தலைக்கு அரணாய், மங்களாசாஸநபரரான பெரியாழ்வார் இருக்குமூரில் மதிளிறே; ஏவம்விதமான மதிளாலே சூழப்பட்ட. (வில்லிபுத்தூரென்று ஒருகால்சொன்னார் கழற்கமலம்சூடினோம்) ஒருகாலாகிலும் ஸ்ரீவில்லிபுத்தூரை உச்சரித்த ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாதகமலங்களை (சு) * பைங்கமலத்தண்டெரியலாகத் தலையிலே சூடினோம். (எ) "கோவிந்தன்றன்னடியார்களாகி யெண்டிசைக்கும் விளக்

(க) பெரி-திரு-தனி. (உ) விஷ்ணுஷடக்ஷரி. (ங) ந-தி-கஙு-கo.
(ச) (ரு) தி-வாய்-கூ-கo. (சு) தி-பா-ஙo.
(எ)பெரி-தி-உ-கூ-கக.

காகி நிற்பாரிணையடி யென் தலைமேலவே" என்றிறே ஆழ்வாருமருளிச்செய்தது. ஸ்ரீவில்லிபுத்தூர்தான், வடபெருங்கோயிலுடையானுக்கும் ஆழ்வார்க்கும் ஆண்டாளுக்கும் நிரூபகமான தேசமாய்த்து. (க) "வில்லிபுத்தூருறைவான்" (உ) "வில்லிபுத்தூர்ப்பட்டர்பிரான்" (ங) "அன்னவயல் புதுவையாண்டாள்" (ச) "கோதைபிறந்தவூர்-வில்லிபுத்தூர்" என்னக்கடவதிறே. ப்ரணவம்போலே மூவரும் கூடவாயிருக்கை. இப்படி உத்தேஶ்யமான ஊரை ஒருகால் அநுஸந்திப்பார் எப்போது முத்தேஶ்யராகையாலே, அவர்கள் ஸ்ரீபாதங்கள் சிரோபூஷணமாக தா(தா)ர்யமென்கிறது; (ரு) "அரசமர்ந்தானடிசூடுமரசு" என்னுமாபோலே.

பின்னை விரோதிகள் செய்ததென்னென்னில்; (முன்னாள்கிழியறுத்தானென்றுரைத்தோம் கீழ்மையினில்சேரும் வழியறுத்தோம்) முன்னாள் கிழியறுக்கையாவது-முற்காலத்திலே பாண்டியன் வித்யாசுல்கமாகக்கட்டின த்ரவ்யக்கிழியை, அங்கேசென்று, வேதாந்தார்த்தமுகேந "விஷ்ணுவே பரதத்வம்" என்று விஷ்ணுசித்தரான தாம் வித்வஜ்ஜநங்களைவென்று த்ரவ்யக்கிழியையறுத்த ஆழ்வாருடைய இந்த அத்யத்புதகர்மத்தை அநுஸந்தித்தோம்; அத்தாலே கீழ்மையினில்சேரும் வழியறுத்தோம். (சு) "ஜந்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்த்வத꞉। த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந - ஜந்ம கர்மச மேதிவ்யமேவம் யோவேத்தி தத்வத꞉ - த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதிஸோऽர்ஜுந" என்று- க்ருஷ்ணவிஷயத்தில் ஜந்மகர்மங்கள் ஜந்மஸம்ஸாரபந்தத்தை அறுக்குமாபோலேயாய்த்து விஷ்ணுசித்தர் ஜந்ம கர்மங்களும். இங்கும், ஸ்ரீவில்லிபுத்தூர் ஜந்மமும், கிழியறுக்கை கர்மமுமாயிருக்கும். கீழ்மையினில்சேரும் வழியறுக்கையாவது-நிஹீநக்ருத்யத்தாலே ப்ராபிக்கும் ப்ரதிபந்தகமான மார்க்கத்தைச் சேதித்தோம். (எ) [புறநெறிகளைகட்டு] அவைதிகமார்க்கத்தையடைகை பாபபலமிறே. (அ) "மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர்" என்று - இவர்தாம் ஸந்மார்க்கவர்த்திகளிறே. அன்றிக்கே, "கீழ்மையினில்சேரும் வழி" என்று-அத꞉(த꞉)பதநத்திலே ப்ராப்தமான மார்க்கமென்று-அர்ச

(க) நா-தி-ரு-ரு. (உ) (ங) தி-பா-தனி.
(ச) முக்தகம். (ரு) பெரு-திரு-கo-எ. (சு) கீ-சு-கூ.
(எ) தி-வாய்-க-ங-ரு. (அ) நா-தி-கக-கo.

சிராதிமார்க்கத்துக்குக் கீழாய், புநராவ்ருத்தி லக்ஷண ஹேதுவான தூமாதி மார்க்கத்ரயத்தையும் நிரோதித்தோம். (நெஞ்சமேவந்து)(க) *நெறிநின்ற நெஞ்சாய், நீ அநுகூலிக்கையாலே இந்த லாபத்தை லபித்தோம். (வந்து) இவ்வளவும் வந்து; ஆழ்வாரளவும்வந்து, வில்லிபுத்தூரென்றொருகால் சொன்னார்கழற்கமலஞ்சூடினோம்; கீழ்மையினில்சேரும் வழியறுத்தோம்; இதுவன்றோ நீ அநுகூலித்ததால் பெற்ற பேறு; நீ என்வழி வருகையாலே இவையெல்லாம் பெற்றோம். இஷ்டப்ராப்தியோபாதி அநிஷ்ட நிவாரணமும் ப(ஃ)லமிறே. (நெஞ்சமேவந்து) (உ) "நெஞ்சமே நல்லை நல்லை உன்னைப்பெற்றாலென்செய்யோ மினியென்ன குறைவினம்" என்றாப்போலே பெற்ற பேற்றைப்பேசி நெஞ்சோடே ஹர்ஷிக்கும்படியைச் சொல்லுகிறது. "வில்லிபுத்தூரென்று ஒருகால்சொன்னார்" என்றது-(ந) "வண்டினினிசைக்கும் வில்லிபுத்தூர்" என்றும், (ச) "மென்னடை யன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர்" என்றும் பகவத்விஷயத்திலே தமப்பனாரும் மகளாரும் ஒருகால் சொன்னாப்போலே, பாகவதவிஷயமாக ஒருகால் சொன்னாரென்றபடி. ஸம்பந்தாநுஸந்தாநம் ஸக்ருத்தென்றபடி.

அவ.—(பாண்டியன் கொண்டாட) இதில், ப்ரபந்தவக்தாவான பெரியாழ்வார் திருவடிகளில் உபாய ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது.

மூ.—பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்
ஈண்டிய சங்க மெடுத்தூத—வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று. (உ)

வ்யா.—(பாண்டியன்கொண்டாட) (ரு) 'தென்னன் கொண்டாடும்" என்னுமாபோலே "நமக்கு பரதத்வநிர்ணயம் பண்ணித்தரும்படி பட்டர்பிரான் வந்தான்"என்று பாண்டியனை ஸ்ரீவல்லபதேவன் சொல்லிக்கொண்டாட. அத்தசையிலே (ஈண்டியசங்கமெடுத்தூத) திரண்டிருக்கிற வித்வத்ஸங்கமானது, ஓரோப்ரதேசங்களிலே ஓதிக்கிடக்கிற ப்ரஹ்மஸாபரவாக்யங்களை எடுத்து ப்ரஹ்ம ருத்ராதிகளைப் போரப்பொலியச்சொல்லி உபந்யஸிக்கவென்னுதல்; (ஈண்டியசங்கம்

(க) க-திரு-அந. (உ) தி-வாய்-க-கo-ச. (ந) உ-உ-ரு.
(ச) நா-தி-ரு-ரு. (ரு) சு-உ-எ.

உ

மடுத்தூத) என்று - ஜயசங்கங்கள் பலவற்றையும் வாயிலே மடுத்து ஊதவென்னுதல். (க) "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலி" என்னக்கடவதிறே. (எடுத்தூத) என்றபோது - சங்கத்தை எடுத்து வாயாலே ஊதவென்றபடி. (அடுத்தூத) என்றபோது - கிட்டி ஊதவென்றபடி.

அதிக்ஷேபித்த வித்வான்கள் வாயடைக்கும்படி (வேண்டிய வேதங்களோதி) (உ) "𑌸𑌰𑍍𑌵𑍇 𑌵𑍇𑌦𑌾 𑌯𑌤𑍍𑌪𑌦𑌮𑌾𑌮𑌨𑌨𑍍𑌤𑌿 - ஸர்வே வேதா யத்பத மாமநந்தி" (ங) "𑌵𑍇𑌦𑍈𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌹𑌮𑍇𑌵 𑌵𑍇𑌦𑍍𑌯𑌃 - வேதைஶ்ச ஸர்வைரஹ மேவ வேத்ய:" என்கிறபடியே வேதங்களெல்லாவற்றாலும் ஆராதநப்ரகாரத்தையும் ஆராத்ய வஸ்துவையும் சொல்லுகிறதென்றறுதியிட்டு, பகவத்பரத்வத்தை ஸாதித்து, இனித் ‡ தாழுகைக்கு ஹேதுவென்? என்று திருவடிகளிலே தாழ்ந்த கிழியை, த்வரித்து அறுத்தவருடைய - த்ரவ்யக்ரந்தியை அறுத்தவருடைய. (பாதங்கள்) கிழியறுத்த பட்டர்பிரான் பாதங்கள். (யாமுடையபற்று) "பட்டர்பிரானடியேன்" என்னும்படி அவர்க்கு சேஷபூதராயிருக்கிற நம்முடைய ரக்ஷை. (ச) "தகையான்சரணம் தமர்கட்கோர்பற்று" என்கிற பொதுவானவனுடைய திருவடிகளன்று, (ரு) * அவனைப்பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன்தாள். (யாமுடையபற்று) நம்முடைய, அரண் - புகல் - உபாயம்; சரண்யமென்றபடி. (யாமுடையபற்று) - பற்றற்ற நம்முடைய பற்று. (சு) "பற்றிலார் பற்ற நின்றான்" என்னக்கடவதிறே.

தனியன்கள் வ்யாக்யாநம் முற்றிற்று.



பிள்ளைலோகார்ய ஜீயர் திருவடிகளே சரணம்.



(க) நா-தி-கo-கூ. (உ) கட-வ-உ-கரு. (ங) கீதை-கரு-கரு.
(ச) தி-வாய்-கo-ங-கo. (ரு) இரா-நூ-கரு. (சு) தி-வாய்-எ-உ-எ.
‡ தாழ்கை-விலம்பிக்கை.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த
# திருப்பல்லாண்டு வ்யாக்யாநாவதாரிகை.



(க) "பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் - பதிம் விஸ்வஸ்யாऽத்மேஸ்வரம்" என்றும், (உ) "தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம் - தமீஸ்வராணும் பரமம் மஹேஸ்வரம்" என்றும் - ஸர்வஸ்வாமியாகவும் ஸர்வநியந்தாவாகவும் ஸர்வேஸ்வரன் ஸ்வரூபத்தை நிர்ணயித்து, சேதநஸ்வரூபத்தை (ங) "யஸ்யாஸ்மி - யஸ்யாऽஸ்மி" என்றும், (ச) "பரவாநஸ்மி - பரவாநஸ்மி" என்றும், (ரு) "தாஸோऽஹம் வாஸுதேவஸ்ய - தாஸோऽஹம் வாஸுதேவஸ்ய" என்றும், (சு) "தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே - தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே" என்றும் நிரூபித்து, இந்தஸ்வரூபாநுரூபமான ஜ்ஞாநமும் ஜ்ஞாநாநுரூபமான

அரு.—பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை, ஸ்வாசார்யநியமத்தாலே திருவாய்மொழிக்கு இருபத்துநாலாயிரமாக ஒரு வ்யாக்யாநம்செய்தருளி, பின்புள்ளவையான இருபத்துமூன்று திவ்யப்ரபந்தங்களுக்கும் (எ) *தெரிய வ்யாக்யைகள் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, (அ) *வேதத்துக்கு ஓமென்னுமதுபோல் உள்ளதுக்கெல்லாம் சுருக்கான திருப்பல்லாண்டுக்கு வ்யாக்யாநம் செய்தருளக்கோலி, வக்த்ருவைலக்ஷண்ய பூர்வகமாக இப்ப்ரபந்த வைபவத்தைப் பலபடியாலும் உபபாதித்துக்கொண்டு, ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்தையும் சுருங்க வருளிச்செய்கிறார். "பதிம்விஸ்வஸ்ய" இத்யாதி, "மேலிற்பாட்டு பல ஸ்ருதி" என்னுமளவும்.

அதில், சேதநோஜ்ஜீவநார்த்தமாகப் பெரியாழ்வாரை ஸர்வேஸ்வரன் அவதரிப்பித்தருளினானென்றருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அதிஷ்டிகை யிடுகிறார் (பதிம்விஸ்வஸ்யேத்யாதி). எடுத்த ஸ்ருதிக்கர்த்தம் - (ஸர்வஸ்வாமியாகவும் ஸர்வநியந்தாவாகவும்) என்றது. (ஸ்வரூபாநுரூபமான ஜ்ஞாநமாவது) - ஶேஷபூதனுக்கு ஶேஷிபக்கல் கைங்கர்யமே கர்த்

(க) தை-நா-கக. (உ) ஶ்வேதாஶ்வ-சு. (ங) யஜு-அஷ்ட-ங-ப்ர-எ.
(ச) ரா-ஆர-கடு-எ. (ரு) (சு) ஹாரீதஸ்ம்ருதி.
(எ) உ-தே-ர-ககு. (அ) உ-தே-ர-சகூ.

வ்ருத்தமும் ப்ராப்தமாயிருக்க, அயஃபிண்டத்துக்கு அக்நிஸம்ஸர்க்கத்தால்வந்த தாதாத்ம்யம்போலே, சேதநர் அசித்ப்ரத்யாஸத்தியாலே, "தேவோஃஹம், மநுஷ்யோஃஹம்" என்று அஹங்கரித்து, புத்ரமித்ராதிகள் பக்கலிலே மமதாபுத்தியைப்பண்ணி, இப்படி ப்ரவாஹரூபேண நித்யமான அஹங்கார மமகாரங்களாலே ஸர்வேஶ்வரகதமான ஸ்வாமித்வ நியந்த்ருத்வங்களைத் தங்கள் பக்கலிலே அத்யவஸித்து, ஸ்வதஃப்ராப்தமான பாரதந்த்ர்யத்தில் விமுகராய் அதஏவ சப்தாதி விஷய ப்ரவணராய், அத்தால்வந்த ராகத்வேஷாதிகளாலே அபிபூதராய்ப்படுகிற துஃக்கபரம்பரைகளை அநுஸந்தித்து, நிருபாதிக சேஷியான ஸர்வேஶ்வரன், "ஶாஸநாச்சாஸ்த்ரம் - ஶாஸநாச்சாஸ்த்ரம்" என்கிறபடியே தத்வ ஹிதங்களை அறிந்து நல்வழி போகைக்குடலாக சாஸ்த்ரத்தை ப்ரகாசிப்பித்தருளினான்; (க) "ஹார்த்தம் தமஸ்ஸதஸதீச விவேக்துமீஶோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி - ஹார்த்தும் தமஸ்ஸதஸதீச விவேக்துமீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி" என்னக்கடவதிறே.

இந்த சாஸ்த்ர ப்ரதா(ன)நமும் வாஸநாதூஷிதமாகையாலே அகிஞ்சித்கரமாக, ஓலைப்புறத்திற்செல்லாத தேசத்திலே எடுத்துவிடும்

---

தவ்யமென்கிற ஜ்ஞாநமென்கை. (வ்ருத்தமும்) என்ற வநந்தரம் "தங்களுக்குண்டாம்படி அர்த்திக்க" என்று ஶேஷம். (தாதாத்ம்யமாவது) - அபேதபுத்தி. (சேதநர்) என்றது - கீழும்மேலும் அந்வயிக்கிறது. (அஹங்கார மமகாரங்களாலே) என்றது - அஹங்கார மமகாரஹேதுவான அசித்ப்ரத்யாஸத்தியாலே யென்றபடி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (ஹார்த்து மித்யாதி). (ஸதஸதீ) - நல்லதும் தீயதும்.

(உ) "ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு யாபுத்திர்பாவிதா நருணாம் தாமேவ பஜதே ஜந்துருபதேஶோ நிரர்த்தக: - ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு யாபுத்திர்பாவிதா ந்ருணும் | தாமேவ பஜதே ஜந்து ருபதேஶோ நிரர்த்தக:" என்கிற வசநத்தையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (இந்த ஶாஸ்த்ரப்ரதாநமு மித்யாதி). (அகிஞ்சித்கரம்) என்றது - அநேக விஷயங்களில் அகார்யகரமென்றபடி. (எடுத்துவிடுகையாவது) - ஸே

---

(க) ர-ஸ்த-உ-சக. (உ)

ராஜாக்களைப்போலே ராமக்ருஷ்ணுதிரூபேண வந்தவதரித்து, (க) "வித-வ்வந நிர்லேஶாக ஹரஆஜஸ்ய ஶாஸநாக்-பித்ருவசந நிர்த்தேஶாத் பாத்வாஜஸ்ய ஶாஸநாத்" என்று- பித்ருவசந பரிபாலநாதிகளை ஆசரித்தருளியும், இளையபெருமாளை இடுவித்து, "வகுத்த விஷயத்தில் சேஷவ்ருத்தியே இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபம்" என்னுமிடத்தை ப்ரகாசிப்பித்தருளியும், (உ) "ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய- ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய" என்று கொண்டு இந்த வ்ருத்திக்கடியான பாரதந்த்ர்யத்தை ஸ்ரீபரதாழ்வானையிட்டு ப்ரகாசிப்பித்தருளியும், இப்பாரதந்த்ர்யகாஷ்ட்டையை, (ங) "ஶத்ருக்நோ நித்யஶத்ருக்ந: ஶாதேந-நீத: - கச்சதா மாதுலகுலம் பரதேந - நீத:" என்று கொண்டு ஸ்ரீசத்ருக்நாழ்வானையிட்டு ப்ரகாசிப்பித்தருளியும், க்ருஷ்ணனாய் வந்தவதரித்து தூத்யஸாரத்யங்களை ஆசரித்தருளியும், (ச) "யத்யதாசரதி ஶ்ரேஷ்ட:- யத்யதாசரதி ஶ்ரேஷ்ட்ட:" என்று-"ஶ்ரேஷ்ட்ட ஸமாசாரம் கர்த்தவ்யம்" என்று உபதேசித்தருளியும், இப்படி பஹுப்ரகாரத்தாலே ஆத்மாக்களுடைய பாரதந்த்ர்யத்தை ப்ரகாசிப்பித்தருளின விடத்திலும், பெரியவன் தாழநின்று ஆசரித்த இம்மஹா குணத்திலே (ரு) "அவஜாநந்தி மாம் மூடா: - அவஜாநந்தி மாம் மூடா:" என்கிறபடியே அநீஸ்வரத்வமாகிற தோஷத்தை ஆவிஷ்கரித்துக் காற்கடை கொள்ளுகையாலே அவையும் கார்யகரமாய்த்தில்லை. "இனி, நாம் பார்வைவைத்து ம்ருகம் பிடிப்பாரைப்போலே ஸஜாதீய

---

னையைத்திரட்டிக்கொண்டு போகை. பெருமாள் ஸாமாந்யதர்மநிஷ்ட்டரென்று தோற்றுகைக்காக (வகுத்த விஷயத்தில்) என்றது. (என்று கொண்டு) என்றது - என்று சொல்லப்பட்டுக்கொண்டிருக்கிற வென்றபடி. இளையபெருமாளை வ்யாவர்த்திக்கைக்காக (இந்த வ்ருத்திக்கடியான பாரதந்த்ர்யம்) என்றது. (இந்தவ்ருத்தி) - அசித்தைப்போலே யிருக்கை. ஸ்ரீப்ரதாழ்வானிலும் ஆதிக்யம்தோற்ற (இப்பாரதந்த்ர்ய காஷ்ட்டை) என்றது. (அவஜாநந்தி) அவஜ்ஞாம் குர்வந்தி. இத்தைப்பற்ற (காற்கடை கொள்ளுகையாலே) என்றது. "மூடா:" என்கிறத்தைப்பற்ற (கார்யகரமாய்த் தில்லை) என்கிறது. (பார்வை) என்கிறது - ம்ருகம்பிடிக்க ஸாதநமாக வைத்த ம்ருகம். "பார்வைவைத்து ம்ருகம்பிடிப்பாரைப் போலே" என்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே, ஆழ்வாருடைய அவதாரம்

---

(க) ரா-பா-க-உச. (உ) ரா-அ-அஉ-கஉ. (ங) ரா-அயோ-க-க.
(ச) கீதை-ங-உக. (ரு) கீதை-கூ-கக.

முகத்தாலே சேதநரை வசீகரிக்கவேணும்" என்று பார்த்தருளி, பெரியாழ்வாரை அவதரிப்பித்தருளினான்.

இவ்வாழ்வார், ஸஹஜதாஸ்யத்தை யுடையராகையாலே "பகவத் விஷயத்திலே கிஞ்சித்கரித்து காலக்ஷேபம்பண்ணவேணும்" என்று பார்த்தருளி, அதுசெய்யுமிடத்தில் "அவனுகந்த அடிமையே கர்த்தவ்யம்" என்று அநுஸந்தித்து, அவதாரங்களை ஆராய்ந்தவிடத்தில், கம்ஸனுக்குப் பணிசெய்துபோந்த மாலாகாரர் க்ருஹத்திலே எழுந்தருளிப் பூவை இரந்து, அவன்றான் (க) "𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌪𑌰𑌮𑍌 𑌨𑌾𑌥𑍌 𑌮𑌮 𑌗𑍇𑌹𑌮𑍁𑌪𑌾𑌗𑌤𑍌 । 𑌧𑌨𑍍𑌯𑍋𑌽𑌹𑌮𑌰𑍍𑌚𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑍀𑌤𑍍𑌯𑌾𑌹 𑌮𑌾𑌲𑍍𑌯𑍋𑌪𑌜𑍀𑌵𑌨𑌃 - ப்ரஸாதபரமௌ நாதௌ மம கேஹமுபாகதௌ - தந்யோऽஹமர்ச்ச யிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவநஃ" என்று உகந்து சூட்டச் சூடினபடியை அநுஸந்திக்கையாலே "இவ்விஷயத்துக்குப் பூவிடுகையொழிய வேறு கர்த்தவ்யமில்லை நமக்கு" என்று திருநந்தவநம் செய்கையிலே உத்யோகித்தா ரொருவரிறே.

இன்னமும், மற்றையாழ்வார்களிற் காட்டில் இவர்க்கு நெடுவாசியுண்டு;—அவர்கள், தந்தாமுடைய ஸம்ருத்திகளை எம்பெருமானாலே

---

கார்யகரமென்று தோற்றுகிறது. இத்தால் - ஶாஸ்த்ரங்களாலும் அவதாரங்களாலும் திருந்தாதாரும் ஆழ்வாராலே திருந்தினார்களென்று வைபவம் சொல்லிற்றாய்த்து.

ஆக, ஸர்வேஶ்வரன் ஆழ்வாரை அவதரிப்பித்து சேதநரை வசீகரிக்கப்பார்த்தான் என்றார் கீழ், இப்படி ஆழ்வாராலே சேதநர் திருந்துகைக்கு இவ்வாழ்வார்க்குள்ள ஏற்ற மென்னென்ன வருளிச்செய்கிறார் (இவ்வாழ்வாரித்யாதி). (உ)"ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்" என்றிருக்கையாலே, (ஸஹஜதாஸ்யத்தை யுடையராகையாலே) என்றது. (அவனுகந்த அடிமை) என்கையாலே, ஸ்வார்த்த கைங்கர்யபரரை வ்யாவர்த்திக்கிறார். (அவதாரங்களை) இத்யாதிக்குக்கருத்து - ராமாவதாரத்தில் கிஞ்சித்கரித்த ஸுக்ரீவாதிகள் ஸ்வார்த்தபரராகையாலும், இளையபெருமாள் தாமே பின்தொடருகையாலும், வாமநாவதாரத்தில் மஹாபலி, அவனிரந்தபோது நீர்வார்த்துக்கொடுத்து ஔதார்யம் பெற்றுப்போகையாலும், இவ்வபதாநத்தில், அந்யபரனான தன்னை அவனிரக்கத்தானுகந்து பூவிட்டானென்கிறது ஏற்றமிறேயென்று பூவிடுகையிலே தாமுமுத்யோகித்தாரென்று.

(ங) "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிற மற்றையாழ்வார்களிலும் இவருக்கு ஏற்ற மருளிச்செய்கிறார் (இன்னமுமித்யாதி). வாசி தன்னை உபபாதிக்கிறார் (அவர்களித்யாதி). (தந்தாமுடைய ஸம்ருத்திகள்)

---

(க) வி-பு-ரு-கக-உக. (உ) க-ங. (ங) தி-வாய்-உ-கூ-ச.

